# எட்டுத்தொகை அகஇலக்கியங்களில் பண்பாட்டுச் சிந்தனைகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி)
பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**பா.சாந்தி**
(பதிவு எண்: 1422)

நெறியாளர்

**முனைவர். கா.கணநாதன்**




**தமிழ்ப்பண்பாட்டு மையம்**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA : 3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003.

தமிழ்நாடு - இந்தியா

ஆகஸ்ட் - 2019

**முனைவர் கா.கணநாதன், எம்.ஏ., எம்.ஃ.பில், பி.எச்.டி.,**
உதவிப் பேராசிரியர்,
தமிழ்ப் பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630003.

நாள்:

**நெறியாளர் சான்றிதழ்**

**"எட்டுத்தொகை அகஇலக்கியங்களில் பண்பாட்டுச் சிந்தனைகள்"** என்னும் தலைப்பில் திருமதி. பா.சாந்தி அவர்கள் பகுதி நேர முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்காகச் செய்த இவ்வாய்வு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(முனைவர் கா.கணநாதன்),**
**நெறியாளர்**

பா.சாந்தி, (பதிவு எண்: 1422)
முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்)
தமிழ்ப் பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி

நாள்:

## ஆய்வாளர் உறுதிமொழி

**“எட்டுத்தொகை அகஇலக்கியங்களில் பண்பாட்டுச் சிந்தனைகள்”** என்னும் தலைப்பில் பகுதி நேர முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ் ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(பா.சாந்தி)**
**ஆய்வாளர்**

**உறுதிக் கையொப்பம்:**
முனைவர் கா.கணநாதன், எம்.ஏ., எம்.ஃ.பில், பி.எச்.டி.,
உதவிப் பேராசிரியர்,
தமிழ்ப் பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 630003.

# நன்றியுரை

வள்ளல் அழகப்பரின் பெயரால் அமைந்த அழகப்பா பல்கலைக்கழக தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் “எட்டுத்தொகை அகஇலக்கியங்களில் பண்பாட்டுச் சிந்தனைகள்” என்னும் தலைப்பிலான முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்த வாய்ப்பு நல்கிய அழகப்பா பல்கலைக் கழகத்தின் மாண்பமை துணை வேந்தர் அவர்களுக்கும், மதிப்பிற்குரிய பதிவாளர் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

என் ஆய்விற்கு வழிகாட்டியாக இருந்து ஊக்கமளித்து ஆய்வேட்டைச் செம்மையாக உருவாக்குவதற்கு உதவிய தமிழ்ப்பண்பாட்டு மையப் பேராசிரியர் மற்றும் இயக்குநர் முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை அம்மா அவர்களுக்கு என் உள்ளம் நிறைந்த நன்றிகள் என்றென்றும் உரியது.

என் ஆய்வின் நெறியாளராகவும் ஆய்வேட்டை சிறப்பாக நிறைவு செய்வதற்கு உதவியாகவும் இருந்த தமிழ்ப்பண்பாட்டுமைய உதவிப் பேராசிரியர் முனைவர் திரு.கா.கணநாதன் அவர்களுக்கு என் இதயம் கனிந்த நன்றி.

என் ஆய்வேடு சிறப்புற அமைவதற்கு உறுதுணையாக இருந்த புதுக்கோட்டை மாமன்னர் கல்லூரி தமிழ்த்துறைப் பேராசிரியர் முனைவர் ஆ.செந்தாமரைக்கண்ணி அவர்களுக்கு என் சிறப்பான நன்றி.

ஆய்விற்குத் தேவையான தகவல்கள் திரட்டுவதற்கு நூல்கள் கொடுத்து உதவிய அழகப்பா பல்கலைக்கழக நூலகத்திற்கும் ஆலங்குடி அரசு நூலகத்திற்கும் மனமார்ந்த நன்றி.

இவ்ஆய்வை நிறைவு செய்யப் பல வழிகளிலும் ஊன்றுகோலாயிருந்த என் வாழ்க்கைத் துணைவர் திரு.மு.கண்ணன், மகன் க.சா.மாதவன் மகள் க.சா.தாட்சாயணி மற்றும் ஆய்வேட்டை நிறைவு செய்வதற்கு தூண்டுகோலாயிருந்த நான் பணியாற்றும் பிஷப் பாக்கியம் ஆரோக்கியசாமி கல்வியியல் கல்லூரி இயக்குநர், பேராசிரியர். திரு. அ. அந்தோணிசாமி, முதல்வர் மற்றும் உதவிப்பேராசிரியர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றி.

எனது ஆய்வினை மிகச் சிறப்பாகத் தட்டச்சு செய்து தந்த சகோதரி ப.கீதாவிற்கும், எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**பா.சாந்தி**

# பொருளடக்கம்

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்:

| | | |
|---|---|---|
| அகநா. | -- | அகநானூறு |
| உ.ஆ. | -- | உரையாசிரியர் |
| ஐங்குறு. | -- | ஐங்குறுநூறு |
| கலித். | -- | கலித்தொகை |
| க.வாழ்த்து. | -- | கடவுள் வாழ்த்து |
| குறள். | -- | திருக்குறள் |
| குறுந் | -- | குறுந்தொகை |
| சிலப். | -- | சிலப்பதிகாரம் |
| திருமுருகு. | -- | திருமுருகாற்றுப்படை |
| தொல். | -- | தொல்காப்பியம் |
| தொல்.கற்பு | -- | தொல்காப்பியம் கற்பியல் |
| தொல்.களவு | -- | தொல்காப்பியம் களவியல் |
| நற். | -- | நற்றிணை |
| நூ. | -- | நூற்பா |
| நெடுநல். | -- | நெடுநல்வாடை |
| ப. | -- | பக்கம் |
| பக். | -- | பக்கங்கள் |
| பா. | -- | பாடல் |
| பரி. | -- | பரிபாடல் |
| பெரும்பாண். | -- | பெரும்பாணாற்றுப்படை |
| மதுரைக். | -- | மதுரைக்காஞ்சி |
| மொ.பெ. | -- | மொழிப்பெயர்ப்பு |
| P. | -- | Page |
| PP. | -- | Pages |

# எட்டுத்தொகை அக இலக்கியங்களில் பண்பாட்டுச் சிந்தனைகள்

## முன்னுரை

உலக இலக்கிய வரிசையில் சிறப்பிடம் பெற்று அறிவுக் கருவூலமாகவும் பழந்தமிழர் தம் ஆவணமாகவும் திகழ்வது சங்க இலக்கியமாகும். இச்சங்க இலக்கியம் இருபெருந்தொகை நூல்களாகப் பகுக்கப்பட்டு எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என விளங்குகின்றன. மக்களைப் பண்படுத்துவது பண்பாடு, அவ்வகையில் எட்டுத்தொகை அகஇலக்கியங்களில் பண்பாட்டுச் சிந்தனைகள் இடம்பெற்றிருக்கும் முறையை எடுத்துரைப்பது சாலச் சிறந்தது.

**ஆய்வுத் தலைப்பு:**

அக இலக்கியங்களில் காணலாகும் பண்பாட்டுக் கூறுகளை ஆராயும் நோக்கில் "எட்டுத்தொகை அக இலக்கியங்களில் பண்பாட்டுச் சிந்தனைகள்" என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வின் நோக்கம்:**

சங்ககால மக்கள் குடும்பத்தில், சமுதாயத்தில், தொழில் நிலையில், கலைகளை வெளிப்படுத்திய நிலைகளில் பண்பாட்டுச் சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ள பாங்கை ஆராய்வது நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை:**

எட்டுத்தொகை அகநூல்களில் இடம்பெற்றுள்ள 1850 அகப்பாடல்கள் மட்டும் இவ்வாய்விற்கு எல்லையாகும்.

**கருதுகோள்:**

மனித இனம் என்று தோன்றியதோ அன்றே பண்பாடும் தோன்றிவிட்டது. ஆதலால் மனிதனால் படைக்கப்பட்ட இலக்கியங்களில் பண்பாட்டுக் கூறுகள் இடம்பெற்றிருக்கும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வு அணுகுமுறை:**

எட்டுத்தொகை அகநூல்களில் பண்பாடு பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகளைத் தொகுத்து வகைப்படுத்தும் நிலையில் பகுப்பாய்வு அணுகுமுறையும் அக்கால மக்களின் பண்பாட்டு நிலையை ஆராயும் நிலையில் வரலாற்றியல் செய்திகளை விளக்குகின்ற நிலையில் விளக்கமுறை அணுகுமுறையும் இவ்வாய்வில் ஆய்வு அணுகுமுறைகளாக மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு ஆதாரங்கள்:**

சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகையில் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, கலித்தொகை, ஐங்குறுநூறு போன்ற அக இலக்கிய நூல்கள் அனைத்தும் முதன்மைச் சான்றாதாரங்களாகும் (Primary Sources). எட்டுத்தொகை அகநூல்கள் பற்றி வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், ஆய்வுக் கட்டுரைகள், இதழ்கள், பண்பாடு தொடர்பான நூல்கள் அனைத்தும் துணைமைச் சான்றாதாரங்களாகும்.

**இயல் பாகுபாடு:**

எட்டுத்தொகை அக இலக்கியங்களில் பண்பாட்டுச் சிந்தனைகள் என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை

1. குடும்பச் சூழலில் பண்பாட்டுச் சிந்தனைகள்
2. சமுதாயச் சூழலில் பண்பாட்டுச் சிந்தனைகள்
3. தொழில் நிலையில் பண்பாட்டுச் சிந்தனைகள்
4. கலைகள் வெளிப்படுத்தும் பண்பாட்டுச் சிந்தனைகள் என்பனவாகும்.

குடும்பச் சூழலில் பண்பாட்டுச் சிந்தனைகள் என்னும் இயலில் களவு மற்றும் கற்பு வாழ்க்கையில் நிகழும் செயல்பாடுகள், மக்கட்பேற்றின் சிறப்பு பெண்களின் செயல்பாடுகள் ஆகியவை ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளன.

சமுதாயச் சூழலில் பண்பாட்டுச் சிந்தனைகள் என்னும் இயலில் சங்ககால மக்களின் பழக்கவழக்கங்கள் குறித்தும் நம்பிக்கைகள் விழாக்கள், விளையாட்டுகள் அளவைகள் குறித்த செய்திகள் ஆராயப் பெற்றுள்ளன.

தொழில் நிலையில் பண்பாட்டுச் சிந்தனைகள் என்னும் இயலில் திணை அடிப்படையில் மக்கள் செய்த தொழில்கள் வாணிகம், பண்டமாற்று முறைகள் போன்றவை குறித்தும் அதைச் செய்யும் தொழிலாளர்கள் குறித்தும் ஆராயப் பெற்றுள்ளன.

கலைகள் வெளிப்படுத்தும் பண்பாட்டுச் சிந்தனைகள் என்ற இயலில் இசை, நாடக, கூத்துக் கலைகள் மற்றும் இசைக் கலை சிற்பக்கலை,

ஓவியக்கலை சோதிடக்கலை, நெசவுக்கலை, தையல்கலை போன்ற பல கலைகளைப் பற்றியும் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளது.

நான்கு இயல்களிலும் கண்டறிந்த செய்திகள் முடிவுரையில் கூறப்பட்டுள்ளன. இதனையடுத்து துணைநூற்பட்டியலும் பின்இணைப்புகளும் இடம்பெற்றுள்ளன.

# இயல்-1

## குடும்பச் சூழலில் பண்பாட்டுச் சிந்தனைகள்

தனி மனிதக் கட்டமைப்பினுடைய முதன்மையான வளர்ச்சி நிலையே குடும்பமாகும். பெற்றோரும் குழந்தைகளும் ஒரே வீட்டில் கூட்டாக வசித்துக் கொண்டு தங்களுக்குள் அனைத்தையும் பகிர்ந்து கொள்ளும் இடமாகவும் குடும்பமானது செயல்படுகிறது. உணர்வுகளாலும் உடலாலும் ஒன்று கலந்த உறவுகள் காணப்படும் இடமாகவும் குடும்பங்கள் திகழ்கின்றன. பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தோன்றிய ஆதி மனிதனின் வாழ்க்கை முறையிலிருந்து தமிழ் மக்களின் வாழ்க்கை முறை செம்மைப்படுத்தப்பட்டுவிட்டது. ஒரு சில நெறிமுறைகளுக்கு உட்படுத்தப்பட்ட குடும்ப வாழ்வானது இதன் விளைவாகத் தோன்றியதாகும்.

ஓர் ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழும் இடம் குடும்பமாகும். அந்தக் குடும்பத்தில் இணையும் ஆணும், பெண்ணும் எங்கிருந்தோ வந்தவர்களாகவும் உறவுடையவர்களாகவும் இருப்பர். இரத்த உறவுகளால் பின்னிப் பிணைந்த அமைப்பே குடும்ப அமைப்பாகும்.

குடும்பம் என்பதற்கு இணையான “Family” என்ற ஆங்கிலச் சொல் “Fumulus” என்ற இலத்தீன் சொல்லுக்கு ரோமானிய வழக்கில் தலைவன் தனக்குக் கீழ் மனைவி, குழந்தைகளை வைத்துப் பாதுகாத்ததைக் குறிக்கக் கூடியதாகும்.

“நல்லதொரு குடும்பம் பல்கலைக்கழகம்” என்ற கூற்றுக்கு இணங்க, சமுதாய உறுப்பினர்களுக்கு மிகப்பெரிய பாதுகாப்பு மையமாகவும் மற்றும் சமூக செயல்களைப் பழக்கப்படுத்திக் கொள்ளும் தொழிற்சாலையாகவும் குடும்பம் செயல்படுகிறது.

குடும்பத்தில் குழந்தைகள் பெறுதல், அன்பு செலுத்துதல், பராமரித்தல், பாதுகாத்தல் போன்ற செயல்கள் முக்கிய அங்கம் வகிக்கின்றன. பெற்றோரும் குழந்தைகளும் ஒரே வீட்டில் கூட்டாக வசித்துக்கொண்டு தங்களுக்குள் அனைத்தையும் பகிர்ந்து கொள்வது குடும்பம் எனப்படும்.

சமுதாயத்தின் அடிப்படை அலகு குடும்பம் ஆகும். குழந்தைகளும் பெற்றோரும் மட்டும் உள்ள குடும்பம் தனிக்குடும்பம் ஆகும். குழந்தைகள் பெற்றோர், தாத்தா, பாட்டி மற்றும் நெருங்கிய உறவினர்களுடன் சேர்ந்து வாழும் குடும்பம் கூட்டுக்குடும்பம் ஆகும். மகிழ்ச்சியான குடும்பம் ஆரோக்கியமான நல்வாழ்விற்கு அடிப்படையாக அமையும் பல குடும்பங்கள் இணைந்து சமூகத்தையும் பல சமூகங்கள் இணைந்து சமுதாயத்தையும் உருவாக்குகின்றன.

குடும்பம் என்பது இரத்த உறவினாலோ அல்லது திருமண பந்தத்தினாலோ, சுவீகாரம் போன்ற வேறு சட்டப்பூர்வமான முறைகளிலோ தொடர்புடைய ஓர் உறைவிடக் குழுவாகும். பல சமுதாயங்களில் குடும்பம் என்பது மேற்குறிப்பிட்ட காரணங்களால் மட்டுமின்றி வேறு கருத்துகளினால் ஒன்றுபட்டிருந்தால் குடும்பம் என்பது பல வேளைகளில் பெரிய மனிதக் குழுவை உள்ளடக்கும் ஒரு உருவகமாகவும் பயன்படுவதைக் காணலாம். எடுத்துக்காட்டாக சமூகம், சுற்றம், நாடு, மனிதகுலம் போன்றவையும் குடும்பம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். அனைத்துலக மனித உரிமைகள் சாசனத்தின் 16(3) ஆவது விதிப்படி, “குடும்பம் என்பது சமூகத்தின் இயல்பானதும் அடிப்படையானதுமான குழு அலகாகும் என்பதுடன், அது சமூகத்தாலும் தேசத்தாலும் பாதுகாக்கப்படுவதற்குத் தகுதி பெற்றுள்ளது.[1] நெருங்கிய குடும்பம் என்பது வாழ்க்கைத் துணைவர், பெற்றோர், உடன் பிறந்தோர், மகன்கள், மகள்கள் ஆகியோரை உள்ளடக்கும். இவர்களோடு பெற்றோர்களின் உடன் பிறந்தோரும் ஒன்றுவிட்ட உடன் பிறந்தோர்கள் மருமக்கள் போன்றோரும் சேர்ந்து குடும்ப உறுப்பினர்கள் ஆகின்றனர்.

குடும்பமானது பெரும்பாலான சமுதாயங்களில் குழந்தைகள் சமுதாயச் செயல்களில் ஈடுபடுவதற்கு முதன்மை நிறுவனமாக விளங்குகிறது. குழந்தைகளைப் பொறுத்த வரையில், குடும்பமானது குடும்ப அமைப்புக்கான ஒரு வழிகாட்டுதலையும் அறிமுகத்தையும் வழங்கும் இடமாகத் திகழ்கிறது. அதே நேரத்தில் பெற்றோரைப் பொறுத்த வரையில் தங்கள் குழந்தைகளை சமுதாயம் போற்றக் கூடிய அளவில் உருவாக்கி சமுதாயத்துடன் அவர்களை ஒன்றிணைக்கும் இடமாக நினைக்கின்றனர்.

குடும்பம் என்னும் சொல் கூடல் என்னும் பொருள் கொண்ட குல் என்னும் வேர்ச்சொல்லின் அடியாகப் பிறந்தது. குல் →குள்→ குழு என மாற்றம் பெறும் குழு என்பது கூட்டம் என்ற பொருளைத் தரும்.[2]

குழு → குழும்பு → குடும்பு → குடும்பம் என்றவாறு குடும்பம் என்னும் சொல் பெறப்படுகிறது. இது பெற்றோரும் பிள்ளைகளும் சேர்ந்த கூட்டம் என்ற பொருள் தருகிறது.[3]

கணவன் -மனைவி உறவு, பெற்றோர் - பிள்ளைகள் உறவு, உடன்பிறந்தவர்களுக்கு இடையில் ஏற்படும் உறவு போன்ற அம்சங்களின் அடிப்படையில் எல்லாவகைக் குடும்பங்களும் ஒரே இயல்புகளாக இருந்தாலும் வேறு பல செயல்பாடுகளின் அடிப்படையில் பல்வேறு பிரிவுகளாக அமைகின்றன.

குடும்பங்களின் அமைப்பைக் கருத்தில் கொண்டு அவற்றை,

1. மண வழிக் குடும்பம் (Conjugal Family)
2. தனிக்குடும்பம் (Nuclear Family)
3. விரிந்த குடும்பம் (Extended Family) என வகைப்படுத்தலாம்.

**மார்கனின் குடும்பம் பற்றிய கருத்துக்கள்**

அமெரிக்க மானிடவியல் அறிஞர் லூவி ஹென்றி மார்கன்(1818–1881),மனிதப் பண்பாட்டில் குடும்பத்தின் ஐந்து வளர்ச்சிப் படிநிலைகளைக் குறிப்பிடுகின்றார். அவை:

**1.இரத்த உறவுக் குடும்பம்:**

இரத்த உறவுக் குடும்பம் (Consanguine Family) எனப்படுவது,ஒரே தலைமுறையைச் சேர்ந்த அண்ணன் தம்பியர் அவர்தம் சகோதரிகளை மணமுடிப்பதாகும்.

**2.குழுமணக் குடும்பம்:**

ஓர் இரத்தக் குழுவைச் சேர்ந்த அண்ணன் தம்பியர்,பிறிதோர் இரத்தக் குழுவின் அக்காள் தங்கையரை மணந்து கொள்வது குழுமணக் குடும்பம் (Punaluan Family) ஆகும்.

**3.நிரந்தரமற்ற குடும்பம்:**

நிரந்தரமற்ற குடும்பம்(Syndiasmian Family) குழுமணமுறை,ஒரு துணை மணமுறை ஆகியவற்றிற்கு இடைப்பட்ட மணமுறையினைக் கொண்டது. இவ்வகைக் குடும்ப முறையில் கணவர் மனைவி இருவரும் அவர்கள் விரும்பும்போது மணவிலக்குபுரிந்து கொண்டு வேறு துணையுடன் வாழ முற்படுவர். ஒரே துணையுடன் வாழும்போதும் இவர்களுக்கிடையில் பந்தம் இருப்பதில்லை.

**4.தந்தை தலைமைவழிக் குடும்பம் (Patriarchal Family):**

தந்தை தலைமைவழிக் குடும்பத்தில் (Patriarchal Family) ஆண்களிடம் குடும்பத்தின் எல்லாவிதமான அதிகாரங்களும் பொறுப்புகளும்

குவிந்திருக்கும்.தொடக்கக் கால உரோமானியர்களும் எபிரேயர்களும் இம்முறையைப் பின்பற்றினார்.

## 5.ஒரு துணைமணக் குடும்பம்(Monogamian Family):

ஒரு துணைமணக் குடும்ப (Monogamian Family) மணமுறையானது அண்மைக்கால தனிக்குடும்ப முறையை ஒத்ததாகும். கணவன்/மனைவி ஒரு துணையுடன் வாழும் குடும்ப முறையாகும்.

### குடும்ப உறுப்பினர்கள்:

தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலித்தாய் ஆகியோர் இலக்கியங்கள் காட்டும் குடும்ப உறுப்பினர்களாவர். குடும்பப் பிணைப்புகளை மானிடவியலார் நான்கு வகையாகப் பிரிப்பர், அவை,

1. கணவன் - மனைவி பிணைப்பு
2. பெற்றோர் - மக்கள் பிணைப்பு
3. ஒரே பெற்றோருக்குப் பிறந்த மக்களிடையே பிணைப்பு
4. ஒரு குடும்பத்தாருக்கும் மற்றவர்களுக்கும் இடையே நிலவும் பிணைப்பு

“ஒரு குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் குடும்பம் என்னும் அமைப்பில் வாழ்க்கைக்காக மேற்கொள்ளப்படும் உயிரியல் பிணைப்புகளை மட்டும் கொண்டவர்களாக அன்றி சமுதாயப் பிணைப்புகளைக் கொண்டவர்களாக உள்ளனர்”(4) இப்படிப்பட்ட குடும்ப உறவுகளால் தான் சமுதாயம் இயங்குகிறது. ‘‘குடும்பம் ஒரே இடத்தில் உறுப்பினர்கள் சேர்ந்து வாழ்கின்ற ஓர் உயிரினப் பிரிவாகும். பெற்றோர்களிருவரும் ஒரு நிறுவப்பட்ட முறையில் இணைந்து சமூக உறவுகளிலும் பாலினப் புணர்ச்சியிலும் ஈடுபடுகின்றனர். இதன் மூலம் உறவுமுறைப் பெயர்கள் தீர்மானிக்கப்படுவதுடன் சொத்துரிமை, தாயம் போன்றவற்றின் முறையும்

தீர்மானிக்கப்படுகின்றன''[5], என்பது சமூகவியலாரின் கருத்தாகும். இது உறவுகளின் தொடக்கத்தைக் காட்டுவதாக அமைகிறது.

குடும்ப உறவுகளில் முதன்மையானவள் தாய். குடும்ப உறுப்பினர்களில் தலைமைப் பொறுப்பில் இருந்து ஒரு ஆண்மகனுக்குரிய கடமைகளைச் சரியாகச் செய்பவர் தந்தை. தாயும், தந்தையும் இணைந்து குடும்ப வாழ்க்கை நடத்துவதன் மூலமாக குழந்தைச் செல்வத்தைப் பெறுகின்றனர். அவ்வாறு பெறும் குழந்தையானது ஆணாக இருந்தால் மகன் எனவும், பெண்ணாக இருந்தால் மகள் எனவும் போற்றி வளர்க்கப்படுகின்றனர்.

இவ்வாறாக அமைகின்ற குடும்பச் சூழலினைப் பின்வருமாறு பகுத்துக் காணலாம்.



குடும்பம்
அகவாழ்க்கை முறை
பெண்களின் செயல்பாடு
காதல்(களவு)
திருமணம் (கற்பு)
மக்கட் பேறு
1. களவின் இயல்பு
2. களவிற்கான காரணம்
3. களவில் ஏற்படும் இன்பம், துன்பம்
4. உடல் மாறுபாடு
5. வரைவு கடாய வற்புறுத்தல்
6. களவில் அலர் தூற்றப்படுதல்
7. ஆற்றியிருத்தல்
8. உடன்போக்கு
1. கற்பின் இயல்பு
2. திருமணம்
3. திருமணத்தைக் குறிக்கும் சங்க இலக்கியச் சொற்கள்
4. திருமண வகைகள்
5. திருமணப் பொருத்தங்கள்
6. திருமணத்தில் தாலி
7. சோதிடம் பார்த்தல்
8. நிமித்தம் பார்த்தல்
9. சிலம்பு கழி நோன்பு
10. மண நிகழ்வு
11. தீ வலம் வருதல்
1. மக்கட் பேற்றின் பயனும் சிறப்பும்
2. மழலையின் மொழி
3. அன்பு மிளிர்தல்
4. ஊடல் தீர்க்கும் வாயில்
5. குடிப் பெருமை
1. இல்லறப் பண்பு
2. ஆடவர் மகளிர் அறம்
3. கணவனைப் பேணுதல்
4. குடும்பம் நடத்தும் பாங்கு
5. உணவு சேகரித்தல்
6. நெல் குற்றல்
7. ஈகையும் பொருளும்
8. சுற்றம் போற்றல்
9. விருந்தோம்பல்

## 1.1. காதல்(களவு):

கருத்து வளமும், கற்பனைச் சிறப்பும் பொருந்திய பாடல்கள் சங்கப்பாடல்கள், ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழா் வாழ்ந்த வாழ்க்கையின் சிறப்பினை விளக்குனவாக உள்ளன. மனிதனை ஆட்டிப் படைக்கும் ஆற்றல் கொண்டவை பசியும், காதலும் ஆகும். எனவே இவ்விரண்டும் சங்க காலப் புலவரின் பாடுபொருளாயின. ஒத்த தலைமகனும், தலைமகளும் உள்ளம் ஒன்றுகூடி வாழும் வாழ்க்கையைக் கூறக்கூடிய பாடல்கள் அகவாழ்வின் சிக்கல்களைக் கூர்ந்து நோக்கிப் புலவர்கள் அவற்றைக் களைய முற்பட்டமையைப் பற்றி அறியக் கூடியவையாக அமைகின்றன.

காதல் என்பது புனிதமானதும், இயற்கையான உணர்வினால் தூண்டப்படுவதும் ஆகும். பசியெடுத்தால் உணவு உண்பதும், தாகம் எடுத்தால் தண்ணீர் அருந்துவதும் போன்றது தான் காதல் என்ற உணர்வும் ஆகும். இருப்பதை அல்லது இருப்பதாகத் தான் நம்புவதை அல்லது இருக்க வேண்டுமென விரும்புவதைச் சொல்ல நிற்பனவே இலக்கியங்கள், இலக்கியம் பாடிய புலவர்கள் இருப்பதையும் இருக்க வேண்டியதையும் தெளிவாக அறிந்து பாடியுள்ளனர்.

சங்க அக இலக்கியப் பாடல்களில் தலைவன், தலைவியின் காதல்நிலை, தலைவி காதல் வயப்பட்ட பின் தலைவன் இன்றி வாழ இயலாத சூழல், தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் செல்ல மணமில்லாத தலைவன், காதல் கொள்வதற்கு ஏற்ற இடமாகத் திணைப்புனம் அமைதல் தலைவன் மீது தலைவி கொண்ட அசைக்க முடியாத ஆழமான உண்மையான காதல், பிறவி

தோறும் தொடரும் காதல் என காதல் பல நிலைகளில் பரிணமித்துப் பண்பாட்டுக் கூறுகளில் மிக முக்கியமான ஒன்றாக இடம்பெற்றுள்ளது.

திருமணத்திற்கு முந்தைய காதல் வாழ்க்கையானது களவு என்று அழைக்கப்படுகிறது. ''முன் பின் அறியாத ஓர் ஆணும், பெண்ணும் திடீரென ஒருவரோடு ஒருவர் சந்திக்கின்றனர். இருவரும் மணமாகாதவர்கள். ஒத்த உருவமும் ஒத்த பருவமும் ஒத்த நிலைமையும் உடையவர்கள் இருவர் கண்களும் ஒன்றுபடுகின்றன. உள்ளத்தாலும் ஒன்றுப்படுகின்றன. பின்னர் இருவரும் இரவிலும், பகலிலும் அடிக்கடி சந்தித்து அகமகிழ்கின்றனர். இவர்களுடைய சந்திப்புக்குத் தோழி துணை செய்வாள். இந்த நிகழ்ச்சிக்குக் களவு மணம் என்று பெயர்''(6).

இக்களவு மனத்திற்கு அடிப்படையான முதல் சந்திப்பைப் பற்றி ஒரு அகநானூற்றுப் பாடல் அழகாக எடுத்துரைக்கிறது. பூக்கள் நிறைந்த மலைச்சாரலிலே என் தோழிமார்களுடன் வேங்கை மலர் கொய்வதற்காகப் போனோம். புலி, புலி என்று ஆரவாரித்துக்கொண்டே வேங்கை மலரைப் பற்றிக் கொண்டிருந்தோம். இந்த ஓசையைக் கேட்டவுடன் கண்களைப் போன்ற ஒளிபொருந்திய செங்கழுநீர் மாலையைத் தோளிலே அணிந்தவன். தலையின் பக்கத்திலே செம்மணி மாலையை அணிந்தவன், மார்பிலே செஞ்சந்தனம் பூசியவன், வரிந்து கட்டிய வில்லிலே ஒரு அம்பைத் தொடுத்தவன். நீங்கள் சொல்லிய புலி யாது? அப்புலி எத்திசையிலே சென்றது'' என்று கேட்டுக்கொண்டே எங்கள் எதிரில் வந்து நின்றான்''(7) வந்து நின்ற அவன் அழகிய நெற்றியை உடையவர்களே, அழகுள்ளவர்களே உங்கள் வாயினால் பொய் சொல்லலாமா எனக் கேட்டான்.

காதலை இலக்கிய உலகம் போற்றுகிறது. அதைச் சமுதாயம் எதிர்க்கிறது. திணைப்புனங்களிலும் வயல்வெளிகளிலும், கடற்கரைகளிலும், மேய்ச்சல் இடங்களிலும், இளைய உள்ளங்களிடையே இயல்பாக எழுகின்ற காதல் உணர்வினை அவர்கள் சந்திப்பின் இனிமையைச் சமுதாயம் எதிர்த்தது. ஆயினும் இலக்கிய அழகிற்காகவும், மனித மனத்தின் குறிக்கோள் அடைவுக்காகவும். இதனைப் புலவர்கள் போற்றி உள்ளனர். காதல் வாழ்வில் குறிப்பாக மகளிர் அடைந்த துன்பங்களைக் கண்ட அறிவுடைய புலவர்கள் அவர்கள் மேல் ஒரு பரிவு கொண்டு பாடினர் என்றும் எண்ணத் தோன்றகிறது. இவ்வாறு அகப்பாடல்களில் காணலாகும் காதல் மகிழ்வுக் காதலாகவும் துயரக் காதலாகவும் சூழலுக்கேற்ப அமைந்து காணப்படுகிறது.

**களவின் இயல்பு:**

களவின் இயல்பினைத் தொல்காப்பியம்
"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக் கூட்டம் காணுங்காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமயோர் இயல்பே" **(8)**

களவு என்பது இன்பம் கருதி பொருளால் சிறப்புற்று அறவழியில் நடப்பது. இருவரின் ஒத்த அன்போடு இணைந்தது. ஐந்திணையுள் காமக் கூட்டமாகிய களவை ஆராயுமிடத்து அது மறையோர் வழக்காகிய நூல்களில் எட்டுவகை மணத்துள் இசைத்துறையில வல்ல நல்ல யாழை ஏந்திய என்றும் பிரியாத சோடிகளாகிய கந்தருவரது மணம் போன்றதாகும்.

நல்வினைக்கண் நிகழ்ந்த ஊழினது ஆணையினால் பிறப்பு முதலிய பத்துக் குணங்களினாலும் ஒன்றுபட்ட கிழவனும், கிழத்தியும் எதிர்படுவர் என களவிற்குரிய காரணத்தை தொல்காப்பியம்[(9)] எடுத்துரைக்கிறது.

## 1.2. களவில் ஏற்படும் இன்பம், துன்பம்:

உருவத்திலும், பருவத்திலும் ஒத்த ஆணும் பெண்ணும் ஒரு மலைச்சாரலில் சந்தித்து ஒருவர் மீது ஒருவர் அன்பு கொண்டு காதலனும், காதலியுமாக ஆன நிலையில் காதலன் தன்னைக் கைவிட்டுவிடுவானோ என நினைத்த காதலியின் உள்ளக்குறிப்பை உணர்ந்த தலைவன் அவள் மனக்கவலை அகலும்படி கூறுவதைக் குறுந்தொகைப் பாடல் அழகாக எடுத்துரைக்கிறது.

‘‘யாயும் ஞாயும் யார் ஆகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைகேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல் நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே’’ (குறுந்.40:1-5)

வெவ்வேறு இடங்களில் பிறந்த தலைவனும், தலைவியும் காதல் கொண்டு கருத்தொருமித்து ஒன்றுபடுகின்றனர். இருவருடைய பெற்றோரும் ஒருவரை ஒருவர் அறிந்தது இல்லை. இருப்பினும் முன் பின் தொடர்பே இல்லாத இவர்கள் காதலில் ஒன்றுபட்ட நிலையானது எவ்வாறு இருக்கிறது எனில் செம்மண் நிலத்தில் பெய்த மழைநீர் எவ்வாறு அந்நிலத்தில் உள்ள மண்ணோடு கலந்து அம்மண்ணின் நிறத்தினைப் பெறுகின்றதோ அதைப்போன்று அன்புடைய நெஞ்சங்கள் இரண்டும் ஒன்று கலந்தமையை இப்பாடல் தெளிவாக எடுத்துரைக்கிறது.

மேலும், தம் தலைவன் நிலைத்த சொல்லை உடையவர், நீண்ட நாள் இனிமையிருக்கச் செய்பவர் என் தோளை என்றும் பிரிய அறியாதவர் என்கிறாள் தலைவி,

‘‘நின்ற சொல்லர் நீடுதோறு இனியர்
என்றும் என் தோள் பிரிவு அறியலரே
தாமரைத் தன் தாது ஊதி மீமிசைச்
சாந்தில் தொடுத்த தீம் தேன் போல’’ (நற்.1:1-4)

தாமரையின் குளிர்ந்த தாதினை வண்டு ஊதி, மலைமேலுள்ள சந்தன மரத்தில் இனிய தேனை சேர்த்து வைக்கும். அத்தேன் போல் அவ்உயர்ந்தோர் நட்பு உயர்வுடையது. நீர் இல்லாமல் உலகம் வாழமுடியாது. இதுபோல அவர் இல்லாமல் என்னால் வாழ முடியாது என குறிஞ்சி நிலத் தலைவி தன் காதலை வெளிப்படுத்துகிறார்.

நேற்றைய பொழுதில் அழகிய மணி அணிந்த பூணினை அணிந்த ஒருவன் திணைப்புனத்திற்கு வந்தான். வந்தவன் பணிவான சொற்களைப் பேசி என் பிடரியைத் தழுவிக் கொண்டான். என் தோளைத் தழுவுவதற்கு இன்றும் அவ்விடம் வருவான் எனத் தலைவி கூறுவதன் மூலம் தலைவனும், தலைவியும் காதல் கொள்வதற்கு ஏற்ற இடமாக திணைப்புனம் இருந்துள்ளமை தெளிவாகிறது.

“நெருநல் எல்லை ஏனல் தோன்றி
திருமணி ஒளிர்வரும் பூணன் வந்து
புரவலன் போலும் தோற்றம் உறழ்கொள
இரவல் மாக்களின் பணிமொழி பயிற்றி
சிறுதினைப் படுகிளி கடீ இயர்” (அகநா.32:1-5)

தலைவனானவன் தலைவியைப் பார்க்க நாள்தோறும் காலை, மாலை என்ற இரு வேளையிலும் வந்து சென்றான். அதனை அறிந்த தோழி ஒரு நாள் தலைவியைப் பகற்குறியிடத்தே போய் விடுவதற்காகச் சொல்லும் பொழுது, அங்கு வந்த தலைவனிடம் எங்களால் காக்கப்பட்டு வந்த தினையானது முதிர்ந்து அறுக்கப் பெறும் நிலைக்கு வந்து விட்டது. அதனால் தலைவியானவள் இனிமேல் தினைப்புனம் காக்க வரமாட்டாள் எனத் தோழி கூறுகிறாள். இதனை

‘‘ஏனலும் இறங்கு குரல் இறுந்தன; நோய்மலிந்து
ஆய்கவின் தொலைந்த, இவள் நுதலும் நோக்கி
ஏதில மொழியும் இவ்ஊரும் ஆகலின்’’ (அகநா.132:1-3)

என்னும் அடிகள் விளக்கும்.

நற்றிணையில் குறிஞ்சி நிலத் தலைவி, தான் தலைவனுடன் கொண்ட நட்பின் உயர்வினைப் பற்றி

‘‘நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆர் அளவின்றே சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே’’ (குறுந்.3:1-4)

என்கிறது.

பூமியைக் காட்டிலும் அகலமானது வானைக் காட்டிலும் உயர்ந்தது. கடலைக் காட்டிலும் அளத்தற்கரிய ஆழமுடையது என்றுரைப்பதன் மூலம் அவளது காதல் உள்ளம் தெள்ளத் தெளிவாக புலவரால் காட்டப்பட்டுள்ளது.

தலைவன் செய்த கொடுமையினை மறந்து அவன் மார்பானது குளிர்ந்த துயிலை மேற்கொள்ளும் தன்மை உடையது எனத் தலைவி கூறுவதன் மூலம் அவள் தலைவன் மேல் கொண்ட காதல் புலனாகிறது.

"அணித் துறை ஊரண் மார்பே
பனித் துயில் கொள்ளும் இன்சா யற்றே" (ஐங் : 14: 3-4)

தலைவனுடைய பிரிவினைத் தாங்கும் ஆற்றல் இல்லாத தலைவியானவள் தோழியிடம் தன் மனநிலையைக் கூறுகிறாள். மயில் அடைகாத்தற்குரிய முட்டையானது பாறையில் தனித்துக் கிடந்ததால், குரங்குக் குட்டிக்கு உருட்டி விளையாடும் விளையாட்டுப் பொருளானது. அதே போன்று தலைவனாவன் என்னைப் பிரிந்து பொருளீட்டச் சென்றுள்ளான். அதனால் ஊராரின் பழிச் சொல்லிற்கு ஆளாக வேண்டியுள்ளது என்று தலைவனின் பிரிவை நினைத்து வருந்துகிறாள்.

''கான மஞ்ஞை அறைஈன் முட்டை
வெயில் ஆடு முசுவின் குருளை உருட்டும்
குன்ற நாடன் கேண்மை என்றும்
நன்றுடன் வாழி தோழி'' (குறுந்.38: 1-4)

மற்றொரு பாடலில் மாணைக் கொடியானது அதன்மீது படர்ந்து பற்றுக் கோட்டினைப் பெறாமல் தூங்கும் யானையைத் துறுகல்லாக எண்ணி அதன்மேல் படர்ந்தது. பின் அந்த யானை எழுந்து போன பின் பற்றுக்கோடின்றித் துன்புற நேர்ந்தது போன்று தலைவனுடன் சேர்ந்திருந்த தலைவி அவன் பிரிந்த உடன் வருந்துவதைப் போன்றிருந்தது.

''துறுகல் அயலது மாணை மாக்கொடி
துஞ்சு களிறு இவரும் குன்றநாடன்
நெஞ்சு களனாக, 'நீயலென் யான்'' என
நற்றோள் மணந்த ஞான்றை''(குறுந்.36:1-4)

என்ற பரணர் பாடலின் மூலம் தலைவியின் நிலையை உணர முடிகிறது.

தலைவன் பிரிவின் பொழுது தலைவியிடம் தெரிவிக்காமல் சென்றுவிட்டான். அவ்வாறு அவன் சென்றது எனக்கு எப்படியிருக்கிறது என்றால் இருவர் தங்களுடைய ஆற்றலை வெளிப்படுத்த நினைக்கும் பொழுது, ஒருவரை நல்ல பாம்பு கடித்தால் எவ்வாறு துன்பமடைவோமோ அதே போல தலைவனின் பிரிவை எண்ணி என் மனமானது கலக்கமடைந்துள்ளது எனத் தலைவி தோழியிடம் கூறுகிறாள்.

தலைவி மேல் காதல் கொண்ட தலைவன் பெதும்பைப் பருவத்தாள் ஒருத்தியைக் கனவில் மணந்து கொள்கிறான். அதனை அறிந்த தலைவி தலைவனிடம் கேட்கிறாள். அவன் இல்லை என்று மறுக்கிறான். தான் அவளைப் புனலாடச் சென்ற போது கண்டதாகவும் அவள் நின்னால் கொள்ளப்பட்ட பெண்ணே என்றும் கூறுகிறாள்.

### 1.3. உடல் மாறுபாடு:

களவொழுக்கத்தில் தலைவன், தலைவியின் இல்லத்து வெளிப்புறத்து வந்திருந்தான். அவனுக்கு உணர்த்தும் பொருட்டு, தலைவியின் தாயிடம் என் உயிர், என் உடலை விட்டுப் போவதானாலும் போகட்டும், அழகிய நெய்தல் மலரைப் போன்ற நின் மகளின் மை பூசப் பெற்ற கண்ணில் உள்ள பசலைக்குக் காரணம், அவள் மலைநாடனிடம் கொண்ட காமநோயே எனத் தோழி, களவினால் தலைமகள் வேறுபாட்டை அறிய செவிலித்தாய்க்கு கூறுகிறாள். இதனை,

"பின் இயைப் பொலிந்த விளங்கு இணர்அவிழ்பொன்
தண் நறும் பைந்தாது உறைக்கும்
புன்னை அம் கானல், பகல் வந்தீமே" (அக.நா-80 : 11-13)

என்னும் அடிகள் விளக்கும்.

## 1.4. வரைவு கடாய வற்புறுத்தல்:

ஊழினால் தற்செயலாக எதிர்ப்பட்ட தலைமகனும் தலைமகளும் உள்ளம் புணர்ந்து காதலராயின் களவில் இரவுக்குறியிடத்தும் பகற்குறியிடத்தும் சந்தித்து வருகின்றனர். அவ்வாறு சந்தித்து வருகின்ற பொழுது ஏற்படுகின்ற இடர்ப்பாடுகளைச் சுட்டியும், தலைவன் களவொழுக்கத்திலேயே காலத்தை நீட்டித்து வருவானோ என அஞ்சிய தலைவி, தோழி முதலியோர் தலைவனுக்கு, களவினை நீட்டித்தல் முறையாகாது என எடுத்துரைக்கும் பாடல்கள் காணக்கிடக்கின்றன.

‘‘கோழிலை வாழைக் கோள் முதிர் பெருங்குலை
ஊழுறு தீம்கனி உண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் களையொடு, ஊழ்படு
பாறை நெடுஞ்சுனை, விளைந்த தேறல்
அறியாது உண்ட கடுவன் அயலது
கறிவளர் சாந்தம் ஏறல் செல்லாது
நறுவீ அடுக்கத்து மகிழ்ந்து கண்படுக்கும்” (அக.நா.2 : 1-7)

என்பதில் குரங்கானது தேனை அறியாமல் உண்டு, பின்பு தன் தொழிலாகிய மரம் ஏற மாட்டாது வேறு ஓர் இடத்துக்குச் செல்லவும் மாட்டாது பக்கத்தில் உள்ள சந்தன மரத்தின் நிழலில் பூ மேலே உறங்குவதைப் போன்று தலைவனும் இக்களவொழுக்கமாகிய இன்பத்தை அனுபவித்து மயங்கியவன் தலைவியை திருமணம் செய்து கொள்ளும் எண்ணமின்றி ஒவ்வொரு நாளும் பகற்குறியிலே வந்து சென்றான். அதைக் கண்ட தோழியானவள் தலைவி இற்செறிக்கப்பட்டமையை உணர்த்தி அவளை விரைந்து மணந்து கொள்ளுமாறு அறிவுறுத்தினாள்.

### 1.5. களவில் அலர் தூற்றுதல்:

தலைவன் பிரிவால் மேனி வேறுபட்டுக் காணப்பட்ட தலைவியைக் கண்ட ஊரார் அலர் தூற்றினர். உமணரால் ஒழித்துப் போடப்பட்ட வண்டியில் வெண்குருகு முட்டை ஈனுவதைப் போல தலைவனால் கைவிடப்பட்ட தலைவியின் மேல் ஊரார் அலர் தூற்றுவதை,

"முழங்குதிரை இன்சீர் தூங்கும்
அழுங்கல் மூதூர் அறிந்தன்றோ இன்றே" (நற்.138:10-11)

என அம்மூவனார் பாடல் எடுத்துரைக்கின்றது.

இதனைத் தொல்காப்பியர்,

"பெருமையிற் பெயர்ப்பினும் உலகுரைத்து ஒழிப்பினும்
அருமையின் அகற்சியும்"[10]

என உரைப்பர்.

தலைவியை ஊரார் பேசும் வசை மொழியில் இருந்து காப்பாற்ற தலைவன் விரைவில் அவளைத் திருமணம் செய்துகொள்ள வேண்டும்.

### 1.6. ஆற்றியிருத்தல்:

தலைவனுக்கு உடனே தலைவியைத் திருமணம் செய்து கொள்ள விருப்பமில்லை என்பதை அறிந்த தலைவியானவள், தோழியிடம் தலைவன் கிடைக்கவில்லை என்று இறந்துபோனால் எந்தப் பயனும் இல்லை. அதனால் நான் ஆற்றியிருந்து அவன் மார்புடனே சேருவேன் என்னுரைப்பதை

"சாதலும் இனிதே காதல் அம்தோழி
அந்நிலை அல்ல ஆயினும்" (நற்.327:3-4)

என்னும் பாடல் விளக்கும் மற்றொரு பாடலில் வினை காரணமாகப் பிரிந்த தலைமகன் குறித்த பருவத்தில் வராததால் தலைவி வருந்தினாள். அவளைத் தோழியானவள் துயரப்படாமல் ஆற்றியிரு எனக் கூறினாள். அதற்குத் தலைவியானவள், என்னைக் காதலன் பிரிவதை நினைத்து இறந்து போக அஞ்சவில்லை. அவ்வாறு இறந்து மறுபிறப்பு எய்தினால் என் காதலனை மறக்க நேருமோ என அஞ்சுகிறேன் என்று கூறி தான் ஆற்றியிருப்பதைக் குறிப்பால் உணர்த்தினாள். இதனை,

"கண்ணும் காட்சி தெளிவின என நீத்து" (நற்.397.3)

இதனை,

"வாள்அற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாள்ஒற்றித் தேய்ந்த விரல்"[11]

அவர் பிரிந்து சென்ற நாட்களில் சுவரில் இட்ட அடையாளங்களைத் தொட்டு எண்ணுதலால் என் விரல்கள் தேய்ந்தன. அது மட்டுமன்றி அவர் வரும் வழி பார்த்து என் கண்களும் ஒளியிழந்து புல்லிய வாயின என்ற குறட்பா மேலே குறிப்பிட்ட கருத்திற்குச் சான்றாக அமைகிறது.

### 1.7. உடன் போக்கு

தலைவனும், தலைவியும் கொண்ட களவு வாழ்வினை குடும்பத்தார்கள் ஏற்றுக்கொள்ளாத நிலையில் அவர்கள் ஊரை விட்டுச் சென்று மணம் செய்து கொள்கின்றனர். இந்நிகழ்வு உடன்போக்கு எனப்படும். களவினை முடிவுக்குக் கொண்டு வருவது உடன்போக்காகும். தலைவி தான் விரும்பிய தலைவனோடு உடன் சென்றுவிடுவதை,

"நனைவிளை நறவின் தேறல் மாந்தி

புனைவினை நல்இல் தருமணல் குவைஇ

………….

அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென் யானே"(அக.நா..221: 2-14)

என்று பாடுவர்.

இடையூறுகள் ஏற்பட்டதால் தலைவனானவன் தலைவியை யாருக்கும் தெரியாமல் உடன் அழைத்துச் செல்ல விரும்பினான். ஆனால் தலைவியின் பெற்றோரோ இதனை அறியாமல் தலைவிக்கு வேறு இடத்தில் திருமணம் செய்வதற்கான வேலையில் ஈடுபட்டனர். அதையெல்லாம் பொருட்படுத்தாத தலைவியானவள் தலைவனுடன் அரிய சுர வழியில் யாருக்கும் தெரியாமல் சென்றுவிட்டாள். அதாவது தலைவியின் விருப்பத்திற்கு மாறாக நற்றாய் செயல்பட்டமையால் தலைவி உடன்போக்கினை மேற்கொண்டாள்.

தலைவி உடன்போக்கில் சென்ற வழி அவளைத் தேடிக்கொண்டு செவிலித்தாய் சுரத்தினை அடைந்து அவளைக் காணாது வருந்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

"நிழல் ஆன்று அவிந்த நீரில் ஆர் இடைக்

கழலோன் காப்பக் கடுகுபு போகி" (குறுந்.356: 1-2)

நிழலில்லாமல், நீரில்லாமல் கடந்து செல்வதற்கு அரிய நிலப்பகுதியில் தன் காதலன் வருவதால் தலைவியானவள் அச்சமின்றி விரைந்து செல்வாள்.

மற்றொரு அகநானூற்றுப் பாடலொன்றில்

"பசும்பழப் பலவின் கானம் வெம்பி

விசும்புகண் அழிய வேனில் நீடி" (அக.நா..189:1-2)

உண்ணுதற்கேற்ற பழத்தினைக் கொண்ட பல மரங்களையுடைய காடு வாடியது. ஆகாயத்தில் மேகம் இல்லாததால் வேனிற் காலத்தில் வெப்பம் மிகுந்தது குளங்கள் வறண்டு கிடக்கின்றன. இப்படிப்பட்ட இந்த கடுமையான பாலையில் என் தலைவியானவள் தலைவனுடன் உடன்போக்கில் சென்று விட்டார் எனச் செவிலித்தாய் புலம்புகிறாள்.

உடன்போக்கு சென்ற தன் மகளின் நிலையை நினைத்து வருந்திய நற்றாயின் நிலையினை கீழ்வரும் பாடல்கள் சுட்டுகின்றன. இந்நிகழ்வை,

“நின்ற வேனில் உலந்த காந்தள்
அழல் அவிர் நீள் இடை நிழலிடம் பெறா அது
…………………….
வெய்ய உயிர்க்கும் காயல்
மைய ஈர்ஓதி பெரு மடந்தகையே” (நற்.29:1-11)

சிறிது நேரம் பிரிந்தாலும் கலங்க கூடியவள் புலி உலவும் காட்டிற்குள் வழியேச் செல்ல எப்படித் துணிந்தனள் என நற்றாய் உரைத்தாள் என்பதைப் பாடலடிகள் சுட்டுகின்றன. அது போல,

“வேம்பின் ஒண் பழம் முணைஇ இருப்பைத்
தேம்பால் செற்ற தீம் பழம் நசைஇ
--------------------
சிலம்பு கழீஇய செல்வம்
பிறருழைக் கழிந்த என் ஆயிழை அடியே” (நற்.279: 1-10)

வேப்பம் பழத்தை வெறுத்து இருப்பைப் பழத்தை விரும்பி வரவல் பனியில் வைகுமென்றது தந்தை செல்வத்தை வெறுத்து தலைவனுடன் அவன் செல்வத்தை விரும்பிச் சென்ற தலைவியை நினைத்து, மணமுடிக்கும் பொழுது

காலில் அணிந்திருக்கும் சிலம்பைக் கழற்றுவதற்குச் செய்யும் விழாவினை யான் கண்டு மகிழாமல் பிறா் கண்டு மகிழும்படி சென்றுவிட்டாள் எனத் தாய் வருந்தும் நிலையினையும் காணமுடிகிறது.

களவொழுக்கத்தில் இற்செறித்தல் பெண்டிா் பழிச்சொல் கூறுதல், தாய் கடிந்துரைத்தல் போன்ற செயல்கள் நிகழ்ந்தமையால் யாருக்கும் தெரியாமல் தலைவனுடன் உடன்போக்குச் செல்ல முற்பட்டமைக்கான காரணத்தை தலைவியானவள் தோழியிடம் கூறினாள்.

"கௌவை மேவலா் ஆகி இவ்ஊா்
நிரையப் பெண்டிா் இன்னா கூறுவ
புரைய அல்ல,, என் மகட்கு எனப் பரைஇ
நம் உணா்ந்து ஆறிய கொள்கை
அன்னை முன்னா், யாம் என், இதற்படலே" (அகநா.95:11-15)

இவ்வாறாக சங்க காலத்தில் உடன்போக்கு நடைபெற்றாலும் இன்று இந்நிகழ்வானது குடும்பச் சூழ்நிலைக்கேற்ப நடைபெற்றுக் கொண்டு தான் இருக்கிறது.

உடன் போக்கு சென்றுவிட்ட தலைவியின் தாய் வருந்துகிறாள். சிலா் அவளைத் தேற்றுகின்றனா். அதற்கு அந்தத் தாய் சொல்கிறாள் என் மகள் உடன் போக்குச் சென்றதற்காக வருந்தவில்லை. அவளைப் பிரிந்த என் உயிா் இன்னும் போகாமல் இருக்கிறதே என நினைத்து வருந்துகிறேன் என்கிறாள். இதனை,

''காதல் வேணடியற் துறந்து
போதல் செல்லா வென்னுயிரொடு புலந்தே'' (அகநா.55: 16-17)

என்ற பாடல் புலப்படுத்தும்.

மற்றொருத் தாயானவள் வீட்டில் தேனும், பாலும் கலந்து கொடுத்தாலும் உண்ணாதவள் கொடுமையான பாலை வழியைக் கடந்து செல்ல எவ்வாறு துணிந்தாளோ என்று புலம்புகிறாள். சிறுவயதில் கோல் கொண்டு தன் மகளை அடித்த தாய், மகள் உடன்போக்குச் சென்ற பிறகு அதை நினைத்து வருந்துகிறாள். ஆறலைக் கள்வர் இருக்கும் காடு நெடுந்தொலைவு உள்ளது எனத் தெரியாமல் என்மகள் சென்று விட்டாளோ என வருந்துகிறாள். உடன் போக்குச் சென்ற என் மகளை நினைத்து நான் வருந்துவதைக் காட்டிலும் இவ்வூரினரே அதிகமாக வருந்துகின்றனர் எனக் கூறும் தாயைப் பற்றி ஒரு பாடல் விளக்கியுள்ளது. இதனை,

> ''மனைமருண்டு இருந்த என்னினும் நனைமகிழ்
> நன்னராளர் கூடுகொள் இன்இயம்
> தேர்ஊர் தெருவில் ததும்பும்
> ஊர்இழந் தன்று தன் வீழ்வுஉறு பொருளே''(அகநா.189:12-15)

எனும் அகநானூற்றுப் பாடலடிகளால் அறியலாம்.

தலைவி ஒருத்தி தலைவனுடன் கொண்டுள்ள களவை ஊரார் தாயிடம் கூறுகின்றனர். அச்செய்தியினைத் தாயானவள் தன் மகளிடம் கேட்காமல் இருக்கின்றாள். தன் தாய்க்கு தன்னுடைய களவு வாழ்க்கை தெரிந்துவிட்டது என அறிந்த தலைவியானவள், தலைவனோடு உடன் போக்குச் சென்று விட்டாள். இதனை அறிந்த தாய் என் மகன் என்னைத் தவறாகப் புரிந்து கொண்டு சென்று விட்டாள். நான் அப்படிப்பட்டவள் இல்லை என்பது உண்மையாகும்படி அவர்கள் சென்று சேரும் ஊரில் விருந்தினர்களை வரவேற்கும் தன்மையைப் பெறுவேனாக என்றுரைக்கின்றாள்.

சில பாடல்களில் தன் மகள் இல்லற வாழ்வை அறியாதவள் எவ்வாறு இல்லறம் நடத்தப் போகிறாளோ என ஏங்கும் தாயையும் என் மகளோடு விளையாடிய தோழியரைக் காணும் போதெல்லாம் வருந்துகிறேன் என கூறும் தாயையும் காண முடிகிறது.

என் மகளை என்னிடமிருந்து பிரித்த அந்தக் காளையின் தாயும் என்னைப் போலவே துன்பப்படுவாளாக என்றொரு தாய் கூறுவதை,

''பொம்மல் ஓதியைத் தன்மொழிக் கொளீஇக்
கொண்டு உடன்போக வலித்த
வன்கண் காளையை ஈன்ற தாயே'' (நற். 293:7-9)

என்ற பாடல் விளக்குகிறது.

பெரும்பாலானப் பாடல்கள் தாயானவள் தன் மகளை நினைத்து வருந்துவனவாகவே இருக்க ஒரு பாடல் மட்டும் சற்று மாறுபட்ட நிலையில் உள்ளது. அப்பாடலில் பேசும் தாயானவள் மாலை மறையும் பொழுதிலே இலைகளை உதிர்த்த மரக்கிளையில் இருந்து, புறாவின் அச்சம் தரக்கூடிய கடவுதல் ஓசையைக் கேட்டு, வெப்பம் மிகுதியான நேரத்தில் வருந்தி, போருக்குச் செல்பவர்கள் போன்ற கண்களை உடையவர்களாகத் தலைவியானவள் நோக்குவாள். இதனால் அவளுடைய காதலனைத் துன்புறுத்துவாளோ என்று எனக்கு வருத்தமாக உள்ளது என்பதை,

''இலங்கு இலை வென்வேல் விடலையை
விலங்குமலை ஆர்இடை நலியுங் கொல் எனவே'' (நற்.305: 9-10)

என்பள்.

''காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாள் இழந்தனவே
அகல் இரு விசும்பின் மீனினும்
பலரே மன்ற இவ் உலகத்துப் பிறரே'' (குறுந்.44:1-4)

என்கிறாள்.

### 1.2.1. கற்பின் இயல்பு:

தலைவனும், தலைவியும் கொண்ட களவு வாழ்க்கை குடும்பத்தாரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட நிலையில் அது திருமணத்தில் முடிந்து கற்பு வாழ்க்கையுடையதாகிறது.

கற்பு என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது சடங்கோடு பொருந்திக் கொள்ளுதற்குரிய மரபினை உடைய தலைவன் கொள்ளுதற்குரிய மரபினை உடைய தலைவியைக் கொடுத்தற்குரிய தலைவியின் தமர் மணஞ் செய்து கொடுப்ப மணந்து கொள்ளுதல் என எடுத்துரைக்கிறார் தொல்காப்பியர்.[12]

திருமண நிகழ்வானது தலைவியை மணஞ் செய்து கொள்வது களவு வெளிப்பட்ட பின்னரும் களவு வெளிப்படா முன்னரும் ஆகிய இரண்டிடத்தும் நிகழும் என்பதை

"வெளிப்பட வரைதல் படாமை வரைதல் என்று
ஆயிரண் டென்ப வரைதல் ஆறே"[13]

என்னும் நூற்பா விளக்கும்.

"எக்கர் ஞாழல் அரும்புமுதிர் அவிழ் இணர்
நறிய கமழும் துறைவற்கு
இனிய மன்ற என் மாமைிக்கவனே''(ஐங்-146: 1-3)

என்னும் பாடலில் திருமண நாளில் உழுந்திடப் பெற்ற கொழுவிய கனித்திரள், பெருஞ்சோறு இவற்றுடன் நிறைந்திருக்கிறது. திருமணப் பந்தலில் புதுமணல் பரப்பப்பட்டுள்ளது. மனையில் விளக்கினை ஏற்றி மாலைகளை இல்லத்தில் தொங்கவிட்டிருந்தனர். விடியற் காலைப்பொழுதினிலே திங்களில் உரோகினியுடைய சிறந்த முகூர்த்தத்தில் உச்சியில் குடம் ஏந்தியவர். புதிய அகலமான பாத்திரம் கொண்டவர், நற்செயல்கள் செய்யும் ஆரவாரம் உடைய முதிய பெண்கள் முன்னும், பின்னும் இடைவிடாது சடங்கு முறைகளைச் செய்து வந்தனர். பிள்ளைகளைப் பெற்று நன்கு வாழ்ந்த மகளிர் நால்வர் ஒன்று கூடி தலைவியின் கூந்தலின் மேல் நீர், நெல், மலரினை கற்பிற் சிறந்த வாழ்க்கைத் துணையாகி, நின் கணவனை விரும்பும் பெண்ணாக என்று மங்கள வார்த்தையினைச் சொல்லிச் சொரிய இவ்வாறாகப் பலரும் அறியும்படி திருமணம் நடைபெற்றதை, அகநானூற்றுப் பாடல் தெளிவாகக் காட்டுகின்றது.

களவொழுக்கத்தால் எத்தகைய துன்பம் உண்டாகுமோ என அஞ்சிய அச்சம் நீங்கத் திருமணம் நிகழ்த்தப் பெற்றது என்று தோழி உரைப்பதன் மூலம் கற்பு வாழ்க்கையின் சிறப்பினை உணர முடிகிறது. கற்பு வாழ்க்கையே சிறந்ததாகக் கருதப்பட்டதால் பெற்றோர்கள் உடன்பட கற்பு வாழ்க்கை மேற்கொண்ட பண்பாட்டினை இதன் வழி அறிய முடிகிறது.

### 1.2.2. திருமணம்:

இருமனமும் ஒருமனமாய் சிறந்து வாழ்தலே மண வாழ்க்கை. அம்மணவாழ்வின் ஆரம்பம் திருமண நாள். திருமணம் என்பது வாழ்க்கையில் மாற்ற முடியாத ஒரு நிகழ்ச்சி. உடலால் இருவராயினும் உள்ளத்தால் ஒருவரே.

"கண்டல் வேலிய ஊர் அவன்
பெண்டு என அறிந்தன்று பெயர்த்தலோ அரிதே" (நற்-74: 10-11)

என்பதால் ஒருவனும், ஒருத்தியும் பிரியா வாழ்க்கை பெற்று உடன் வாழ்தலே சிறப்பாகக் கொள்ளப்பெற்றது.

வளர்பிறை நாளில் உதய காலத்தில் தீய கோள்களின் சேர்க்கையின்றி நற்கோள்கள் பயின்றிருக்கும் காலமே திருமணத்திற்கு உரிய காலமாகக் கொள்ளப்படுகிறது. நன்னிமித்தங்கள் வாய்க்கப்பெற்று சந்திரன் உரோகிணி முதலிய சுபநட்சத்திரங்களுடன் கூடிய நாளாகவும் இருக்க வேண்டும். வேங்கை மலர்தலும் மணநாளுக்கு உரிய காலமாகிறது.

"எந்தை வந்து உரைத்தனனாக அன்னையும்
நல்நாள் வேங்கையும் மலர்கமா இனி என
என்முகம் நோக்கினாள்" (நற்.206: 6-8)

என்பதிலிருந்து இக்குறிப்பைக் காணலாம்.

சங்ககாலத்தில் திருமணங்கள் தலைவன், தலைவி இருவரும் மனம் ஒத்து உடன்போக்கு மேற்கொண்டு பின் திருமணம் செய்யும் முறை எனவும் பெற்றோர் ஒப்புதலுடன் திருமணம் செய்யும் முறை எனவும் இரு முறைகளில் திருமணம் நடைபெற்றுள்ளமையை அகஇலக்கியங்களில் காணமுடிகிறது.

### 1.2.3.திருமணத்தைக் குறிக்கும் சங்க இலக்கியச் சொற்கள்:

"திருமணத்தைக் குறிக்க வரைவு, வதுவை, மன்றல். கரணம், மணம் முதலிய சொற்கள் சங்க இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன"[(14)].

“இப்பொருளுடன் அமைந்த “கல்யாணம்” கலியாணம் என்னும் வடமொழிச் சொற்கள் முதன் முதலில் நாலடியார், ஆசாரக்கோவையில் இடம்பெற்றுள்ளன.”[15].

### 1.2.4. திருமண வகைகள்:

தொல்காப்பியர் களவியலில் திருமணத்தைப் பற்றி

“மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே”[16]

என்று குறிப்பிடுகின்றார். இதற்கு இளம்பூரணர் எண் வகை மணமுறை பற்றி

1. பிரமம் - பனிரெண்டு வயது நிறைந்தப் பெண்ணை அணிகலன் அணிந்து கொடையாகக் கொடுப்பது
2. பிரசாபத்தியம் - இருமுது குரவரும் இயைந்து கொடுப்பது
3. ஆரிடம் - பசுவும், காளையும் வாங்கிக் கொண்டு மகளைக் கொடுப்பது.
4. தெய்வம் - வேள்வித் தீ முன்னர் மகளைக் கொடுப்பது
5. காந்தருவம் - தலைவனும், தலைவியும் கூடும் கூட்டம்
6. அசுரம் - காளையை அடக்குபவருக்கு அல்லது வில் போட்டியில் வென்றவருக்குக் கொடுப்பது.
7. இராக்கதம் - பெண் விரும்பாமலும், பெற்றோர் கொடாமலும் வலிதிற் கொள்வது
8. பைசாசம் - மூத்தாளையும், கள்ளுண்டு களித்தாளையும் துயின்றாளையும் கூடுதல்

சங்க அகப்பாடல்களில் இடம்பெறும் குறிப்புகளைக் கொண்டும் அறியப்படும். அவையாவன:

1. களவு மனம் (களவு வெளிப்படுவதற்கு முன் வரைதல், களவு வெளிப்பட்ட பின் வரைதல், உடன்போக்கு மணம்)
2. தொன்றியல் மரப்பின் மன்றல் (மரபு மணம்)
3. பரிசளித்து மணத்தல்,
4. சேவை மணம் (பணி செய்தல்),
5. திணைக்கலப்பு மணம்,
6. ஏறு தழுவி மணமுடித்தல் முல்லைத்திணை மக்களுக்குரியது,
7. மடலேறி மணமுடித்தல்
8. போர்நிகழ்த்தி மணமுடித்தல்
9. துணங்கையாடி மணமுடித்தல்
10. பலதாரமணம்'' (17)

போன்றவையாகும். இவ்வாறு பலவகை மணங்களைப் பற்றிக் கூறியுள்ளனர். எனினும், அவற்றைப் பொதுவாக காதல்வழி அமையும் மணம், பெற்றோர் கொடை நேர்ந்து அமையும் மனம் என்னும் இருவகையில் அடக்கிக் கூறலாம்.

காதல் மணம் பலர் அறிய கற்பு மணமாகிறது. பெண்ணின் தமர் உரிய தலைமகனைக் கண்டறிந்து அவனுக்குத் தன் மகளை அளிக்கின்றனர்.

''கூண்முள் முண்டகக் கூர்ம் பனிமாமலர்
நூல்அறு முத்தின் காலொடு பாறித்
துறைதொறும் பரக்கும் தூமணற் சேர்ப்பனை
யானும் காதலென், யாயும் நனி வெய்யள்
எந்தையும் கொடீஇ இயர் வேண்டும்
அம்பல் ஊரும் அவனொடு மொழிமே''(குறுந்.51:1-6)

தலைவியை அவள் விரும்பிய தலைவனுக்கே அவளுடைய பெற்றோர் திருமணம் செய்து கொடுக்க முன்வந்தமை அறியலாகிறது.

மணப்பெண்ணிற்கு மணமகன் பரிசளிக்கும் வழக்கம் தொன்று தொட்டு வரக் கூடிய தமிழர் மரபாகும். அன்று இது முலைவிலை, சிருவளைவிலை, பரியம் என்று அறியப்பட்டது. பாசிழை விலையென்றும் பெயர் உண்டு.

தலைவன் மணப்பெண்ணிற்கு பரிசு கொடுப்பது மரபாக இருந்ததை

"நலம் சால் விழுப்பொருள் கலம்நிறை கொடுப்பினும்

பெறல் அருங்குரையன்"(அக.நா.280:4-6)

அகநானூற்றுப் பாடல் வழி உணர முடிகிறது.

ஒரு நிலத்தைச் சார்ந்த தலைவனோ அல்லது தலைவியோ மற்றொரு நிலத்தைச் சார்ந்த தலைவன் அல்லது தலைவியை மணம் செய்து கொள்வது திணைக்கலப்பு மணமாகும்.

''உமணப் பெண் மலைநாட்டிற்குச் சென்று உப்பு விற்கையில் ஓர் இளைஞனின் காதலுள்ளம் அவள்பாற்படர்வதை திணைக்கலப்பு மனம் என்பர்'' வ.சுப.மாணிக்கம்[(18)]

முல்லை நிலத்து மக்கள் சிறந்த வீரர்களாக இருந்தனர். அந்நிலத்துப் பெண்மக்கள் வீரர்களை மணம் புரிவதையே விரும்புவார்கள். ''கொல்லேறு தழுவுதல்'' என்பது ஒரு வீரவிளையாட்டு பந்தயத்திற்கென்று வளர்க்கப்பட்டு அவிழ்த்து விடப்பட்ட காளைகளை அடக்கிப் பிடிப்பவர்களே அப்பெண்களால் பாராட்டப்படுவார்கள். மணந்து கொள்வார்கள். இது பழந்தமிழ் நாட்டு வழக்கம். இதனை,

''கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்'' (கலித்.103:63-64)

என முல்லைக் கலிப்பாடல் எடுத்தியம்பும்.

தான் விரும்பிய தலைவியை அடைய முடியாத நிலையில் தலைவன் "மடலேறி" காதலைப் பிறருக்கு வெளிப்படுத்தி தலைவியை அடைவான். மடல் என்பது பனைமடலால் குதிரை வடிவினதாகச் செய்யப்பட்ட உருவமாகும். காமம்மிக்க தலைவன் பனைமடலால் குதிரை போல ஓர் உருவம் செய்து அதன் கழுத்தில் மணி, ஆவிரை மாலை முதலியவற்றைப் பூட்டி அதன் மேலாக ஏறி, ஊர் மன்றத்திற்கு வருவான். இவன் தன் கையில் தான் காதலித்த பெண்ணின் உருவத்தையும் படத்தில் எழுதிக் கையில் பிடித்திருப்பான், மடலேறும் தலைமகன் வெள்ளை எருக்கமாலை, ஆவாரம் பூ மாலை முதலியன அணிந்துக்கொண்டிருப்பான். இவனது வருகைக் கண்ட ஊரினர் இவனுக்கு இன்னாளொடு நட்பு உண்டு என்று அறியவே செய்தி எங்கும் பரவிப் பழிப்புக்கு இடமாகும். அது கேட்ட தலைவியின் சுற்றத்தார், அத்தலைமகனுக்கு அவளை மணமுடித்து வைப்பர்.

ஓர் ஆண் மகன் பல பெண்களை மணந்து கொள்வது பலதாரமணம் எனப்படும். குழந்தைப் பேற்றிற்காக, முதல் மனைவியின் வாழ்த்துதலோடு நடைபெறும் திருமணம் பலதாரமணமுறையாகும். இதனை மகப்பேறு மணமென்றும் உரைப்பதுண்டு. தலைவன் அறமதனைப் பொருளாகக் கொண்டு மகப்பேறு கருதி, இரண்டாம் திருமணத்தை ஏற்றுக்கொள்ளுதல் முறையாக ஏற்றுக்கொள்ளப்பட்டன.

"நின்னினுஞ் சிறந்தனன் எமக்கே நீநயந்து
நன்மனை அருங்கடி அயர
வெந்நலஞ் சிறப்ப யான் இனிப் பெற்றாளே" (ஐங்: 292:3-5)

இன்று பலதாரமணம் அக்கால நிகழ்வின் வழியும் மனைவி இறந்த போதிலும், குழந்தை வளர்ப்பிற்காகவும் மேற்கொள்ளப்படுகின்றது.

இவ்வாறாக அன்றைய மக்களின் திருமணங்கள் நடைபெற்றன. திருமணமுறைகள் சில புறக்கணிக்கப்பட்டாலும் சில சடங்கு முறைகள் இன்றளவும் பின்பற்றப்பட்டு வருகின்றமை நம் பண்பாட்டைப் போற்றுவதற்கு சான்றாக அமைகின்றன.

### 1.2.5. திருமணப் பொருத்தங்கள்:

திருமணத்தில் இணையும் தலைவன் தலைவியின் மணவாழ்வு இன்பமாகவும் நலமிக்கதாகவும் அடைய விரும்பியோர் அவர்கள் பால் அமைய வேண்டிய ஒப்புமைகளாக

"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு
உருவு நிறுத்த காம வாயில்
நிறையே யருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"[19].

என்பவைற்றை உரைத்துள்ளார்.

தலைவன் தலைவியரிடையே இருக்கக் கூடாத சில பண்புகளையும் தொல்காப்பியர் சுட்டியுள்ளார்.

"நிம்பிரி கொடுமை வியப்போடு புறமொழி
வன்சொல் பொச்சாப்பு மடிமையொடு குடிமை
இன்புறல் ஏழைமை மறப்போடு ஒப்புமை
என்றிவை இன்மை என்மனார் புலவர்"[20]

### 1.2.6. திருமணத்தில் தாலி:

திருமண நிகழ்ச்சிகளைப் பற்றி விளக்கக் கூடிய அகநானூற்றுப் பாடல்களில் மணப்பெண்ணுக்குத் தாலி அணிவிக்கப்பட்டதாக எந்தக் குறிப்பும் இல்லை. ஆதலால் திருமணத்தில் தாலி அணியப்பட்டது என்று உறுதியாகக் கூற முடியாத நிலையே உள்ளது.

சங்கத் தமிழில் மணமகன் மணமகளுக்குத் தாலி கட்டியதாகச் சான்று எதுவும் இல்லை. திருமணத்தின் போது மங்கல நாண் கட்டும் வழக்கம் பழந்தமிழரிடையே இல்லை போலும். அவ்வழக்கம் இருந்திருப்பின் எல்லாத் திருமணச் சடங்குகளையும் குறிப்பிடும்போது தாலி கட்டுவதென்னும் தலையாய சடங்கைக் குறிப்பிடாமல் இரார். ஆரியர் பண்பாடும் பழக்க வழக்கங்களும் பெருகி வந்த காலத்து எழுந்த நூலான சிலப்பதிகாரத்திலும் தாலி கட்டும் சடங்கை குறிப்பிடவில்லை. ஆனால் தமக்குத் திருமணம் ஆகிவிட்டதைத் தெரிவிப்பதற்காக அக்காலத்துப் பெண்கள் மங்கல அணி ஒன்றை அணிந்திருக்க வேண்டுமென்றும், திருமண நாளன்று அம்மங்கல அணியை ஊர்வலமாக கொண்டு வரும் வழக்கம் இருந்தது என்றும் அறிகிறோம் என்கிறார் டாக்டர்.கே.கே. பிள்ளை.(21)

### 1.2.7. சோதிடம் பார்த்தல்:

எந்தவொரு நல்ல நிகழ்ச்சிகள் வீட்டில் நடைபெறுவதாக இருந்தாலும் முதலில் கணியனை அழைத்து நாள் குறிக்கும் சடங்கு முறை சங்க கால மக்களிடம் இருந்துள்ளதை அறிந்து கொள்ள முடிகிறது. கலித்தொகையில் மணநாளுக்கு ஏற்ற முகூர்த்தம் குறிப்பதற்குக் கணியனை அழைத்துக் கொண்டு சான்றோர்கள் மணமகள் இல்லத்திற்கு வருவதை

"நெறி அறி செறி குறி புரிதிரிபு அறியா அறிவனை முந்துறீஇ
தகைமிகு தொகைவகை அறியும் சான்றவர் இனமாக
வேய்புரை மென்தோட் பசலையும், அம்பலும்
மாயப்புணர்ச்சியும் எல்லாம் உடன் நீங்க
சேய் உயர் வெற்பனும் வந்தனன்
பூ எழில் உண்கணும் பொலிகமா இனியே" (கலி.39, 46-51)

என்னும் பாடலடிகள் விளக்கும்.

### 1.2.8. நிமித்தம் பார்த்தல்:

நடக்கவிருக்கும் செயல்களின் நல்லவை தீயவைகளைப் பற்றித் தெரிந்துக்கொள்ள பறவைகள் விலங்குகள் இவற்றின் ஒலியையும் செயல்பாட்டையும் துணையாகக் கொண்டு செயல்பட்டவர்கள் சங்ககால மக்கள். அவ்வாறு அறியப்படுகின்ற உணர்விற்கு நிமித்தம் எனப் பெயரிட்டனர். புள், நாள், ஓரை என்ற சொற்களால் இவை குறிக்கப்பட்டுள்ளது.

"இடுஉ ஊங்கண் இனிய படூஉம்
நெடுஞ் சுவர்ப் பல்லியும் பாங்கில் தேற்றும்
மனைமா நொச்சி மீமிசை மாச்சினை" (நற். 246:1-3)

இப்பாடல் வரிகள் நன்நிமித்தங்களைப் பற்றி உரைப்பனவாக உள்ளன.

### 1.2.9. சிலம்பு கழி நோன்பு:

திருமண நிகழ்ச்சிக்கு முன்பாக தலைவியின் காலில் அணிந்திருக்கும் சிலம்பைக் கழற்றுவதற்கு ஒரு சடங்கு நிகழ்த்தப்படும். இதனைச் "சிலம்பு கழி நோன்பு" என்பர். இந்தச் சடங்கு தன் இல்லத்தில் நடக்க வேண்டும் என்று தாயார் விரும்புகின்றனர். உடன்போக்கில் செல்லும் தலைவியர்க்கு இந்நோன்பும் மணவினையும் தலைவனது இல்லத்திலேயே பெரும்பாலும் நிகழ்ந்துவிடும்.

“அதர் உழந்து அசையின் கொல்லோ ததர்வாய்ச்
சிலம்பு கழீஇய செல்வம்
பிறருழைக் கழிந்த என் ஆயிழை அடியே” (நற்.279:9-11)

எனத் தலைவனுடன் உடன்போக்கு சென்றுவிட்ட தலைவியின் தாய்மார் பேசுவதிலிருந்து அவர்களின் விருப்பத்தை அறிந்து கொள்ள முடிகிறது. இவ்வாறு தாய்மார்கள் பேசுவதில் இருந்து இது சிறப்பாகப் போற்றப்படும் ஒரு சடங்காகும்.

### 1.2.10. மண நிகழ்வு

இல்லற வாழ்க்கையை சங்ககால மக்கள் பெரிதும் போற்றி வாழ்ந்தனர் தலைவனும் தலைவியும் இணைந்து வாழ்ந்தார் எனில் அவர்களுக்கு வீடுபேறு நிலை தானாக அமையும் என்பது சங்ககாலத் தமிழர்களின் நம்பிக்கையாக இருந்தது.

ஆணும், பெண்ணும் பாலியல் தேவைக்காக செய்து கொள்ளும் ஒப்பந்தம் திருமணம் ஆகும். உரிய சடங்கு முறைகளோடு தலைவியின் தமர் கொடுப்ப உரியோர் பெற்றுக்கொள்வது திருமணம் ஆகும். அவ்வாறு திருமணம் செய்து கொண்ட ஆணும், பெண்ணும் இல்லற வாழ்க்கையை மேற்கொள்கின்றனர்.

‘‘இல்லற மல்லது நல்லற மன்று’’

என்கிறது கொன்றைவேந்தன்.

திருமண வாழ்க்கை அகத்திணையுள் கற்பு எனப் போற்றப்படுகிறது. அகநானூற்றில்,

பருவம் எய்திய ஒர் ஆணும், பெண்ணும் இல்லற வாழ்வில் ஈடுபடுவதற்கு இணைப்பாக அமைவதே திருமணம் என்று கூறப்பெறுகிறது. மன உணர்வுகள் கொண்ட மனித வாழ்வினை அவனது அறிவு வளர்ச்சிக்கும், நாகரிக வளர்ச்சிக்கும் ஏற்ப திருமணம் இன்றியமையாதது. மக்களை மாக்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும் காரணிகளுள் ஒன்றாகவும் விளங்குகிறது. மக்களின் பாலியல் உணர்வு நிறைவேற்றத்திற்காக மட்டுமின்றி அவர்களின் வழிமுறைத் தொடர்ச்சிக்கும் அடிப்படையாக அமைவது திருமணம் என்பதை உணர்ந்த சங்ககால மக்கள் அதனை ஏற்று தங்களது வாழ்வினை நெறிப்படுத்திக் கொண்டுள்ளனர்.

‘‘மைப்பு அறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணி
புள்ளுப் புணர்ந்து இனியஆக, தெள் ஒளி
அம்கண் இருவிசும்பு விளங்கத் திங்கட்
சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்து
கடிநகர் புனைந்து கடவுட் பேணி
படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ
வதுவை மண்ணிய மகளிர் விதுப்புற்று
பூக்கணும் இமையோர் நோக்குபு மறைப
மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை
பழங்கன்று கறித்த பயம்பு அமல் அறுகைத்
தழங்கு குரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற
மண்ணுமணி அன்ன மாஇதழ்ப் பாவைத்
தண்நறு முகையொடு வெண்நூல் சூட்டி
தூஉடைப் பொலிந்து மேவரத் துவன்றி
மழைப்பட்டன்ன மணல் மலிபந்தர்
இழைஅணி சிறப்பின் பெயர்வியர்ப்பு ஆற்றி
தமர் நமக்கு ஈத்த தலைநாள் இரவின்
உவர்நீங்கு கற்பின் எம்உயிர் உடம் படுவி

முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇ
பெரும் புழுக்குற்ற நின் பிறைநுதல் பொறிவியர்
உறுவளி ஆற்றச் சிறுவரை திற'' (அகநா.136: 1-16)

இப்பாடல் தலைவி திருமணத்தின்போது நடைபெற்ற நிகழ்வுகளை நினைவுக்கூர்ந்து தன் நெஞ்சிற்குச் சொல்வதாக உள்ளது.

எல்லையில்லாத வள்ளல் தன்மையுடன் உறவினர்கள் உண்ணுமாறு நெய் கலந்த வெண்சோற்றினை இறைச்சியுடன் சமைத்துப் பரிமாறினர். பறவை நிமித்தமானது இனிதாகிப் பொருந்த, நெளிந்த ஒளியையுடைய பெரிய வானமானது கலங்கம் இல்லாது விளங்க சந்திரன், உரோகிணியுடன் கூடிய நல்ல நாளில் திருமணம் நடைபெறும் இல்லத்தை அழகாக அழகுபடுத்தினர். முதலில் கடவுளை வழிபட்டு ஒலிக்கும் மணமுழவுடன் பெரிய முரசு ஒலிக்க தலைவிக்கு மண நீராட்டினர். காப்பு நூல் அணிவித்து தூய திருமணப் புடவையால் மணமகளை அழகுபெறச்செய்தனர். மழை பெய்தது போல விளங்கும் பந்தலிலே அணிகலனை அணிந்த சிறப்புடனே இவளுக்கு உண்டாகும் வியர்வையை விசிறியால் வீசினர். பின் இவளை நன்கொடையாக தமக்கு வழங்கியதாகத் தலைவன் கூறுகிறான்.

மேலும், திருமணப் பந்தலிலே நல்ல புதுமணல் பரப்புவதோடு அல்லாமல் தங்களுடைய இல்லத்தில் எங்கும் விளக்குகளை ஏற்றி வைக்கின்றனர். மாலைகளைத் தொங்க விடுகின்றனர் என்ற செய்தியை அகநானூற்றுப் பாடலின் மூலம் அறிய முடிகிறது.

“தண் பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனை விளக்குறுத்து, மாலை தொடரி” (அகநா.86: 3-4)

ஆயர்கள் திருமணத்தின் முன் அவர் தம் இல்லத்தைச் செம்மண்ணால் பூசியும் தெய்வமாகப் பெண் எருமையின் கொம்பினை வைத்தும் வழிபடுகின்றனர் என்பதை ஆயமகள் கூறுவதன் மூலம் அறியலாம்.

"தருமணல் தாழப்பெய்து இல்பூவல் ஊட்டி
எருமைப் பெடையொடு, எமர் ஈங்கு அயரும்
பெருமணம்" (கலி.114-12-14)

இதனால் மண அலங்காரமும், பிற நடைமுறை நிகழ்ச்சிகளும் அவரவர் சமுதாயப் பண்பாட்டிற்கு ஏற்ற வகையில் சிறிது மாறுபட்டிருந்தது எனலாம். பொதுவாகத் திருமண இல்லம் நறுமணப் பொருள்களால் பொலிந்து விளங்கும்.

திருமணத்திற்குச் சுற்றத்தார் வந்து கூடுகின்றனர். சுற்றமும் நட்பும் சூழ மணவினை தொடங்கப்படுகிறது. முழவு முதலிய இன்னிசைக்கருவிகள் முழங்குகின்றன.

"மணமனைத் ததும்பும் நின் மணமுழவந்து எடுப்புமே" (கலி.70:10)

### 1.2.11. தீ வலம் வருதல்:

திருமணம் முடிந்த பின் மணமக்கள் மணமேடையில் உள்ள வேள்வித் தீயினைச் சுற்றி வரும் சடங்கு தீவலம் வருதல் ஆகும். கலித்தொகையில் தீவலம் வருதல் பற்றிய செய்தி காணப்படுகிறது.

"மாதர் கொள் மான் நோக்கின் மடந்தை தன் துணை
ஓதுடை அந்தணன் எரிவலம் செய்வான்" (கலி.69:4-5)

### 1.3.1. மக்கட்பேறு:

திருமண உறவால் கணவனும், மனைவியுமாக உரிமையுடன் அவர்கள் வாழும் அன்பு வாழ்க்கையின் அடையாளமாகத் திகழ்வது மக்கட்பேறு, இல்லற வாழ்வினுடைய தலையாய குறிக்கோளாகவும் கருதப்பட்டது குழந்தைப்பேறு, இம்மைப் புகழும் மறுமை இன்பமும் குழந்தையால் கிட்டும் என பெண்கள் நம்பினர். இதனை,

''இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுவின்றி எய்துப'' (அகநா.66:1-2)

மக்கட்பேறு புத்திரப்பேறு என்ற சொல்லால் போற்றப்பெறுகிறது. புத்திரன் என்பது வடமொழிச்சொல். புத் என்னும் நரகத்தை நீக்குகிறவன் என்று பொருள். இதே பொருளமைந்த சொல் தமிழில் இல்லை. பிள்ளை, பெண், மகன், மகள், மக்கள், சிறுவர், செல்வன், செல்வி, காதலன், காதலி, கான்முனை, வழித்தோன்றல் இவைகள் மக்களைக் குறிக்கும் சொற்கள். இச்சொற்களிலே புத்திரன், புத்திரி என்ற சொற்களில் உள்ள பொருள் இல்லை. புத்திரன் செய்யும் சடங்குகளால் தான் பிதிர்க்கள் இன்பமடையமுடியும் என்பது புராணக் கொள்கை. இக்கொள்கை, பழங்காலச் சீன மக்களிடம் கூட இருந்ததாகச் சொல்லுகின்றனர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழரிடமும் இக்கொள்கை பரவியிருந்தது. சங்கத் தமிழர்களும் இக்கொள்கையிலே நம்பிக்கை கொண்டிருந்தனர்.

### 1.3.2. மக்கட்பேற்றின் பயனும் சிறப்பும்:

மனிதனுடைய பண்பாட்டு வளர்ச்சிக்கு அடிப்படையாக அமையக்கூடியது மக்கட்பேறு. மக்களின் வளர்ச்சி நிலையே பண்பாட்டின் வளர்ச்சிக்கு

காரணமாகும். நம் தமிழ் மக்களிடம் ''பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க'' என வாழ்த்தக் கூடிய நிலையினைக் காணமுடிகிறது. இப்பதினாறு பேறுகளுள் பல சிறப்பினைப் பெற்றிருந்தாலும் எல்லோராலும் உயர்ந்த பேறாக சிறந்த பேறாக மதிக்கப்படுவது மக்கட்பேறு இதன் சிறப்புணர்ந்த வள்ளுவர்,

''பெருமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற''[(21)]

என்று குறிப்பிடுகிறார்.

இல்லறம் சிறக்க வேண்டுமானால் நன்மக்களைப் பெறவேண்டும். பழியில்லாத நன்மக்களைப் பெற்றால் பிறவிகள் எல்லாம் பழிப்பில்லாமல் தோன்றும், இதனையே வள்ளுவர்,

''எழுபிறப்புந் தீயவை தீண்டாப் பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்''[(22)]

இவ்வாறாகக் கூறியுள்ளார்.

இல்லற வாழ்க்கைக்கு மங்கலமாக இருப்பது குடும்பத்தலைவியின் சிறந்த பண்பேயாகும். அணிகலனாய் அமைவது நல்ல மக்கட்பேறாகும்.

''மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட்பேறு''[(23)]

என்று மக்கட்பேற்றின் சிறப்பினை எடுத்துரைத்துள்ளார்.

''இம்மை யுலகத் திசையொடு விளங்கி
மறுமை யுலகமும் மறுவின் றெய்துய
செறுநரும் விழையுஞ் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்ம லோர்''(அக.நா.66:1-4)

என்ற பாடல் மனிதன் தன் இம்மை வாழ்க்கையில் புகழோடும் இன்பத்தோடும் வாழ்வதற்கும் மறுமை வாழ்க்கையினை மறுப்பின்றி அடைவதற்கும் மக்கட்பேறு முதன்மையாக அமைகின்ற தன்மையை எடுத்துரைக்கிறது.

“ஒண்சுடர்ப் பாண்டில் செஞ்சுடர் போல
மனைக்கு விளக்கு ஆயினள் மன்ற –கனைப்பெயல்
பூப்பல அணிந்த வைப்பின்
புறவு அணி நாடன் புதல்வன் தாயே” (ஐங்-405:1-4)

என்ற பாடலின் மூலம் தலைவியானவள் குலவிளக்காம் புதல்வனைப் பெற்று தலைவனுக்கு உயிருக்கு உயிராய் அமைந்துள்ளாள். இதன் மூலம் மக்கட்பேற்றின் மகத்துவத்தை அறிய முடிகிறது.

தலைப்பிள்ளையின் பால் பெற்றோர்க்குத் தனி அன்பு உண்டு. அக்குழந்தையின் சொற்கேட்பது செவிக்கு இன்பமாகும். மெய்தீண்டுதல் உடற்கூறு இன்பமாகும். இளநகையைக் காண்பது காட்சி இன்பமாகும். இவ்வாறு இன்பத்தை தருகின்ற மகன் பிறந்த பின்னும் தன் கணவன் பால் அன்பு கொண்டிருக்கும் மனைவியின் மனநிலையை உணராது பொருள் தேடப் பிரியக் கருதிய தலைவனுக்கு,

“வேனில் திங்கள் வெஞ்சுரம் இறந்து
செலவு அயர்ந்தனையால் நீயே: நன்றும்
நின் நயந்து உறைவி கடுஞ் சூற் சிறுவன்
முறுவல் காண்டலின் இனிதோ
இறுவரை நாட! – நீ இறந்து செய்பொருளே” (ஐங்-309: 1-5)

என்றுரைப்பதில் பிறந்த பிள்ளையின் இளநகையைக் காண்பதனில் பெறலாகும் இன்பத்தைக் காட்டிலும் தேடி வரும் பொருளால் உண்டாகும் இன்பம் சிறந்ததாகுமா எனத் தோழியின் மூலமாகத் தலைவனிடம் கேட்கிறாள்.

“வானுத லரிவை மகன் முலை ஊட்ட
தானவள் சிறுபுறங் சுவையின் னன்றும்
நறும்பூந் தண் புறவணிந்த
குறும்பல் பொறைய நாடுகிழ வோனே” (ஐங்-404: 1-4)

என்பதில் தலைவியானவள் தன் உள்ளத்தில் பெருகிய அன்பினால் தான் பெற்ற மகனுக்குப் பாலூட்டும் பொழுது மகனது முகப்பொலிவும் முறுவல் முகத்தையும் கண்டு கிளர்ச்சி கொண்ட தன்மையினை இப்பாடல் புலப்படுத்துகிறது.

மக்கட் பேற்றினால் ஒரு மனிதன் முழு மனிதனாகிறான். முழுமையடைகிறான். அக்குடும்பத்தின் வளர்ச்சிக்கும் பெருமைக்கும் அடிப்படையாக அமைவது மக்கட்பேறு, அனைவராலும் விரும்பக்கூடிய ஒரு செல்வம் குழந்தைச் செல்வம், அக்குழந்தையின் நடை, உடை, சொல் போன்ற அனைத்துமே அனைவராலும் விரும்பக்கூடிய ஒன்றாகும். அவ்வின்பத்தை சங்ககால மக்களும் பெற்றுள்ளனர் என்பது புலனாகிறது.

அறவழியின் கண் நடத்தப்படுகின்ற இல்லறத்தைச் சிறக்கச் செய்வது குழந்தைச் செல்வமாகும். இக்குழந்தைச் செல்வம் அக்குடும்பம் வளர காரணமாய் அமைகின்ற தன்மையை,

‘‘கடவுட் கற்பொடு குடிக்கு விளக்காகிய
புதல்வர் பயந்த புகழ்மிகு சிறப்பின்
நன்னீராட்டி……………………’’(அகநா.184: 1-3)

என்ற அகநானூற்றுப் பாடல் வரிகளின் மூலம் அறிய முடிகிறது. அக்குழந்தையினைப் பெற்ற பெண்ணின் பெருமையையும் உயர்வாகப் போற்றியுள்ளமை தெளிவாகிறது. சங்ககால மக்கள் குடும்பத்தின் குலவிளக்கென குழந்தைப் பேற்றினைப் போற்றி வந்துள்ளனர் என்ற பண்பாட்டை உணர முடிகிறது.

### 1.3.3. மழலையின் மொழி:

குழந்தையின் மொழி இனிமையானது. மனதிற்கும் செவிக்கும் இன்பம் பயப்பது குழந்தைகள் பேசும் மொழிகள் குதலைச் சொற்கள், மழலைச் சொற்கள் என இரு வகைப்படும்.

குதலைச் சொற்கள் பொருள் புரியாது இருப்பன. நாவாற் பயின்றும் பேசப்படாத கேட்போர்க்கு மகிழ்ச்சியைத் தரும் இனிமை வாய்ந்தவை குதலைச் சொற்கள். இதனை,

"நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்" (அகநா.16 :4)

என்று அகநானூறு கூறுகின்றது.

சங்ககாலத் தமிழ்மக்கள் மழலை பேசும் மொழியின் இனிமை கண்டு இன்பம் கொண்டதை அறியமுடிகிறது.

"......................தளர்பு தளர்பு ஓடும்
பூங்கட் புதல்வன்......................" (அகநா.66:12-13)
"யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வன்"(அகநா.16:5)

மழலைச் சொல் இனிமையானது என்பதை,

"..................அத்தத்தா என்னும் நின்
தேமொழி கேட்டல் இனிது"(கலித்.80:14-15)

என்பன போன்ற அடிகள் விளக்கும்.

குழந்தையின் மழலைச் சொற்கள் யாழோசைப் போல இசையால் இன்பமும் செய்யாதது, காலத்தோடும் பொருந்தாதது, பொருள் அறிதற்கும் இயலாதது, ஆயினும் அவை பெற்றோருக்கு அருளுதல் தன்மையுடையன. இன்பத்தை விளைவிப்பன.

"குழவி தளர்நடை காண்ட லினிதே
அவர் மழலை கேட்ட லமிழ்தினு மினிதே"(இனியவை:15)

என்று இனியவை நாற்பதும் மழலையின் மாண்பினை உணர்த்தும்.

மேலும் நற்றிணையில்,

"அரிபெய் கிண்கிணி ஆர்ப்ப தெருவில்
தேர் நடைபயிற்றும் தேமொழிப் புதல்வன்" (நற்.250:2-3)

என்பதில் குழந்தையானது சிறய தேரைப் பிடித்துக்கொண்டு தெருவில் நடை பயிலும் பொழுது காலில் அணிந்துள்ள கிண்கிணியானது ஒலிக்குமாறு இனிய மொழி பேசும் புதல்வன் நடை பயின்றான் எனத் தலைவியானவள் கூறுவதாக அமைந்துள்ளது.

### 1.3.4. அன்பு மிளிர்தல் :

இல்லறத்தில் ஏற்படக்கூடிய அன்பு நிலைக்கும் குழந்தைபேறு ஒரு காரணமாக அமைகிறது. செவிலி தலைவியின் இல்லறம் காண வருகின்றாள். தான் கண்ட அன்புக் காட்சியை நற்றாய்க்கு எடுத்துரைக்கின்றாள்.

ஆண்மானுக்கும், பெண்மானுக்கும் இடையில் மான் கன்று படுத்திருந்ததைப் போலத் தலைவனுக்கும், தலைவிக்கும் இடையே புதல்வன் படுத்திருந்தான். இக்காட்சியை

“மறியிடைப் படுத்த மாண்பிணை போலப்

புதல்வன் நடுவணன் ஆக நன்றும்”(ஐங்.401:1-2)

என்று ஐங்குறுநூறு சித்திரிக்கின்றது.

மேலும்,

“புதல்வற் கவைஇயினன் தந்தை மென்மொழிப்

புதல்வன் தாயோ இருவரும் கவை இயினள்” (ஐங். 409: 1-2)

என்பதில் தலைவனானவன் புதல்வனைத் தழுவிக்கொண்டு படுத்திருந்தான். தலைவியோ அவ்விருவரையும் ஒருங்கே அணைத்துக்கொண்டாள். இவ்வின்பத்து மிகப்பெரிய பரப்பளவினை உடைய இவ்வுலகம் முழுவதுமே ஒப்பாகும். இவ்வாறு தலைவனும், தலைவியும் மகனோடு கூடியிருந்த குடும்பக் காட்சியில் அன்புமிளிர்தலை பேயனார் என்னும் புலவர் எடுத்துக் காட்டியுள்ளார்.

### 1.3.5. ஊடல் தீர்க்கும் வாயில்:

தலைவன் தலைவிக்கு ஏற்படும் சண்டைகளைத் தீர்த்து வைக்கும் சமாதானத் தூதுவர்களாய் குழந்தைகள் இருந்துள்ளனர். அவர்களுடைய சண்டையானது விரைவில் மறைந்து விடும். இக்கருத்தமைந்த பாடல் ஒன்று குறுந்தொகையில் காணப்படுகிறது.

வெளியே சென்றிருக்கும் தன்னுடைய கணவன் மேல் மனைவியானவள் கடுங்கோபத்துடன் இருக்கிறாள். இதைத் தெரிந்துக் கொண்ட அவள் கணவன் வீட்டிற்கு வரும்போதே தந்திரத்துடன் வருகிறான். வீட்டிற்குள் நுழைந்த அவன் நேராக தூங்கிக் கொண்டிருக்கும் புதல்வனை அணைத்துக் கொண்டு படுத்துவிட்டான். அதைக் கண்ட மனைவியானவள் அவளும் கட்டிலில் ஏறித் தன் கணவனுடைய முதுகுப் புறத்தை அணைத்துக் கொண்டு படுத்துவிட்டாள். இதனோடு அவர்களுடைய சண்டை முடிந்து விட்டது. இதனை

“கண்டிசின் பாண! பண்புடைத் தம்ம!
மாலை விரிந்த பசுவெண் ணிலவின் (ன்)
குறும்காற்கட்டில் நறும்பூஞ் சேக்கைப்
பள்ளிய யானையின் உயிரத்தனன் நசைஇ
புதல்வற்ற ழீஇனன் விறலவன்
புதல்வன் தாய் அவன்புறம் சுவைஇ யினளே” (குறுந்.359:1-6)

என்னும் பாடல் விளக்கும்.

கணவன் மனைவிக்குள் ஒற்றுமை ஏற்பட குழந்தை ஒரு கருவியாக உள்ளமை சுட்டுதற்குரியது.

### 1.3.6. குடிப்பெருமை:

ஒவ்வொரு குடும்பத்தையும் சிறப்படையச் செய்வது மக்கட் செல்வமாகும். குடும்பத்திற்கு விளக்காக அமைவது மக்கட்பேறு என அகநானூறு குறிப்பிடுகின்றது.

“கடவுட் கற்பொடு குடிக்கு விளக்காகிய
புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்
நன்ன ராட்டி” (அகநா.184:1-3)

தெய்வத்தன்மை பொருந்திய கற்புடன் குடும்பத்திற்குச் சிறப்பினைத் தருவது மகனைப் பெற்றத் தாய்க்கு மட்டுமன்று, குடும்பத்திற்கும் உரியதாகும். இதன் மூலம் மக்களைப் பெற்ற மகளிர் சமுதாயத்தில் மதிக்கப்பெற்றனர் என்பதை அறிய இயலும்.

வாழையடி வாழையாக வரும் குடும்பத்தின் மரபு நெறி போற்றுவது மக்கட் செல்வமாகும் தம் முன்னோரின் புகழை, பெருமையை விளங்கச் செய்வதும் மக்கட் பேறேயாகும்.

"தந்தையர் ஒப்பர் மக்கள்"(25)

தந்தையறிவை ஒத்ததே மகனுடைய அறிவாகும் என்பது பண்பாட்டுத் தொடர்ச்சியினைச் சுட்டும்.

## 1.4. பெண்களின் செயல்பாடு:

எந்தவொரு குடும்பத்திற்கும் பெண்களின் செயல்பாடுகளே முக்கியமாகத் திகழ்கிறது. ஆண்கள் பொருளீட்டுபவர்களாக இருந்தாலும் குடும்பத்தை வழிநடத்திச் செல்லக்கூடியவர்களாக பெண்களே இருந்தனர். வாழ்க்கை என்றால் எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என்றில்லாமல் இப்படித்தான் வாழ வேண்டும் என்னும் உயரிய கொள்கையை வகுத்துக் கொண்டு வாழ்ந்தவர்கள் சங்க கால மக்கள்.

தலைவனும், தலைவியும் மனமொத்து வாழும் குடும்ப வாழ்வினில் ஆண்கள் வீரத்திலும் பொருள் ஈட்டுவதிலும் சிறந்து விளங்கினர். பெண்கள் இல்லத்தைக் காப்பதிலும் இல்லறச் செயல்களைச் சிறப்பாகச் செய்பவர்களாகவும் இருந்துள்ளனர். இல்லறத்தில் இருவரும் இணைந்து செயலாற்றினாலும் சிறந்து விளங்கியவர்கள் பெண்கள். "தம் பெண்மைத் தன்மையின் இயல்பினை அழியாது காத்துக்கொள்ளுதலும் தம் கணவரைப் பேணி அவர் சொல் வழி அடங்கி ஒழுகுதலும் தம் இருவரிடத்தும் நிறைந்த புகழினை நீங்காமல் பாதுகாத்தலும் பெண்டிற்குரிய கடமைகளாக இருந்தன என்கிறார் செந்துறை முத்து"(26).

தமிழருடைய இல்வாழ்க்கை உள்ளத்தால் ஒன்றுபட்ட தலைவன் தலைவியரைக் கொண்டதாக இருந்தது. இதனால் அகவாழ்வில் அன்பு தழைத்து ஓங்கியது. அறம் செழித்து வளர்ந்தது.(27)

குடும்பத்தில் தலைவியே சிறப்புப் பெற்றவளாகக் கருதப்படுகிறாள். இல்வாழ்க்கையில் முதன்மை இடத்தைப் பெண்ணே பெற்றாள். அவள் அடக்குமுறைக்கு ஆளாகி அல்லற்படவில்லை. தனி உரிமையோடு நற்சிந்தனை உடையவளாக இல்வாழ்க்கை அளவில் விளங்கினாள். குடும்ப வாழ்க்கையில் ஆண்களோடு ஒத்த உரிமை உடையவர்களாக மகளிர் விளங்கினர் என பெண்களின் சிறப்புகளை க.த.திருநாவுக்கரசு எடுத்துரைத்துள்ளார். பெண்மையின் சிறப்புணர்ந்த வள்ளுவர் வாழ்க்கைத் துணைநலம் என்ற தனி அதிகாரத்தையே படைத்துள்ளார். பெண் தன் கணவன் மேல் அளவற்ற அன்பு கொண்டவள் தானே சமைத்து தன் கணவனுக்கு ஒரு பெண் உணவு பரிமாறுவதை,

“தான் துழந்தட்ட தீம்புனிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று உண்ணுதல் முகனே” (குறுந்.167:4-6)

என்றும் குறுந்தொகைப்பாடல் உணர்த்துகிறது. தன் உயிராகக் கருதும் கணவன் முகத்தில் தோன்றக் கூடிய மகிழ்ச்சியை தன் மகிழ்ச்சியாக எண்ணி மகிழ்பவள் அத்தலைவி. தன் பிறந்தகத்தில் பால்சோறு உண்டு வளர்ந்திடுவதும் கணவன் வீடு வறுமையுற்ற காலத்தில் ஒரு பொழுது விட்டு ஒரு பொழுது உண்ணும் இயல்பினையும் மகிழ்ச்சியுடன் ஏற்றதை,

“ஒழுகு நீர் நுணங்கு அறல் போலப்
பொழுது மறுத்த உண்ணும் சிறுமதுகையளே” (நற்.110:12-13)

என்னும் பாடல் விளக்கும்.

கணவனுடைய இன்பத்திலும், துன்பத்திலும் பங்கு கொள்பவள் மனைவி, ஏன் பிறந்த வீட்டின் பெருமையினைப் பேசாது கணவன் வீட்டுப் பெருமையினை வளர்ப்பவளாக, காப்பவளாகப் பெண் விளங்குகிறாள்.

### 1.4.1.இல்லறப் பண்பு:

அன்பு பண்பாகவும், அறம் பயனாகவும் அமைவது இல்வாழ்க்கை. பண்டைத் தமிழர் திருமண வாழ்வை இல்லறம் என்றனர். இல்லிலிருந்து அறம் பல புரிந்தும் இல்வாழ்வின் முடிந்த பயனாக அறத்தைப் போற்றியும் வாழ்ந்தனர். அகவாழ்க்கையில் தலைவன் தலைவி இருவரும் அன்பு உடையோராகவும் அறம் புரிவோராகவும் விளங்கினர். இதனை

“காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே”[(28)]

என்ற தொல்காப்பிய நூற்பா உணர்த்தும்.

மனம் ஒத்த அன்பே இல்வாழ்வின் தலையாய பண்பு என்று கருதினர். உயிர் கலந்து ஒன்றிய பழமையான நட்புடனும் குற்றமற்ற அன்பினால் ஒன்றுபட்ட உள்ளமுடனும் தலைவனும் தலைவியும் வாழ்ந்தனர்.

தலைவனும் தலைவியும் உடலும் உயிரும் போல் இயைந்த அன்புடன் விளங்கிய திறத்தினை,

“யாக்கைக்கு உயிரியைந் தன்ன நட்பின்
வாழ்தல் அன்ன காதல் அவ்வுயிர்
சாதல் அன்ன பிரிவறி யோளே” (அகநா.339:12-14)

என்று அகநானூறு காட்டுகின்றது. ஓர் ஆடையைப் பகுத்து உடுத்தும் வறுமை நிலையிலும் மனம் ஒன்றி வாழும் வாழ்க்கைச் சிறப்பினை,

"ஒன்றறன் கூறாடை யுடுப்பவரே யாயினும்
ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை" (கலித்.18:10-11)

என்று கலித்தொகை குறிப்பிடுகிறது.

கணவன் தன்னை விட்டுப் பிரிந்து சென்றிருக்கும் பொழுதும் அவள் மேல் வெறுப்படையாமல் அவனுடைய நலத்திலே கருத்துடையவளாக இருந்து அவன் கருதிச் சென்ற செயலில் வெற்றி பெற்று விரைவில் இல்லம் திரும்ப வேண்டும் என்று விரும்புபவள்.

வினைமேற் சென்ற தலைவனும் தலைவியிடம் தான் குறித்துச் சென்ற கார்காலமும் வந்துவிட்டது. அவளைக் கண்டு துன்பத்தைப் போக்க வேண்டும் என்று விரைந்து தேரின் மேல் வந்து தலைவியைக் காண்கிறான். இப்படி கணவனும், மனைவியும் ஒருவர் மேல் ஒருவர் அன்புடையவர்களாக வாழ்ந்தனர். கணவனின் இன்பத்தில் மட்டும் பங்குகொள்ளாமல் துன்பத்திலும் பங்கு கொள்பவள் நல்ல மனைவியாவாள்.

"அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு
துன்பம் துணையாக நாடின் அதுவல்லது
இன்பமும் உண்டோ எமக்கு" (கலித்.6:9-11)

என்பதில் தலைவன் பிரிந்து செல்லும் பொழுது அத்தலைவி தன்னையும் உடன் அழைத்துச் செல்ல வேண்டுகிறாள். அப்போது தலைவன் பாலையின் கடுமையினைக் கூறி மறுக்கிறான். தங்களுடன் வருவதே இன்பம் எனக் கூறும் மனைவியின் அன்பு நிலையினை அறியமுடிகிறது.

"அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தேன்மயங்கு பாலினும் இனிய அவர் நாட்டு
உவலைக் கூவற கீழ
மானுண்டெஞ்சிய கலிழி நீரே" (ஐங்.203:1-4)

கணவனையே உயிராகக் கருதி வாழும் மனைவி அவன் நலனையே தன் நலனாக எண்ணுபவள். கணவன் வீடு வறுமையுற்ற போதிலும் தன் பிறந்த வீட்டை எண்ணாது இங்கு வாழ்வதையே பெருமையாக கருதுகிறாள். கணவனுடைய வீட்டுத் தோட்டத்தில் தழைகள் வீழ்ந்து அழுகி நாற்றெமெடுக்கக் கூடிய சிறு நீர் நிலையுண்டு அதிலுள்ள நீரை, மான்கள் குடித்து விட்ட நிலையில் அதில் எஞ்சியுள்ள நீரையே அவள் பருகுகிறாள். அந்த நீரானது தன் தாய் வீட்டில் தான் உண்ட தேன் கலந்த பாலினும் தெவிட்டாமல் இனிப்பாக இருப்பதாக அத்தலைவி கூறுவது அன்பின் வெளிப்பாடாக அமைகிறது. இதன் வழி அன்பு வழிப்பட்ட தமிழர்களின் இல்லறப் பண்பாட்டை உணரமுடிகிறது.

சங்க நூல்கள் எல்லாம் இல்லற வாழ்க்கையைத் தான் ஏற்றமுடையதாகக் கூறுகின்றன. அகப்பொருள் பற்றிக் கூறும் நூல்கள் அனைத்தும் இல்லறத்தைப் பாராட்டிக் கூறுவனவே. நாட்டிலே நல்ல அமைதியும், அரசியலும் இருந்தால் தான் ஒவ்வொரு குடும்பமும் நன்றாக வாழ முடியும்''(29) என்கிறார் சாமி.சிதம்பரனார்.

இனிய இல்லறம் சிறக்க வேண்டுமானால் கணவனும், மனைவியும் கருத்தொருமித்தவர்களாக வாழ வேண்டும். தொழில் செய்து பொருளீட்டும் காதலனுக்கு காதலி தான் வாழ்க்கையிலே உற்சாகமூட்டும் உயிர். இதைப் போலவே இல்லத்திலே இருந்து கடமையைச் செய்யும் காதலிக்கு காதலனே

இன்பத்தையும் மகிழ்ச்சியையும் ஊட்டும் உயிர். நமது காதலர் தான் இவ்வுண்மையை நமக்குரைத்தார் ஆதலால் தோழியே நீ வருந்தாதே! அவர் இப்பொழுது பிரிந்து செல்ல மாட்டார்.

''வினையே ஆடவர்க்கு உயிரே வாணுதல்
மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என
நமக்குரைத் தோரும் தாமே
அழாஅல் தோழி அழுங்குவர் செலவே''(குறுந்.135:1-4)

இவ்வாறு இல்லறத்தில் வாழ்கின்ற தம்பதிகள் ஒன்றுபட்டு வாழ்ந்தமையை இப்பாடல் உணர்த்துகிறது. அகவாழ்வுக்கு அன்பு அடிப்படையாக அமைந்தது. ''மனைக்கு விளக்கமாகிய வானுதல்'' என மனைவி புகழப்பட்டாள். மனைவியின் உயிராகக் கணவன் புகழப்பட்டான். மனம் ஒத்த அன்பே இல்வாழ்க்கையின் அடிப்படைப் பண்பாக விளங்கியது.

### 1.4.2. ஆடவர் மகளிர் அறம்:

மனையறம் புரிதலை மகளிரும் வினையறம் புரிதலை ஆடவரும் மேற்கொண்டதால் இல்லறம் சிறந்து விளங்கியது. கணவனும் மனைவியும் இணைந்து முறைப்படி நடத்தும் இல்லறச் சிறப்பினை,

"மனையுறை வாழ்க்கை வல்லியாங்கு
மருவி னியவு முளவோ" (குறுந். 322: 5-6)

என்று குறுந்தொகை கூறுகிறது.

ஆடவர் வினை மேற்செல்லலைத் தம் இயல்பாகவும் மகளிர் அதனை மறுத்துக் கூறாது உடன்படுதலைத் தம் பண்பாகவும் கொண்டு இருந்தனர்.

அறஞ்செய்தற்குப் பொருள் இன்றியமையாதது என்பதால் பொருள்வயிற் பிரிவது ஆடவர் பண்பாயிருந்தது என்று குறுந்தொகை கூறுகிறது.

### 1.4.3. கணவனைப் பேணுதல்:

கண்கண்ட தெய்வமென கணவனைப் போற்றியவர்கள் சங்ககாலத்துப் பெண்கள். அன்பினால் பிணைக்கப்பட்ட குடும்பம் என்ற அமைப்பில் தலைவி மனம் புரிந்த நாள் முதலே தலை நாள் போன்று விருப்பு உடையவாளகக் காணப்பட்டாள்.

"கனவிலும் பிரிவறியவளே அதன் தலை
முன் தான் கண்ட ஞான்றினும்
பின்பெரிது அளிக்கும் தன் பண்பினானே" (குறுந்.178:20-22)

இப்பாடல் கணவன் மீது தலைவி தான் கொண்டிருக்கும் அன்பினைக் காட்டுவதாக அமைகிறது. இப்படிப்பட்ட கணவன் மனைவி உறவு நிலையானது ஒரு பிறப்பில் மட்டும் முடிந்து விடக் கூடாது, இன்னும் பல பிறவிகளிலும் தொடரவேண்டும் எனத் இத்தலைவி எண்ணுவதை

"இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியரென் கணவனை
யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே" (குறுந். 49: 3-5)

இக்குறுந்தொகைப் பாடல் எடுத்துரைப்பதாக அமைகிறது.

மனைவியானவள் தன் கணவன் மீது வைத்திருக்கும் அன்பையும் இல்லறத்தில் அவர்கள் ஈடுபட்ட சிறப்பினையும் அறிந்து கொள்ள முடிகிறது. எப்படிப்பட்ட சூழலிலும் தன் கணவனைப் பிரியாது வாழ வேண்டும் என எண்ணும் தலைவியின் பண்பாட்டை உணர்ந்து கொள்ள முடிகிறது.

### 1.4.4.குடும்பம் நடத்தும் பாங்கு:

கற்பு மணம் புரிந்த தலைவன் தலைவியின் வாழ்வில் என்றும் மகிழ்ச்சியானது நிறைந்திருக்கும். இருவரும் கருத்தொருமித்து இல்லறத்திற்கான கடமைகளைச் செய்வர்.

"கலம் சிதை இல்லத்துக் காழ் கொண்டு தேற்றக்
கலங்கிய நீர்போல் தனித்து நலம் பெற்றாள்" (கலித்-142:64-65)

எனும் பாடல் சங்ககாலப் பெண்கள் காலை முதல் இரவு வரை இல்லப்பணிகளைச் செய்தமைக்குச் சான்றாக அமைகிறது. கலங்கிப் போயிருந்த நீரைத் தெளிய வைத்த செய்தியினையும் இப்பாடல் உணர்த்துகிறது.

### 1.4.5. உணவு சேமித்தல்:

பெண்கள் உணவு சமைப்பது மட்டுமின்றி உணவு சமைப்பதற்கான பொருள்களையும் சேகரித்துள்ளனர் என்பதை

"சில் உணாத் தந்த சிறூர் பெண்டிர்
திரி வயின் தெவிட்டும் சேண்புலக் குடிஞைப்
பைதல் மென்குரல் ஐது வந்து இசைத்தொறும்"(அகநா-283:5-7)

சிறிய ஊர்களில் வாழக்கூடிய பெண்கள் பல கிளைகளை உடைய கொம்புகளைக் கொண்ட மான்களை விரட்டியடித்து அவை உண்டு எஞ்சிய தினை முதலிய சிறிய உணவுப் பொருள்களைக் கொண்டு வந்து சமைத்தமையை எடுத்துரைக்கிறது இப்பாடல்.

### 1.4.6. நெல் குற்றல்:

நெல்லினை உரலில் உலக்கையால் குற்றி சமையல் செய்து உண்டனர் சங்ககாலப் பெண்கள்.

"கொடு நுண் ஓதி மகளிர் ஒக்கிய
தொடி மாண் உலக்கைத் தூண்டு உரல் பரணி"(அகநா.9:11-12)

என்பதில் வளைந்த நுண்ணிய கூந்தலை உடைய பெண்கள் பூண் கொண்ட உலக்கையால் உயர்த்திக் குற்றக்கூடிய ஒலியானது நீண்ட பெரிய மலையிலுள்ள ஆந்தை ஒலியோடு மாறி மாறிக் குன்றுகளில் ஒலிக்கும் என்னும் கருத்தை உணர்த்தும் இப்பாடல் வழி பெண்கள் நெல்குற்றிய செய்தியினை அறியமுடிகிறது.

"பெரும்பூண் பொறையன் பேஎம் முதிர் கொல்லி" (குறுந்.89)

பரந்த அடிப்பகுதியினை உடைய உரலில் நெல்லை இட்டு வள்ளைப் பாட்டுப் பாடி உலக்கையை குற்றுவர் என்னும் கருத்தை இதன் வழி உணர முடிகிறது. குடும்பத்தில் பெண்களின் செயல்பாடு எண்ணற்றவையாக இருப்பினும் ஆய்வு விரிந்து பெருகும் என்பதால் சிலவற்றை மட்டும் விளக்கப்பட்டுள்ளது. குடும்பச் சூழலில் பார்க்கும் போது பண்பாடானது ஒவ்வொரு நிலையிலும் வெளிப்பட்டு இருப்பதை உணர முடிகிறது.

### 1.4.7. ஈகையும், பொருளும்:

தன்னிடம் இரந்து நின்றவர்க்கு இல்லை எனக் கூறாமல் தன்னால் இயன்ற மட்டும் உதவுதல் தமிழர் பண்பாட்டில் தலை சிறந்ததாகும். மனிதன் செய்யக்கூடிய நல்லறங்களுள் ஒன்று ஈகையாகும். வறுமையின் கொடுமையால்

வாடித் துன்புறும் மக்களுக்கு வேண்டிய பொருட்களை வழங்கி அவர்களின் துன்பம் துடைப்பதாகவும் இது சிறந்த அறமாகவும் கருதப்பட்டது. பிறருக்கு உதவும் ஈகைக்குணம் கொண்டவர்கள் இவ்உலகில் என்றும் புகழையும் பெரும் பேற்றினையும் அடைவர். இதன் சிறப்புணர்ந்த வள்ளுவப் பெருந்தகை 'ஈகை' என்ற ஒரு அதிகாரத்தையே படைத்துள்ளார்.

''வறியார்க் கொன்று ஈவதே ஈகை மற்றெல்லாம்
குறி எதிர்ப்பை நீரது உடைத்து''(30)

இல்லாத ஏழைகளுக்கு ஏதேனும் ஒன்று கொடுத்து உதவுதல் ஈகை என்கிறார்.

''ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு''(31)

ஒருவர்க்கு ஒன்றினைக் கொடுத்து உதவி செய்து வாழ வேண்டும். அவ்வாறு உதவாமல் வாழ்பவன் பெற்றிருக்கும் உயிரினால் எவ்விதப் பலனும் இல்லை என ஈதலின் சிறப்பினை எடுத்துரைத்துள்ளார் வள்ளுவர். ஈதலும், பொருளும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையன. பொருள் இருந்தால் மட்டுமே ஈதல் செய்ய முடியும்.

எனவே இல்லறம் நடத்துவதற்கு பொருள் அவசியம் பொருள் தேடுவதற்கு தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்லுகின்ற நிலையினை சங்கப் பாடல்களில் காண முடிகிறது.

பொருள் தேடுவதற்காகத் தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து செல்கிறான். இதனால் வருந்தும் தலைவியைத் தோழி தேற்றுகிறாள்.

"இல்லோர்க் கில்லென் றியைவது சுரத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்" (அகநா.53: 13-14)

என்பதில் தன்னை நாடி வந்து பொருள் கேட்பவர்க்கு இல்லை என்று கூறாத எண்ணம் உடைய தலைவன் பொருள் மீது கொண்ட பற்றினால் மட்டுமல்ல. ஈதலே ஒருவருக்கு கடமையென உணர்ந்து உன்னைப் பிரிந்துள்ளான். அதனால் வருந்தாதிரு என்று தலைவியைத் தேற்றக்கூடிய பாடலின் வழி ஈதலின் சிறப்பும் பொருளின் தேவையினையும் அறியமுடிகிறது.

"கொடைக்கடன் என்ற கோடா நெஞ்சின்"(அகநா.168-6)

கொடைத்தன்மையினைத் தன்னுடைய கடமை என்ற நெஞ்சம் கொண்டவர்கள் என்பதை இதன் வழி உணரமுடிகிறது.

"பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை"[32]

என்ற வள்ளுவரின் வாய்மொழிக்கேற்ப

"அருள் நன்கு உடையர் ஆயினும் ஈதல்
பொருள்இல் லோர்க்கு அ∴து இயை யாதுஆகுதல்" (அக.நா.335:2-3)

அதாவது ஈதல் என்ற நல்லறத்தைச் செய்வேன், பொருளினைப் பெற்றிருக்க வேண்டும். பொருள் இல்லாதவன் ஈதல் என்ற அறத்தைச் செய்ய இயலாது என்கிறது அகநானூறு.

பொருள் ஈட்டத் தலைவன் செல்ல விரும்புகிறான். அவ்வாறு சென்றால் தலைவி அத்துயரை எவ்வாறு பொறுத்துக்கொள்வான் என நெஞ்சம் நினைக்கிறது.

தலைவியை விட பொருள் சிறந்தது, பொருள் இருந்தால் தான் பிறருக்கு ஈதல் செய்ய இயலும். ஆதலால் பிரிந்து செல்லலாம் எனக் கருதும் தலைவனின் எண்ணத்தை எடுத்தியம்பப்படுகிறது.

பொருளின் தேவையை நன்கறிந்த பழந்தமிழர்கள் அதனை ஈட்டும் பொருட்டு தன் மனைவியைப் பிரிந்து நெடுந்தொலைவு சென்றமையை சங்கப் பாடல்களின் வழி அறியலாம். பொருள் உடையவர்களாயின் சமுதாயத்தின் இகழ்ச்சிக்கு ஆட்பட்டவர்கள் கூட மதிக்கப்படுவர். இது உலகியல் உண்மை ஆகும். இப்பொருளமைந்த பாடல்கள் பொருள்வயிற் பிரிவு எனப் போற்றப்படுகிறது.

பொருள்வயிற் பிரிவு என்னும் இத்துறை சங்கப் புலவர்களின் நெஞ்சை அள்ளிய துறைகளில் ஒன்று. இன்பமும் கடமையும் போராடும் இடமாக நல்ல உணர்ச்சிகள் மோதிக்கொள்ளும் இடமாக இத்துறை அமைந்திருப்பதைக் காணலாம்”**(33)** என வ.சுப.மாணிக்கம் குறிப்பிடுகிறார்.

உலகம் தோன்றிய காலம் முதல் பொருளீட்டுதலை பழந்தமிழர்கள் செய்து கொண்டிருந்ததனை,

“உலகம் படைத்த காலை-தலைவ
மறந்தனர் கொல்லோ சிறந்திசினோரே” (நற்.337:1-2)

என்னும் அடிகள் வழி உணரமுடிகிறது.

பொருள் இல்லாவிட்டால் இல்லறத்தை இனிதே நடத்த இயலாது. எனவே, ஒவ்வொருவரும் தாமாகவே வருந்தி உழைத்துப் பொருள் தேடினர்.

தேடிய பொருளால் தாமும் இன்புற்று பிறருக்கும் உதவவேண்டும் என்ற கொள்கையுடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

"உள்ளது சிதைப்போர் உளர் எனப்படாஅர்
இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவுஎனச்
சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்
சென்றனர் வாழி தோழி என்றும்
கூற்றத்தன்ன கொலை வேல் மறவர்
ஆற்றிருந்து அல்கி வழங்குநர்ச் செகுத்த
படுமுடைப் பருந்து பார்த்திருக்கும்
நெடுமூது இடைய நீரில் ஆறே" (குறுந்.283:1-8)

முன்னோர்கள் தேடிவைத்த செல்வத்தைச் செலவழித்துக் கொண்டிருப்பவர்கள் செல்வம் உள்ளவர் என்று சொல்லப்படமாட்டார். அப்படிப்பட்டவர்கள் வறுமைக்கு ஆளாவார்கள். வறியவர்களின் இல்வாழ்வு என்பது பிச்சை எடுத்து வாழ்வதைக் காட்டிலும் இழிவானது. இவ்வாறு முன்னோர்கள் கூறியிருப்பதை புரியும்படியாக விளங்கிய பிறகு தான் தலைவன் பொருள் தேடப் புறப்பட்டுச் சென்றான் எனத் தலைவி கூறுவதன் வழி பண்டைத் தமிழரின் இல்லற நோக்கம் புலனாகிறது.

"அறன் கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்
பிறன் கடைச் செலா அச்செல்வம் இரண்டும்
பொருளின் ஆகும்" (அகநா.155:1-3)

செல்வம் இல்லாவிட்டால் இல்லறத்தை நன்றாக நடத்த இயலாது. இல்லறத்தின் நோக்கமாக ஈகையைச் செய்ய முடியாது என்ற உண்மையை எடுத்துரைப்பதாக இப்பாடல் அமைகிறது.

“உயிரினும் சிறந்த ஒண்பொருள் தருமார்
நன்றுபுரி காட்சியர் சென்றனர்” (அகநா-245:1-2)

உயிரினும் சிறந்த உயர்ந்த செல்வத்தைத் தேடும் பொருட்டு நன்மை செய்யும் அறிவுடையவர் சென்றுள்ளார். எல்லா உயிர்களின் மேலும் இரக்கம் கொண்டவர்கள் பண்டைத் தமிழர்கள் சிற்றுயிர்களுக்குக் கூட தீங்கிழைக்க மாட்டார்கள். இவ்வுண்மையை ஒரு பாடலின் வரி அறிய முடிகிறது.

‘‘புணரி பொருத பூமணல் அடைகரை
ஆழி மருங்கின் அலவன் ஓம்பி
வலவன் வள்பு ஆய்ந்து ஊர
நிலவு விரிந்தன்றால் கானலானே’’ (நற்.11:6-9)

அலைகள் மோதுகின்ற ஒளி பொருந்திய மணல் நிறைந்த கடற்கரை. அக்கடற்கரையிலே சக்கரங்களின் அடியிலே நண்டுகள் அகப்பட்டுக் கொள்ளாதபடி பாதுகாத்துக் கொண்டே தேர்ப்பாகன் குதிரைகளின் வாலைப் பிடித்து இழுத்தும் கவனத்துடன் தேரை ஓட்டினான். தேரில் தலைவன் இருக்கிறான். இத்தகு இரக்கம் கொண்டவன் தலைவனும் தேர்ப்பாகனும். பிறர்படும் துன்பம் கண்டால் தமிழர்கள் பொறுக்க மாட்டார்கள். துன்பம் போக்க உதவுவதே மனிதப் பண்பு. இத்தகு அருங்குணம் மனிதர்களுக்கும் உண்டு என்பதை அறிவுறுத்தும் வகையில் பாடல்களைப் புலவர்கள் பாடியுள்ளனர்.

‘‘நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்
செல்வம் அன்று தம் செய்வினைப் பயனே
சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே’’(நற்.210:5-9)

அதிகாரத்துடன் பேசுவதும் செல்வம் செல்லும் வாகனங்களில் செல்வதும் செல்வம் அன்று. நாம் செய்யும் செயலின் மூலமாகப் பெறும் நற்பயனையே சான்றோர் செல்வம் என்றனர். பிறர் துன்பம் துடைக்க ஓடிச்சென்று அவர்களிடம் இரக்கம் காட்டுவதாகிய செல்வமே சிறந்த அழியாத செல்வமாகும். ஒரு மனிதனுடைய சிறந்த செல்வம் எது என்பதையும் தமிழரின் சிறந்த பண்பாட்டினை எடுத்துரைப்பதாகவும் இந்நற்றினைப் பாடல் விளக்குகின்றமை உணரமுடிகிறது.

“இரப்போர் ஏந்து கைநிறையப் புரப்போர்
புலம்பில் உள்ளமொடு புதுவதந்து உவக்கும்
அரும்பொருள் வேட்டம் எண்ணி” (அகநா.389:11-13)

பொருளை இரப்பவர்கள் ஏந்திய கைகளில் பொருள் நிறையும்படி புரப்பவர்கள் துன்பமில்லா உள்ளத்துடன் பொருள்களைக் கொடுத்து மகிழ்வதற்கு காரணமாக இருப்பது பொருள் எனப் பொருளின் சிறப்பு உணர்த்தப்படுகிறது. இவற்றின் வழி இல்லறத்தின் நோக்கங்களில் ஒன்றான ஈகையினையும் ஈகைக்கு வேண்டப்படும் பொருளின் சிறப்பினையும் அறியமுடிகிறது.

### 1.4.8. சுற்றம் போற்றல்:

சுற்றம் போற்றுதல் என்பது உறவினர்களுக்கு உணவு முதலியன தந்து பாதுகாத்தல் ஆகும். சுற்றத்தாரிடம் பிழைகள் காணப்பட்டாலும் அதனைப் பெரிதாகக் கருதாமல் பொறுத்துப் போற்றுதல் தொல்காப்பியர் தலைவியின் பண்புகளுள் ஒன்றாக “சுற்றம் போற்றுதலைக்” கூறியுள்ளார்.

பலபடை மாக்களும் உள்ளிட்ட சுற்றம் பேணி அவை உண்ட பின் உண்டல் என உரை விளக்கம் செய்துள்ளதால் கணவனின் சுற்றத்தார், நாட்டினர், படைமக்கள், கால்நடைகள் ஆகிய அனைத்தையும் பாதுகாக்கும் கடமை மக்களிடம் இருந்தமை அறியலாம். அறத்தைப் பின்பற்றி வாழ்தலும் சுற்றத்தாரைப் பேணுதலும் அறவோர்க்கு அளித்தும் அந்தணர் ஓம்பியும் வாழ்ந்துள்ளமை தெரியவருகிறது.

### 1.4.9. விருந்தோம்பல்:

பண்டைத் தமிழர்கள் போற்றிய பண்புகளில் தலையாய பண்பாகப் போற்றப்படுவது விருந்தோம்பலாகும். பண்பாட்டைப் போற்றி வாழ்ந்தவர்கள் இவர்கள். விருந்து என்றால் புதுமை, புதியவர் என்று பொருள்படும். "விருந்தே புதுமை" என்பார் தொல்காப்பியர். பழங்காலத்தில் முன் அறியாதவர்களாய் வீடு தேடி வருவோரே விருந்தினர் எனப் போற்றினர். அப்படி வரக்கூடிய விருந்தினர்களை அகமும் முகமும் மலர வரவேற்று விருந்தளித்தனர். விருந்தோம்புவோர்க்கு வேண்டிய இன்றியமையாப் பண்புகள் அகமலர்ச்சி, முகமலர்ச்சி, இன்சொல் ஆகியன. விருந்தினர் அனிச்ச மலரைப் போன்ற மென்மைத் தன்மையர். அனிச்சமலர் முகர்ந்தால் வாடிவிடும். விருந்தினர் முகம் மாறுபட்டு நோக்கினாலே வாடிவிடும் தன்மை உடையவர் என்பதை வள்ளுவர்

"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து"(34)

என்ற குறளின் மூலம் எடுத்துக்காட்டுகிறார்.

மகளிரின் இன்றியமையாப் பண்புகளுள் ஒன்று விருந்தோம்பல். தமிழர்கள் விருந்தோம்புதலில் தலைசிறந்தவர்கள். இல்லறத்தில்

வாழ்வோர்க்குரிய கடமைகளில் ஒன்று அவர்களுடைய விருந்தோம்பும் குணமே அவர்தம் பண்பாட்டை விளக்கும். தலைவன் புறத்தொழுக்கத்தை மேற்கொண்டபொழுதும் விருந்தாற்றுதல் பொருட்டு

"நெற்பல பொலிக பொன் பெரிது சிறக்க" (ஐங்.1-2)

இல்லறக் கடமையை நிறைவேற்றுதற் பொருட்டும் நினைந்தொழுகும் தலைவியின் பண்பாட்டை இப்பாடல் உணர்த்துவதாக அமைகிறது. வீட்டிற்கு வருவோர் அனைவரையும் வரவேற்று அவர்களை உபசரிக்கும் பண்பினைச் சங்கப்பாடலில் காணமுடிகிறது.

"அல்லி லாயினும் விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின் மெல்லியல்" (நற்.14:9-10)

இரவு நேரத்தில் விருந்தினர் வந்தாலும் மனைவி கணவனுடன் விருந்தினரை மனமகிழ்வோடு வரவேற்று விருந்து படைத்த செய்தியை இப்பாடல் புலப்படுத்துகிறது.

"மாலைப் பலர்புகு வாயில் அடைப்பக்
கடவுநர் வருவீர் உளீரோ" (குறுந்.118: 3-4)

இராக் காலத்தில் கதவை அடைப்போர் விருந்தினர்களை வீட்டிற்குள் புகவிட்டுப் பின்னால் யாரேனும் வருவீர் உளரோ என்று வினவி ஒருவரும் இல்லாததை அறிந்த பின்னரே வாயிற்கதவை அடைப்பர் என்று இக்குறுந்தொகைப் பாடல் விளக்குகிறது.

"மனை முதல் வினையொடும் உவப்ப" (அகநா..51-12)

மகளிர்க்குரிய விருந்தோம்பலை இல்வாழ்க்கைத் தொழில் என்னும் பொருள்பட அகநானூறு விருந்தோம்பலைப் போற்றுகிறது.

“வரையா நிரையத்துச் செலீ இயரோ அன்னை
ஒருநாள் நகைமுக விருந்தினன் வந்தென
பகைமுக ஊரின் துஞ்சலோ இலளே”(குறுந்.292, 6-8)

களவு வாழ்வின் பொழுது தலைவன் தலைவியினுடைய இல்லத்திற்கு விருந்தினனாக வருகிறான். அப்போது தலைவியின் தாய் அவனைக் குறித்து அறிந்து கொண்டமையை இப்பாடல் உணர்த்துகிறது.

பண்டமாற்று முறை, வழக்கிலிருந்த அக்காலத்தில் போக்குவரத்து வசதிகளும் இல்லாத சூழ்நிலை நிலவியது. எனவே, இரவலர்கள் மட்டுமின்றி ஏனையோரும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கால்நடையாக நடந்து செல்ல வேண்டியிருந்தது. உணவு விடுதிகள் இல்லாத காரணத்தினால் உண்டிக்கும் உறையுளுக்கும் அவர்கள் செல்லும் ஊர்களையே நம்ப வேண்டியிருந்தது. ஆகவே, புதிதாக வருவோர்க்குப் பசிக்கு உணவளிக்க வேண்டிய நிலை இருந்தமையால் விருந்தோம்பும் பண்பாடு தமிழ் இலக்கியங்களில் உருவாகிறது[35] என்கிறார் வெ.முத்துலக்குமி.

“புகா அக்காலைப் புக்கெதிர் பட்டுழிப்
பகா விருந்தின் பகுதின் கண்ணும்
வேளா ஏணதிடும் விருந்தின் கண்ணும்”[36]

எனக் களவியலும்

“விருந்தோடு நல்லவை வேண்டற் கண்ணும்”[37]

எனக் கற்பியலும் விருந்தினரைப் பற்றி எடுத்துரைத்துள்ளது.

தமிழ்நாட்டு மக்களின் குருதியோடு கலந்துள்ள பரம்பரைப் பண்பு விருந்தோம்பல். தம் இல்லம் நாடிவரும் விருந்தினரை உபசரித்து விருந்தளிப்பதை தம் பிறவிப் பண்பாக ஒவ்வொரு தமிழனும் கருதினான். விருந்தினர்கள் தம் இல்லத்தில் வந்து விருந்துண்டு செல்வதை ஒரு பேறாகவே எண்ணினார்கள்”(38) என்கிறார் ஆறு.அழகப்பன்.

“பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை”(39)

எல்லோருக்கும் கொடுத்து உண்ண வேண்டும் என்கிறார் வள்ளுவப்பெருந்தகை.

விருந்தினராக வந்தவர் உறவினராக இல்லை என்றாலும் பொருள்தேடிச் சென்ற தலைமக்களை அங்கு வாழும் மக்கள் தம் விருந்தினராகப் போற்றும் நற்பண்பை

“வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பிற்
செறிந்த சேரிச் செம்மல் மூதூர்” (அகநா.15, 6-7)

என்னும் பாடலடி உணர்த்துகிறது. உடன்போக்கினை மேற்கொண்ட தலை மக்களை இடைச்சுரத்தில் உள்ளவர்கள் விருந்தினராகப் போற்றி உபசரித்த தன்மையை அகநானூறு காட்டுகிறது.

“விருந்து வரக்கரைந்த காக்கையது பலியே” (குறுந்.210-6)

“கானவன் எய்த முளவு மான் கொழுங்குறை
தேம்கமழ் கதுப்பின் கொடிச்சி –கிழங்கொடு
காந்தள் அம்சிறுகுடிப் பகுக்கும்” (நற்.85: 7-9)

என்பதில் கானவனால் கொல்லப்பட்ட முள்ளம்பன்றியின் இறைச்சியையும் வள்ளிக் கிழங்கினையும் பலருக்கும் பகிர்ந்தளித்து மகிழ்ந்த செய்தி உள்ளது.

"கண்படை பெறாதது தண்புலர் விடியல்
கருங்கண் வராதஅல் பெருந்தடி மிளர்வையொடு
புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு" (நற்.60: 3-6)

காலைப் பொழுதினிலே இல்லம் வந்த விருந்தினருக்கு வாளை மீனையும் தூண்டிலின் மூலம் பிடித்து வந்த யானையின் கைபோன்ற வரால்மீனையும் இறைச்சித்துண்டினையும் விருந்தாக அளித்த செய்தியை இப்பாடல் உணர்த்துகிறது.

"பெரும் விருந்தொடு கைதூவா எம்மையும் உள்ளால்
பெருந் தெருவில் கொண்டாடி ஞாயர் பயிற்ற" (கலித்-81:11-12)

என்ற வரிகள் விருந்தோம்பல் ஊடல் தீர்க்கும் தன்மையுடையது என எடுத்துரைக்கிறது.

கணவன் மனைவியரிடையே எழும் ஊடலைத் தீர்க்க வாயில்களாக விருந்தினர் அமைவர். விருந்தினர்வரின் இருவரும் ஊடலை மறந்து விருந்தினரைப் பேணும் கடமையில் ஈடுபடுவர். தன் மனைவியின் ஊடலைத் தீர்க்க யாரேனும் விருந்தினர் வரமாட்டார்களா என்று ஏங்குந் தலைவன்,

"எமக்கே வருகதில் விருந்தே சிவப்பாளன்று
சிறுமுள் எயிறு தோன்ற
முறுவல் கொண்ட முகங்காண் கம்மே" (நற்.120: 10-12)

என்று கூறுவதாக நற்றிணை மொழிகின்றது.

"நன்மனை நனிவிருந்து அயரும்

கைதூவின்மையின் எய்தாம் ஆறே"(நற்.280:9-10)

கணவனுடன் ஊடல் கொண்டிருந்த மனைவி அடுக்களையில் சமைத்துக் கொண்டிருக்கிறாள். அவள் முகம் மகிழ்ச்சி சிறிதும் இன்றி சினத்தால் சிவந்திருந்தது. இப்பொழுது வீட்டிற்கு விருந்தினர் வரவே அவளுடைய சிவந்த முகம் மலர்ந்து காணப்படும். அங்குத் தலைவியனுடைய ஊடல் மறைந்து போவதற்குக் காரணமாக விருந்தோம்பல் அமைந்ததை இப்பாடல் புலப்படுத்துகிறது.

விருந்தோம்பலின் மூலம் கணவன் மனைவியரிடையே இருக்கும் ஊடல் கூட தீர்ந்து போகும் அளவிற்குப் பண்பாடானது உயர்ந்த நிலையில் நிலைத்து நிற்கிறது.

**தொகுப்புரை:**

ஓர் ஆணும் பெண்ணும் உணர்வுகளாலும் உடலாலும் ஒன்று கலந்து சேர்ந்து வாழக்கூடிய இடம் குடும்பம். தனி மனிதக் கூட்டமைப்பின் முதற்படியினது வளர்ச்சி நிலையே குடும்பமாகும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய ஆதிமனிதனின் வாழ்க்கை முறையிலிருந்து பழந்தமிழர்களின் வாழ்க்கை முறையானது செம்மைப்படுத்தப்பட்டு நெறிப்படுத்தப்பட்ட குடும்ப வாழ்வாக அமைகிறது. நெறிப்படுத்தப்பட்ட இத்தகைய குடும்பச் சூழலில் காணப்படும் பண்பாட்டுச் சிந்தனைகள் குறித்து ஆய்ந்து விளக்கப்பட்டுள்ளது.

உருவத்திலும் பருவத்திலும் ஒத்த ஆணும் பெண்ணும் சந்தித்து ஒருவர் மீது ஒருவர் அன்பு கொள்வது காதல் என்று பொருள் கொள்ளலாகிறது. அவர்கள் காதலில் ஒன்றுபட்ட நிலை, காதலை வளர்க்க சந்தித்த தன்மை, காதலின் ஆழம், தலைவனின் விரும்பத்தகாத செயல்பாடுகளால் தலைவியின் காதல் துயரம் நிறைந்ததாகக் காணப்படுகின்றமை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

காதல் கொண்ட தலைவனும் தலைவியும் தங்கள் காதலை வளர்க்க இரவிலும், பகலிலும் அடிக்கடி சந்தித்து அகமகிழ்கின்றன. இவ்வாறாக சந்தித்து வருகின்ற காலத்து ஏற்படுகின்ற இன்னல்களையும் இடர்பாடுகளையும் சுட்டி, களவொழுக்கத்திலேயே காலத்தை நீட்டித்து விடாமல் விரைவில் தலைவியைத் திருமணம் செய்துகொள். களவினை மேற்கொள்வது முறையாகாது என்றுரைத்த தோழியின் உயர்ந்த பண்பாட்டுச் சிந்தனை இங்கு புலனாகிறது.

தலைவனும், தலைவியும் கொண்ட களவு வாழ்க்கை குடும்பத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட நிலையில் அது திருமணத்தில் முடியும் நிலையும் கற்பு வாழ்க்கையாகிறது. ஏற்றுக்கொள்ளப்படாத நிலையில் உடன்போக்கு மேற்கொண்டு திருமணம் செய்து கொள்கின்றனர். இதுவும் கற்பு வாழ்க்கையாகிறது. இருவகைத் திருமணமும் பழந்தமிழரிடையே ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளமை உணர முடிகிறது.

பருவம் எய்திய ஓர் ஆணும், பெண்ணும் இல்லற வாழ்வில் ஈடுபடுவதற்கு இணைப்பாக அமையும் திருமணம், திருமணமுறைகள், திருமணச் சடங்குகள் திருமணத்தில் கலந்து கொள்பவர்களுக்கு வழங்கப்படும் உணவுகள் திருமணத்தில் தாலி பெறும் இடம், திருமணப் பொருத்தங்கள், திருமண வகைகள் பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

திருமண உறவில் கணவனும், மனைவியுமாக அவர்கள் வாழும் அன்பின் அடையாளமாகத் திகழ்வது மக்கட்பேறு, இல்லற வாழ்வின் தலையாய குறிக்கோளாகவும் கருதப்படுவது, மனிதனுடைய பண்பாட்டு வளர்ச்சிக்கு அடிப்படையாகவும் மக்கட்பேறு அமைகிறது.

சங்ககால மக்கள் குடும்பத்தின் குலவிளக்காகக் கருதும் மக்கட்பேற்றினைப் பற்றிய சிந்தனைகள் புலனாகிறது. மனிதனை விலங்கிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவது அவர்கள் வாழும் வாழக்கை முறை இல்லறத்தை இனிய வாழ்க்கையாக வாழந்தவர்கள் இல்லறவாழ்வு வாழ்பவர்கள் மேற்கொள்ள வேண்டிய ஈகை, ஈகைக்குத் தேவையான பொருள், சுற்றம் போற்றுதல் போன்றவை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

பண்டைத் தமிழர்கள் போற்றிய பண்புகளில் தலையாய பண்பாகப் போற்றப்படுவது விருந்தோம்பல் அப்பண்பாட்டினைப் போற்றி வளர்த்த அவர்களின் விருந்தோம்பலில் விருந்தாக அமைந்த உணவுகள், விருந்தினர் வருகையை எதிர்பார்த்து வாழ்ந்த தன்மை முகமலர்ந்து வரவேற்று உபசரித்த அவர்களின் உயர்ந்த பண்பினை உணர முடிகிறது.

இல்லற வாழ்வினில் பெண்கள் இல்லத்தைக் காப்பவளாகவும் இல்லறச் செயல்களைச் சிறப்பாகச் செய்பவளாகவும் பெண்கள் இருந்துள்ளனர். கணவனை பேணுபவளாக குடும்பத்திற்குத் தேவையான உணவிற்கான பொருள்களைச் சேகரிப்பவளாகப் பெண்கள் விளங்கிய தன்மை விளக்கப்பட்டுள்ளது.

குடும்பவாழ்வு சிறக்க கணவனும் மனைவியும் கொண்ட அன்பு நிலையே அடிப்படையாக அமைவது கணவனையே உயிராகக் கருதி வாழும் மனைவி, கணவன் பிரிந்து சென்ற காலத்தில் அவன் சென்ற வினை வெற்றி பெற, அவன் நலமுடன் இருக்க எண்ணும் தலைவியின் அன்புநிலை, கணவன் மனைவியின் மேல்கொண்ட அன்பு வழிப்பட்ட இல்லறப் பண்பாட்டுச் சிந்தனை புலனாகிறது.

## சான்றெண் விளக்கம்

1. மனித உரிமைகள் பற்றிய உலகப் பிரகடனம் உறுப்பரை-16(3)
2. வேர்ச் சொற் கட்டுரைகள், நூல்-2, பக்.19
3. வேர்ச் சொற் கட்டுரைகள், நூல்-2, பக்.20
4. சீ.பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், பக்-335, 336
5. பாஸ்கல் கிஸ்பர்ட் எஸ்.கே. சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ப-125
6. சாமி.சிதம்பரனார், எட்டுத் தொகையும், தமிழர் பண்பாடும், ப.84
7. மேலது பக்-84-85
8. புலியூர்க் கேசிகன், தொல்காப்பியம், ப.314
9. மேலது, ப.314
10. தொல்காப்பியம், களவியல், நூ.23
11. திருக்குறள், 1261
12. தொல்காப்பியம் கற்பியல், நூ.1
13. தொல்காப்பியம், களவியல், நூ.49
14. வி.சசி வல்லி, தமிழர் திருமணம், ப.10
15. நாலடி 86:2, ஆ.கோவை 85:1
16. தொல்காப்பியம், களவியல், நூ.1
17. முனைவர்.சு.திலகவதி சங்ககால மகளிர் வாழ்வியல், ப.126
18. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.368
19. தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல், நூ.25
20. மேலது நூ.26
21. டாக்டர் கே.கே.பிள்ளை தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், ப.135

22. திருக்குறள்.28

23. மேலது குறள்.52

24. மேலது குறள்.60

25. தொல்காப்பியர், பொருள், கற்பியல், நூ.6

26. செந்துறை முத்து, சங்ககாலச் சமுதாயச் சிந்தனைகள் ப.86

27. க.த.திருநாவுக்கரசு, தமிழர் பண்பாடு ப.14

28. தொல்காப்பியர், பொருள், கற்பியல், நூ.51

29. சாமி.சிதம்பரனார் எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும் ப.46

30. திருக்குறள்.221

31. மேலது, குறள்.231

32. மேலது, குறள்.247

33. வ.சு.ப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப.242

34. திருக்குறள்.90

35. வெ.முத்துலெட்சுமி, பண்பாட்டுச் சிந்தனைகள், ப.83

36. தொல்காப்பியர், பொருள், களவியல், நூற்.16

37. தொல்காப்பியர், பொருள், கற்பியல், நூற்.5

38. ஆறு.அழகப்பன், தமிழ்ப்பேழை, ப.289

39. திருக்குறள்.322

# இயல் - 2



## சமுதாயச் சூழலில் பண்பாட்டுச் சிந்தனைகள்

# இயல்-2

## சமுதாயச் சூழலில் பண்பாட்டுச் சிந்தனைகள்

மனித இனம் நாகரிகம் அடைவதற்கு முன்பிருந்தே கூடி வாழும் இயல்புடையதாக இருந்து நாளடைவில் அம்மக்களினம் வளர்ச்சியுற்று குழுக்களாகவும், கூட்டங்களாகவும் வாழ்ந்துள்ளனர். இவற்றிற்கு இடையே உண்டான உறவு பிணைப்பே சமுதாயமாக உருவெடுத்தது. பண்டைக் காலத்தில் வாழ்ந்த நம்முடைய முன்னோர்கள் மன்பதை என்னும் சொல்லையே சமுதாயத்திற்குப் பயன்படுத்தி உள்ளனர். சமுதாயம் என்ற சொல் சமூகம் என்ற சொல்லால் வழங்கப்பெறுகிறது.

**சமுதாயம்:**

சமுதாயம் என்பது மக்கள் சேர்ந்து வாழ்வதை மட்டும் குறிப்பதன்று. தனி மனிதர்கள் ஓர் ஒழுங்கின் அடிப்படையில் சேர்ந்துள்ள அமைப்பு முறையையும் குறிக்கின்றது. சமூக உண்மைகள் தனி மனிதனுடைய முறைப்படுத்தப்பட்ட நடத்தை முறைகளே, இந்த முறைகள் சமூக அமைப்புகளின் மூலமாகத் தனி மனிதனின் மீது திணிக்கப்படுகின்றன. மனிதன் கூடி வாழத் தலைப்பட்ட பொழுது அவர்கள் கொண்டிருந்த சிக்கலான சமூக உறவுமுறைத் தொடர்புகளையே சமூகம் என்கிறோம்.

பல்வேறு வகைகளில் உறவு கொண்டு வாழும் மக்கள் தொகுதி சமுதாயம் எனப்படும் சமுதாயம் என்பது லத்தீன் வார்த்தையான Societas என்ற சொல்லில் இருந்து வந்துள்ளது. இதுவும் தோழர், நண்பன், நட்பு என்ற பொருள் கொண்ட Socius என்ற சொல்லில் இருந்து பிறந்ததாகும்.

ஸ்காட்லாந்தின் பொருளாதார வல்லுநரான ஆடம்ஸ்மித், “வெவ்வேறு வணிகர்களிடையே வேறு எந்தவொரு பரஸ்பர அன்பும் பாசமும் இல்லாமல் நிலவும் உறவுமுறையே சமுகம் என்கிறார். சமுதாயம் என்ற பொருளில் பயன்படுத்தும் போது, சமுதாயம் என்பது செயல்பாட்டு உறவுகளின் எல்லைகளால் வரையறுக்கப்பட்ட தனி நபர்களால் உருவாக்கப்படும் ஒரு அமைப்பாகும். சமுதாயம் என்ற அமைப்பானது தேசிய அல்லது கலாச்சார அடையாளங்கள், சமூக ஒற்றுமை மொழி அல்லது படிநிலை அமைப்பு போன்ற சிறப்பியல்புகளைக் கொண்டதாகும்.

தனிநபர் குடும்பம் மற்றும் நம்மோடு வாழும் அனைவரும் சேர்ந்தது தான் சமுதாயம். பொதுவானப் பண்புகளையும் நியதிகளையும் கொண்டு குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் மக்கள் தொகுதி, சமுதாயம் ஆகும்.

ஒருவருடன் ஒருவர் கொள்கின்ற தொடர்புகள் எல்லாம் சமூகத் தொடர்பு ஆகிவிடாது. ஒருவர் மற்றவரின் இருப்பை அறியும் பொழுது தான் சமூகத் தொடர்பு ஏற்படுகிறது. எங்கெல்லாம் இத்தகைய சமூக உறவு முறை காணப்படுகிறதோ அங்கெல்லாம் சமூகம் உயர்வுடையதாய் ஆகிறது.

‘‘ஒழுங்கின் அடிப்படையில் இணைக்கப்பட்ட தனிமனிதர்களும் அவர்களைப் பிணைக்கும் உறவு முறைகளும் இடைவிடாத மாற்றத்திற்குள்ளாகின்றனர். இத்தகு சிக்கலான மாறிக்கொண்டே இருக்கும் அமைப்பையே சமுதாயம் என்கிறது ஓர் ஆங்கில நூல்’’[(1)]

சமுதாயம் என்பது பழங்கால மனிதர்களுடைய நுண்ணறிவிலிருந்து தோன்றிய அமைப்பாகும். இந்த சமுதாய அமைப்பில் வாழ்கின்ற மனிதர்கள் தங்களின் தேவைகள் பற்றியும் தாம் வாழ்கின்ற சுற்றுப்புறச் சூழலைப் பற்றியும்,

அந்தச் சூழலுக்கு ஏற்ற வகையில் எவ்வாறு வாழவேண்டும் என்பது பற்றியும் அறிந்து கொள்கின்றனர்.

இயற்கையாகவே மனிதன் சமுதாய இயல்புடையவனாக உள்ளான். “பிறக்கும் போதே மனிதன் இயல்புகள் சமுதாயத்தோடு ஒன்றுபடும் தன்மைகளைப் பெற்றுள்ளன என்றும் இத்தன்மைகள் மொழி, பழக்க வழக்கங்கள், அறிவார்ந்த முறையில் சிந்தித்தல் போன்றவற்றில் புதைந்து கிடக்கின்றன என்றும் வாதிட்டவர் அரிஸ்டாட்டில்”.[(2)]

பித்தாகரஸ் அவர்கள் சமுதாயம் பற்றிக் குறிப்பிடும் போது, “தொடக்க காலச் சமுதாயம் ஏற்றத் தாழ்வுகளின்றி ஒருபடித்தானதாக இருந்தது என்றும் மனித சமுதாயத்தில் குடும்பச் சிக்கல்களைத் தீர்க்கும் நீதிமுறை, ஒழுக்கமுறை, மொழி போன்ற சில கூறுகள் தொடக்கத்திலேயே தோன்றிவிட்டன என்றும் கூறுகிறார்’’[(3)].

மனிதனோடும் அவன் சார்ந்த குழுக்களோடும் முற்றிலும் தொடர்புடையது சமுதாயம். மனிதன் மட்டுமே சமுதாய வாழ்வை ஏற்படுத்திக் கொண்டவன். ஒருவருக்கொருவர் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளும் சிறப்பு மனிதனிடம் மட்டுமே உண்டு. தனது தேவைகளை நிறைவு செய்வதற்காகவே சமுதாயத்தை ஏற்படுத்திக் கொண்டான்.

சமுதாயம் பற்றி குறிப்பிடும்போது (ஆங்கில அகராதியான ஆக்ஸ்போர்டு) ‘‘ஒரே நம்பிக்கை அல்லது கருத்தைக் கொண்டு பொதுவான குறிக்கோளுக்காக ஒருங்கிணைந்த பொதுவான அக்கறை அல்லது பயனுக்காகப் பலர் ஒன்றாக இணைந்திருக்கும் அமைப்பு சமுதாயம் ஆகும்’’[(4)] என்று பொருள் விளக்கம் செய்துள்ளது.

இதே போன்று மற்றொரு ஆங்கில நூலும் ‘‘சமுதாயம் என்பது திட்டமாக அமைக்கப்பெற்ற வாழ்க்கை முறையின் ஒரு சோதனை என்றும் விளக்கும். ஒரு சமுதாயத்தில் உள்ளும் புறமும் நிகழும் மாற்றங்களுக்கேற்ப அது தன்னை இயைத்துக் கொள்வதைப் பொறுத்து அச்சோதனையின் வெற்றி உள்ளது[5] என்கிறது.

‘‘மனிதன் ஒழுகலாறுகளை ஆராய்வதையே குறிக்கோளாகக் கொண்ட சமூகவியலும் இலக்கியமும், நெருங்கிய தொடர்புடையவை[6] என்கிறார் கைலாசபதி.

தலைமுறை, தலைமுறையாக கடந்த காலங்களில் வாழந்த மக்களின் வாழ்வியல் அனுபவத்தில் தோன்றிய விளைபொருளே மனித சமூகம். சமுதாயத்தின் உறவு முறைகளையும் மக்களின் நடத்தை வழிகளையும் எடுத்துரைப்பதாக இது அமைகிறது. மனிதன் தனித்தனியாக வாழ்ந்த போது அவர்களிடம் எந்த விதமான பண்புகளோ, பழக்க வழக்கங்களோ சிறப்பானதாக இருந்திருக்க வாய்ப்பில்லை. அவன் சேர்ந்து வாழத் தலைப்பட்டபோது உயர் பண்புகளும், இலட்சியங்களும் தோன்ற ஆரம்பித்தன. அப்படி இணைந்து வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறையினின்று வரும் தலைமுறைகள் அவற்றைப் பின்பற்றி ஒழுக்கமான வாழ்க்கை உயர்வான நோக்கங்கள் கொண்டு வாழ்வதற்கு அடிப்படையாக அமைந்தது நம் முன்னோர்களின் சிந்தனைகளே. அந்த வகையில் எட்டுத்தொகை நூல்களில் உள்ள அகப்பாடல்களில் சமுதாயச் சூழலில் காணலாகும் பண்பாட்டுச் சிந்தனைகளை எடுத்துரைப்பதாக இவ்வியல் அமைகிறது.

**பழக்கவழக்கங்கள்**

1. விளக்கேற்றுதல்
2. காக்கைக்குச் சோறிடுதல்
3. நோன்பு
4. சடங்குகள்

**நம்பிக்கைகள்**

1. இறைவழிபாடு
2. முருகன்
3. இந்திரன்
4. வருணன்
5. திருமால்
6. நடுகல்
7. நிமித்தம் பார்த்தல்
8. காக்கை கரைதல்
9. கண்ணேறு
10. பல்லி நிமித்தம்
11. நற்சொல் கேட்டல்
12. கனவு
13. சூளுரைத்தல்
14. பேய்

**விழாக்கள்**

1. பாவை விழா
2. கார்த்திகை திருநாள் விழா
3. உள்ளி விழா
4. புனல் விழா
5. பூந்தொடை விழா
6. காமன் விழா

**விளை**

1. ஆடவ விளை
2. மகளிர் விளை
3. குழந் விளை
4. அசதி
5. அம்பு
6. ஏறுகோ
7. ஓரை
8. எண்ண
9. சுண்ண
10. புதுப்பு விளை
11. சிற்றில்

## 2.1. பழக்க வழக்கங்கள்:

நாட்டு மக்களின் பண்பாட்டில் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் பெரும் பங்கு வகிக்கின்றன. அவைகள் பண்பாட்டு வளர்ச்சியின் படிகற்களெனலாம்.

மனித சமுதாயத்தின் தேவையே பழக்கங்களாயின. தனி மனிதப் பழக்கங்கள் காலப்போக்கில் கூட்டமைப்பு உடைய மக்கள் குழுக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டு வழங்களாயின.

பழக்கம் என்பது ஒரு கற்கும் செயலாகும். இதனையே சித்திரமும் கைப்பழக்கமும், செந்தமிழும் நாப்பழக்கம் என்று முதுமொழி கூறுகின்றது.

நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக்கூடியதாக ஆகிவிடும். இதனையே பழக்கம் என்பர்.(7)

பழக்கத்தின் தொடர்நிலையே வழக்கமாகும். வழக்கம் சமூகம் சார்ந்த ஒன்றாகும். ஒழுக்கத்தாலும், செயல்களாலும் உருவானதே வழக்கம் ஆகும். அதாவது பழகிப் போன செயலே வழக்கமாகும்.

"முந்நீர் வழக்கம் மகடூவோடு இல்லை"(8)

எனத் தொல்காப்பியம் வழக்கம் என்ற சொல்லைக் குறித்தலைக் காணமுடிகிறது.

பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்தது. வழக்கம் என்பது சமுதாயத்தைச் சார்ந்தது. மரபு என்பது சமுதாயம் விதிக்கும் கட்டுப்பாடு என்பர்.(9)

சங்ககால மக்களின் பண்புகளைக் கொண்டு பண்பாட்டினை

1. பழக்கவழக்கங்கள்
2. நம்பிக்கைகள்
3. விழாக்கள்
4. விளையாட்டுகள்
5. அளவைகள்

என பகுத்துக் காணலாம்.

மனித சமூகத்தில் தோன்றக்கூடிய சில நடத்தைகள் காலப்போக்கில் அச்சமூகத்தின் பழக்கமாகவும் மற்றவர்கள் பின்பற்றக்கூடிய வழக்கமாகவும் மாறிவிடுகின்றன. பழங்காலத்தில் வாழ்ந்த நம் முன்னோர்கள் அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் சில ஒழுங்குமுறைகளைக் கடைப்பிடித்தனர். அவை பின்னாளில் வழக்கமாக மாறிவிட்டன. இவ்வாறு கடைப்பிடிக்கப்பட்ட பழக்க வழக்கங்கள் ஒவ்வொரு பகுதியிலும் வாழக்கூடிய மக்களிடையே வெவ்வேறான விளக்கங்கள் கூறப்பெற்று வழங்கி வருகின்றன. நாம் செய்யக்கூடிய ஒவ்வொரு செயலும் நம் முன்னோர்கள் விட்டுச் சென்றவையே குறிப்பிட்ட ஒரு சமூகத்தினரின் நடத்தை பின்னாளில் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்பெறுகிறது.

மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரை நம்மைத் தொடர்ந்து வரக்கூடியதாக அமைவது பழக்க வழக்கம். தனிமனிதனிடம் அமைந்த நடத்தையைக் குறிப்பது பழக்கம் என்பதாகும். தனிமனிதனாலும் சமுதாயத்தாலும் சேர்ந்து உருவாக்கப்பட்டவைதான் இத்தகு பழக்க வழக்கங்கள் “நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக்கூடியதாக ஆகிவிடும் செயலையே ‘பழக்கம்’’ என்பர்’’[10].

மனிதனிடம் காணப்படும் பழக்கமானது தொடர்ந்த நிலையே வழக்கமாகும். அன்றாடம் செய்யக்கூடிய செயல்களை மனிதன் வழக்கப்படுத்திக் கொள்கிறான். அதனால் அது வழக்கம் என்ற பொருளைத் தருவதாக அமைகிறது.

‘‘பழக்கங்கள் சமுதாயத்தில் ஏற்றுக்கொள்ளப்படுகின்ற போது வழக்கங்களாக மாறுகின்றன. தனிமனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைப் ‘‘பழக்கம்’’ எனவும் இனக்குழுவிலுள்ள பலருடைய மன எழுச்சி, உணர்ச்சி ஆகியவற்றுடன் இயைந்து நிற்பது வழக்கம்’’[11] என்ற சமூகவியலாரின் சான்று இதற்குப்பொருத்தமாக

அமைகின்றது. பழக்கத்தைத் தொடர்ந்தே வழக்கம் அமையும். இவை ஒன்றோடொன்று உறவுடையன எனலாம்.

“வழக்கம் என்பது இறந்த காலத்தின் அனுபவத்தை இழந்து விடாமல் காக்க வல்லது. ஒவ்வொரு முறையும் என்ன செய்வது என்று எண்ணிப்பாராமல் முன்னமே வகுத்த வழியில் எளிதில் செல்லத் துணைபுரிவது”[(12)] என்ற மு.வ.வின் கூற்று சான்றாக அமைகிறது. எனவே வழக்கமாகப் பின்பற்றப்பட்டவை பழக்கம் என்பது புலனாகும்.

### 2.1.1. விளக்கேற்றுதல்:

நமது முன்னோர்களின் பழக்கங்களையே நாம் வழக்கமாகச் செய்து கொண்டிருக்கிறோம். அந்த வகையில் விளக்கேற்றுதல் என்பது இன்று வரை நம்மால் பின்பற்றப்படும் பழக்கமாக அமைந்துள்ளது. விளக்கேற்றுதல் மங்கலகரமான செயலாகவும் கருதப்பட்டது. சிறிய விளக்கினில் எண்ணெய் ஊற்றி திரியினில் தீப்பற்ற வைப்பது என்பது சங்ககால மக்களால் பின்பற்றப்பட்டுள்ளது. அச்செயலை பெண்களே செய்துள்ளனர். வீட்டை அலங்கரித்து விளக்கேற்றி வழிபாடு நடத்தியதை

“செந்தீச் செவ்வழில் தொடங்க வந்ததை
வால் இழை மகளிர் உயிர் பொதி அவிழ்க்கும்” (கலித்.9:13-14)

என்னும் கலித்தொகைப் பாடல் மாலை நேரத்தில் செந்தீயினால் விளக்கினை ஏற்றும் வழக்கத்தைக் கொண்டிருந்தமையை உணர்த்துகின்றது.

பஞ்சினால் அமைந்த வெண்ணிற திரியை சுடராக ஏற்றினார்கள் என்பதையும் அறிய முடிகிறது. பூங்கொடி போன்ற தலைவி பொன் தகட்டாலான அழகிய அகல் விளக்கினை ஏற்றிய செய்தியை அகநானூறு எடுத்துரைக்கிறது.

கடலுக்குச் சென்று வலைவீசிப் பிடித்துக் கொண்டு வந்த கொழுவிய மீன்களின் கொழுப்பினால் செய்த நெய்யை கிளிஞ்சலில் ஊற்றி அதனுடைய சிறிய விளக்கொலியில் இல்லத்தில் மக்கள் துயின்ற செய்தியை

"மீன்நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய
சிறுதீ விளக்கில் துஞ்சும்" (நற்.175: 3-4)

என்னும் பாடலடி உரைக்கும். மீன் நெய்யினால் விளக்கேற்றினால் அதன் சுடர்ஒளி பெரியதாய் விளங்கும் என்பதையும் உணர முடிகிறது.

"விழவுத் தலைக்கொண்ட பழவிறல் மூதூர்
நெய் உமிழ் சுடரின் கால் பொரச் சில்கி"(அகநா.17:19-20)

ஊரில் நடைபெறும் திருவிழாக் காலங்களில் நெய் ஊற்றப்பட்ட பெரிய விளக்குகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இரவு நேரம் நடைபெறுகின்ற நிகழ்ச்சிகளுக்கும் களவு நடைபெறாமல் இருப்பதற்காகவும் இவ்வாறு பெரிய விளக்கினை வைத்துள்ளனர். விளக்குகளில் வெண்மையான பெரிய திரிகளைக் கொண்டு பெண்கள் விளக்கேற்றினர்.

பகற்பொழுது கழிந்து மலைகளுக்கு இடையே சூரியன் மறையக்கூடிய மாலைப்பொழுதில் வளையல்களை அணிந்த பெண்கள் வெண்மையான பஞ்சினால் செய்யப்பட்ட திரியைக் கொண்டு விளக்கேற்றி வழிபட்டனர். நல்ல நாள் மற்றும் விழாக்காலங்களில் விளக்கேற்றுதல் என்னும் செயலானது பெண்களிடையே வழிவழி வந்த வழக்கமாக இருந்துள்ளமை தெரியவருகிறது. கார்த்திகை தீபத்தன்று விளக்கேற்றும் பழக்கம் இன்றும் நம்மிடையே வழக்கமாகப் பின்பற்றப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

### 2.1.2. காக்கைக்குச் சோறிடுதல்:

காக்கை நம் முன்னோர்கள் என மக்களால் நம்பப்பெறுகிறது. ஆகையால் காகத்திற்கு உணவிடும் பழக்கம் சங்ககால மக்களிடையே இருந்துள்ளமை தெரியவருகிறது.

செல்வம் பொருந்திய அகன்ற மனையினில் பொன்னாலாகிய தொடியுடைய மகளிர் உணவு சமைத்து அவ்வுணவில் ஒரு கவளம் எடுத்து முற்றத்தில் பலியாக இட்ட சோறானது கொக்கின் நகம் போன்று மெல்லியதாக இருந்ததாகவும் அந்த சோற்றினைக் காக்கை உண்டதாகவும் செய்திகள் காணப்படுகிறது.

நாம் உணவு உண்ணுவதற்கு முன் உண்ணவிருக்கும் உணவில் ஒரு பகுதியைக் காக்கைக்கு கொடுக்கும் வழக்கம் இன்று போல் அன்றும் தமிழகத்தில் இருந்தது. இன்றும் அமாவாசை, முன்னோர்களின் நினைவு நாட்களில், காக்கைக்கு உணவைப் படைத்து அவை அவ்வுணவைத் உண்டப் பிறகே உண்ணும் வழக்கம் பழங்காலத்திலும் இருந்திருக்கிறது. முன்னோர்கள் காக்கை வடிவில் வந்து உணவை எடுப்பதாக மக்களிடம் நம்பிக்கை உள்ளது. எனவே, காக்கைக்கு இடப்பட்ட உணவு பலி எனப்பட்டது.

### 2.1.3. நோன்பு:

நோன்பிருக்கும் பழக்கம் சங்ககாலம் முதல் இக்காலம் வரை மக்களால் பின்பற்றப்படுகின்ற பழக்கமாகும். நோன்பு என்பது விரதம் எனவும் வழங்கப்படுகிறது. நினைக்கின்ற செயல் நிறைவேற அகத்தூய்மையுடனும் புறத்தூய்மையுடனும் மனதை ஒருநிலைப்படுத்தி இறைவனிடம் வேண்டி உணவு உண்ணாமல் இருப்பதே நோன்பாகும். இம்முறை தமிழர்களிடம் தொன்று தொட்டு காணப்படுகிறது.

“தைநீர் ஆடிய தவம் தலைப்படுவாயோ” (கலித்.59:13)

அதாவது தை மாதத்தில் மகளிர் நோன்பிருந்த செய்தியை இப்பாடல் புலப்படுத்துகிறது.

"தொடியணி முன்னகத் தொகுவிரல் குவைஇ
படிவ நெஞ்சமொடு பகல்துணையாக" (அகநா.287: 1-2)

இருவித பழக்கவழக்கங்களை இப்பாடல் வரிகள் சுட்டிக் காட்டுகின்றன. வளையணிந்த முன்கையின் விரலைக் குவித்து நம்மைக் காண வேண்டும் என்று தலைவி நோன்பு மேற்கொண்ட நெஞ்சத்துடன் பகல் நேரமே துணையாக வந்திருப்பாளோ எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறிக்கொள்கிறான்.

வளையணிந்த மகளிர் விரல்களைக் குவித்து வணங்கும் நிலையினையும் விரதமிருத்தலையும் இவ்வரிகள் உணர்த்துவதாக உள்ளன.

நோன்பினை அதிகம் மேற்கொள்பவர்கள் பெண்களே ஆவர். பெண்களிடம் இயற்கையிலேயே இருக்கக் கூடிய கட்டுப்பாடு, பொறுப்பு, சகிப்புத்தன்மை விடாமுயற்சி ஆகியனவே இதற்கு காரணமாக அமைகிறது. தவநெறிகளைக் கடைப்பிடித்து வரும் சான்றோர்களும் உண்ணா நோன்பினை மேற்கொண்டுள்ளனர்.

"உண்ணாமையின் உயங்கிய மருங்கின்
ஆடாப் படிவத்து ஆன்றோர் போல" (அகநா.123: 1-2)

தவநெறி வழி நடக்கும் சான்றோர்கள் உண்ணாமல் உடல் மெலிந்து தன் நிலையான தவ விரதத்தைக் களையாமல் காத்தனர். இந்நிலையை சான்றோர்கள் வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

கன்னி மகளிர் இளமையில் நோற்கும் நோன்புகளில் ஒன்று அம்பாவாடல். இதனைத் தைந்நீராடுதல் என்றும் குறிப்பிடுவர். மார்கழி மாதத்து நிறைமதி

நாளாகிய திருவாதிரையில் பூசகர் தெய்வத்திற்கு விழா எடுக்க, கன்னிப் பெண்கள் கூடி "பூமியானது மழைவளம் பெற்றுக் குளிர்வதாக" என அம்பா ஆடலை மேற்கொள்கின்றனர். பெரியவர்கள் வழிகாட்டியப்படி அதிகாலையில் நீராடி கன்னி மகளிர் நோன்பு நோற்பர்.

"வை எயிற்றவர் நாப்பண் வகை அணிப்பொலிந்து நீ
தைநீர் ஆடிய தவம் தலைப்படுவாயோ"(கலி.59 : 12-13)

இந்தப் பாவை நோன்பில் வண்டல் விளையாட்டுக்கு உரிய பாவையை நீர்த்துறையிடத்து வைத்து, கொம்பு என்னும் இயம் ஒலிக்கக் குரவைக் கூத்தாடுவர்.

"வண்டற் பாவை உண்துறைத் தரீஇ
திருநுதல் மகளிர் குரவை அயரும்
பெருநீர்க் காணல் தழீஇய இருக்கை" (அகநா.269:19-21)

கன்னியர்கள் நோன்பு நோற்கின்ற காலத்து குன்றக்குறவருடைய, சிறு மகளிர் தினைப்புனங்காவலுக்குச் செல்கின்றனர். அப்பொழுது ஆயர் மகளிர் வெண்ணெய், மோர் முதலியவற்றை விற்கச் சொல்லுகின்றனர். இவ்வாறு கன்னி மகளிர் நோன்புக் காலங்களிலும் பெற்றோருக்கு உதவிகள் செய்திருக்கின்றனர். வையை நதித்துறையில் மகளிர் பெற்றோருக்கு உதவி செய்து வாழ்ந்துள்ளனர்.

"கண்டார்க்குத் தாக்கு அணங்கு இக்காரிகை காண்மீன்
பண்டாரம் காமன்படை, உவள்கண்: காண்மின்" (பரி.11: 122-123)

மகளிர் நோன்பு இருக்கும் நேரத்தில் கூட ஆடவர், மகளிர் சந்திப்பு இடம் பெறுகிறது. வையை நதிக்கரையில் தைந்நீராடி மகிழும் மகளிரைக் கண்டு இன்புற்ற தலைவன், தலைவி மேல் கொண்ட காதலை வெளிப்படுத்துகிறான்.

பாவையை நீர்த்துறையில் அமைத்துச் செய்யும் நோன்பு ஆதலால் பாவை நோன்பு எனப்பட்டது. இப்பாவைக்கு அரும்பு முதலிய நீர்ப்பூக்களைப் பறித்து அணிதலும் உண்டு.

"படிவ மகளிர் கொடி கொய்து அழித்த
பொம்மல் அடும்பின் வெண்மணல் ஒரு சிறை" (நற்.272:2-3)

நோன்பு மேற்கொண்ட மகளிர் அடும்பு என்ற வெண்மணற் குவியலில் படர்ந்து கிடக்கும் மலரைப் பறித்து வழிபடுவர்.

இவ்வாறு சங்ககால மக்கள் மேற்கொண்ட நோன்பினைப் போலவே தற்காலத்திலும் மக்கள் நோன்புகளை மேற்கொள்ளும் பண்பாடானது தொடர்ந்து கொண்டிருக்கிறது.

### 2.1.4. சடங்குகள்:

மனித வாழ்க்கையில் பின்பற்றப்பெறும் பழக்க வழக்கங்களில் ஒன்று சடங்குகள். இது போன்ற சடங்குகளின் மூலம் மக்களின் மனஉணர்வு ஒன்றுபடுகிறது.

உடன்போக்கினில் தலைவி, தலைவனுடன் சென்று விடுகிறாள். அவளை நினைத்து வருந்திய அவளது தாய் தன் மகளுக்கு "சிலம்பு கழிநோன்பு" செய்யவில்லையே என வருந்துகிறாள். இது திருமணத்திற்கு முன் ஒவ்வொரு பெண்ணுக்கும் தாய்வீட்டில் செய்யக்கூடிய ஒரு சடங்கு ஆகும்.

"அருங்கடி வியனகர்ச் சிலம்புங் கழியாள்" (அகநா.35, 8)

என்ற இவ்வடி உணர்த்துகிறது.

"சிலம்பு கழிஇய செல்வம்" (நற்-279, 10)

மகளிருக்குத் திருமணத்திற்கு முன்னர் செய்யப்படும் இச்சடங்கானது எவ்வித தீங்கும் ஏற்படாது அவளைக் காக்கும் என்ற நம்பிக்கையும் மக்களிடம் இருந்தமையைக் காணமுடிகிறது.

"நும்மனைச் சிலம்பு கழிஇ அயரினும்
எம்மனை வதுவை நல்மணம் கழிக" (ஐங்-399, 1-2)

பெண்களுக்குத் திருமணமாகும் முன்பு பெற்றோர் அணிவிக்கும் கன்னிச் சிலம்பினை கழிப்பது ஒரு மரபாகக் கருதப்பட்டுள்ளமை இப்பாடல் வரிகள் உணர்த்தும் பொருளாகிறது.

இதே போன்று ஒவ்வொரு சமுதாயத்திலும் திருமணத்திற்கு முன்னர் சடங்குகள் பின்பற்றப்படுகின்றன.

## 2.2. நம்பிக்கைகள்:

மனிதன் ஒரு செயலை செய்யும் முன் அச்செயல் மீது அச்சம் கொள்கிறான். அதனால் அவநம்பிக்கை ஏற்படுகின்றது. அந்த அச்சத்திலிருந்து தன்னைக் காத்துக் கொள்வதற்குப் பிறவற்றின் மீது நம்பிக்கை கொள்கிறான்.

"நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்படுவன. அவை வழக்கில் மிகுதியாகவும் இலக்கியங்களில் குறைந்தும் காணப்படும். எனவே, இலக்கியங்கள் சுட்டும் நம்பிக்கைகள் அச்சமுதாயத்தின் நம்பிக்கைகள் அனைத்தையும் கூறும் என்று சொல்ல இயலாது. இலக்கியங்களில் இடம் பெறும் நம்பிக்கைகள் பெரும்பாலும் அன்றைய மக்களிடையே சமுதாயச் செல்வாக்குப் பெற்ற குறிப்பிடத்தக்க நம்பிக்கைகளாக அமையும்.

மனிதனுடைய வாழ்க்கையில் கடைபிடிக்கக் கூடிய சில நடத்தைகளுக்கு காரணகாரிய விளக்கமளிக்க முடியாமல் இருக்கும். அத்தகைய நடத்தைகள் தொடர்ந்து பின்னர் வரக்கூடிய சந்ததியினாலும் ஒரு குறிப்பிட்ட சமூகத்தினராலும் பின்பற்றப்படுவது நம்பிக்கை ஆகும். காரண, காரிய விளக்கமளிக்கக் கூடியவை நம்பிக்கை என்றும் அவ்வாறு அளிக்க முடியாதவை மூடநம்பிக்கை எனவும் கூறப்பெறுகிறது.

"நுண் ஏர் பருவத்த கண்ணும் ஆடும்"(ஐங்.218 :1)

கண்கள் துடித்தால் ஏதேனும் நடக்கும் என்பது காலங்காலமாக மக்களால் நம்பப்பட்டு வருகிறது. இப்பாடல் வரியின் மூலம் இத்தகைய நம்பிக்கை பழங்காலத்தில் இருந்துள்ளமை அறிய முடிகிறது. தலைவி தன் தோழியிடம் தலைவன் தன்னைப் பெண் பார்க்க வருவான் எனத் தன் கண் துடிப்பதை வைத்துக் குறிப்பிடுகின்றாள். சங்ககாலத்தில் பல வகையான நம்பிக்கைகள் மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

தலைவன் வரைவு வேண்டுகின்ற நிலையில் தலைவியின் உறவுகள் அதை மறுக்கின்றனர். இதனால் ஆற்றுதாலாகிய தலைமகளுக்கு, தோழி தனக்கு நற்குறி தோன்றியது. தலைவன் விரைந்து வந்து மணந்து கொள்வான் என்ற நிலையில் கண் துடித்தல் நற்குறியாகக் கூறப்படுகிறது.

"நுண் ஏர் புருவத்த கண்ணும் ஆடும்
மயிர் வார் முன்கை வளையும் செறூஉம்
களிறு கோட் பிழைத்த கதம் சிறந்து எழு புலி
எழுதரு மழையின் குழுமம்
பெருங்கல் நாடன் வரும் கொல்? அன்னாய்!" (ஐங்.218 : 1-5)

தலைவன், தலைவியை விரைந்து வந்து மணந்து கொள்வான், எனது இடது கண் துடிக்கின்றது என்று தலைவியைத் தோழி ஆற்றுவிக்கின்றாள். இதில் கண் என்பது இடது கண்ணைக் குறிப்பதாகவும் பெண்களுக்கு இடது கண் துடித்தல் நன்னிமித்தமாகவும் ஆண்களுக்கு வலது கண் துடித்தல் நன்னிமித்தமாகவும் சங்க கால மக்கள் நம்பிக்கை வைத்ததை அறிய முடிகிறது.

**சமயம்:**

பழங்கால மக்கள் கொண்டிருந்த நம்பிக்கைகளுள் ஒன்று சமயம் பற்றிய நம்பிக்கை. “சமயம் என்பது புனிதமான ஒன்றைப் பற்றிய நம்பிக்கையும் செயல்முறைகளும் அடங்கிய ஓர் ஒருங்கமைந்த முறையாகும்”[13] என்கிறார் எமிலி தர்கைம்.

“சமையம்” என்னும் சொல்லினில் இருந்து “சமயம்” என்ற சொல் உருவானது. “சமையம் என்னும் சொல்லுக்குக் கடமை உணர்ச்சி என ஆங்கில அகராதி பொருள் தருகிறது. “சமைத்தல் என்னும் தொழிற்பெயரின் பொருள் பக்குவப்படுத்தல் என்பதாகும். பக்குவப்படுத்தலாவது நாம் உண்ணும் உணவினை உண்பதற்கு ஏற்றவாறு பல்வேறு வகையான காய்கறிகளைப் பக்குவப்படுத்தி அளிப்பது போல் மனிதனைத் தீய பண்புகளில் இருந்து நீக்கி, நற்பண்புகளுக்கு உட்படுத்தச் செய்யும் சாதன அமைப்பாகச் சமயம் உணரப்பெறுகிறது”[14] என்று சமயம் என்னும் சொல்லுக்கு விளக்கம் அளிக்கப்பெறுகின்றது. நன்மைகளை மிகுத்துத் தீமைகளை அழித்து மனிதனைப் பக்குவப்படுத்தும் ஓர் அமைப்பே சமயமாகும்.

கடவுள் நம்பிக்கை சார்ந்த ஓர் அமைப்பாகவே சமயம் கருதப்பட்டது. “முறையாகப் பெறப்பட்ட பண்பாட்டு வடிவங்களிலிருந்து ஒழுங்குற அமைத்துக் கொள்ளப்பட்டதே சமயம்”[15] என்கிறார் பாஸ்கல்.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தமிழிலக்கியங்களில் “சமயம்” என்ற சொல்லே இல்லை. அதற்கு பிற்பட்ட நூல்களிலே தான் “சமயம்” “மதம்” என்ற சொற்கள் காணப்படுகின்றன. எனவே, சங்ககாலத்தில் மக்களுக்குக் கடவுள் நம்பிக்கை இருப்பினும் இவர்கள் சிவன், திருமால் போன்ற கடவுள்களை வழிபட்டாலும் சைவசமயம் வைணவ சமயம் போன்ற சமயப்பற்று வேரூன்றவில்லை என்பது தெரிகிறது. சமயம் அல்லது மதம் என்பது வடநாட்டிலிருந்து சமணர்களாலும் பௌத்தர்களாலும் கொண்டு வரப்பட்டது. அதற்கு முன்பு தமிழகத்தில் குறிப்பிட்ட மதமோ, சமயமோ இல்லை எனலாம்”[(16)].

பழங்காலத்தில் வாழ்ந்த தமிழர்கள் தொடக்க காலந்தொட்டே தாங்கள் வாழக்கூடிய இடத்தினை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என ஐவகையாகப் பாகுபாடு செய்து அந்நிலத்திற்கு உரிய தெய்வங்களையும் வகைப்படுத்தத் தொடங்கினர்.

மாயோன் மேய் காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே[(17)]

முல்லை நில மக்கள் திருமாலைக் கடவுளாகவும் குறிஞ்சி நில மக்கள் முருகனைக் கடவுளாகவும் மருதநில மக்கள் இந்திரனைக் கடவுளாகவும் நெய்தல் நில மக்கள் வருணனைக் கடவுளாகவும் பாலைநில மக்கள் கொற்றவையினை கடவுளாகவும் வழிபட்டு வந்தவை சங்கப்பாடல்களின் வழி தெரிய வருகிறது.

சமயம் என்ற ஒரு அமைப்பு சங்க காலத்தில் தோன்றியிருக்கவில்லை எனினும் தங்கள் நிலத்திற்கான கடவுளை வழிபட்ட பண்பாடு புலனாகிறது.

### 2.2.1. இறை நம்பிக்கை:

நிலக் கடவுளரை வழிப்பட்ட மக்கள் அத்தெய்வங்களின் மீது அளவற்ற நம்பிக்கை கொண்டிருந்தனர். மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தி உண்டு என்ற நம்பிக்கையே தெய்வ நம்பிக்கை ஆகிறது. சிலை வடிவில் தெய்வங்களை வணங்குவதுடன் மலை, மரம், கடல் போன்ற இயற்கைப் பொருட்களின் மீதும் தெய்வம் உறைவதாகவும் நம்பினர்.

"பாம்புக் கடுப் பன்ன தோப்பி வான்கோட்டுக்
கடவு ளோங்குவரை நோக்கிக் குறவர்" (அகநா. 343: 7-8)

இயற்கையில் ஒன்றாகிய மலையில் கடவுள் உறைவதாக நினைத்து மக்கள் வழிபட்டுள்ளமையை இப்பாடல் வரிகள் மூலம் உணரமுடிகிறது.

"நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து" (நற்.343:4)

என்பதில் நெடிய விழுதுகள் கொண்ட ஆலமரத்தில் கடவுள் உறையும் என்ற நம்பிக்கையும் அக்கடவுளுக்குப் படைத்த உணவினை காகங்கள் உண்ணுவதாகவும் உள்ள இச்செய்தியின் மூலம் மரத்தினைக் கடவுளாக வழிபட்டுள்ளமை புலனாகிறது.

நீர்த்துறையில் உள்ள ஆலமரத்தின் கீழ் வலிமையுடைய தெய்வங்கள் உரையும் என வேப்ப மரத்தடியில் தெய்வம் இருப்பதாக மக்கள் நம்பியிருக்கின்ற செய்தியை

"தெய்வம் சேர்ந்து பராரை வேம்பில்"(அகநா.309-4)

என்பதில் காண முடிகிறது.

"கடவுள் மரத்த முள்மிடை குடம்பைச்"(அகநா.270-12)

இவற்றின் மூலம் தெய்வம் மரங்களில் இருப்பதாக மக்கள் நம்பியிருந்தமை தெரிய வருகிறது. அதன் வெளிப்பாடாகவே இன்றளவும் பெரும்பாலான இல்லங்களில் வேப்ப மரத்திற்கு துணி சுற்றி வழிபடும் மரபு பின்பற்றப்படுகிறது.

"கடல்கெழு செல்வி கரைநின்றாங்கு"(அகநா.370:12)

சங்ககால மக்கள் நீர்த்துறையைத் தெய்வமாக வழிபட்டுள்ளனர். கடற்கரையில் வாழும் மக்கள் கடலில் மீன் பிடிக்கச் சென்ற தன் உறவினர்களுக்குத் எவ்வித துன்பமும் ஏற்படக் கூடாது என கடல் தெய்வத்தை வணங்குவது இன்றளவும் காணப்படும் செயலாகும்.

**வழிபாடு:**

மக்களிடம் காணப்படக்கூடிய கடவுள் நம்பிக்கை, சமுதாய ஒற்றுமை, சகோதரத்துவம், மனம் ஒன்றுபடுதல் போன்றவற்றிற்குக் காரணியாக அமைகின்றன. சங்ககாலத் தமிழர்களிடம் காணப்பட்ட இத்தகைய கடவுள் வழிபாடே பிற்காலத்தில் சமயப்பற்றை உருவாக்கின என எண்ணத் தோன்றுகிறது.

"தெய்வக் கோட்பாடு தொன்று தொட்டு மக்களிடையே வேரூன்றி வந்துள்ள பண்பாகும், மனித சக்திக்கு மேற்பட்ட மற்றொரு சக்தி உலகை ஆட்டிப் படைப்பதாக அவர்கள் கருதினர். உலகில் நிகழும் நன்மைக்கும் தீமைக்கும் முதல் காரணமாக இருப்பது தெய்வ சக்தியே என எண்ணியதால் எந்த வினையிலும் முதலில் தெய்வத்தைப் போற்றும் பண்பைக் கொண்டிருந்தனர்"[(18)] என மு.சண்முகம்பிள்ளை கூறுகிறார்.

"பகைவரிடமிருந்து காக்கும் மாயோன், பகைவரைத் தாக்க வீரமளிக்கும் சேயோன் எனப் போர் வாழ்க்கைக்கு இரு கடவுள்கள், வான்வழி அச்சம் நீக்க ஓர் இந்திரன், நீர்வழி அச்சம் நீக்க ஒரு வருணன் எனப் பொது வாழ்க்கைக்கு இரு

கடவுள்கள். இங்ஙனம் நான்கு நிலத் தெய்வங்களும் அச்சத்தினின்று காக்கவே தொடக்கத்தில் தோன்றியிருக்க வேண்டும் என்பார் டாக்டர்.ஆ. இராமகிருட்டிணன்.[19]

### 2.2.2. முருக வழிபாடு:

குறிஞ்சி நிலக் கடவுளான "சேயோன்" என அழைக்கப்படும் முருகன் அழகும் ஆற்றலும் கொண்டவனாகப் போற்றப்படுகின்றான்.

"நெடுவேண் மார்பினராம் போலச்
செவ்வாய் வானந் தண்புமீ னருந்தும்"(அகநா.322:12-14)

தலைவியின் தாய் தாங்கள் வழிபடும் இறைவனாகிய முருகனுக்கு கள்ளினையும் மாலையினையும் வெண்மையான நாவினையும், செவியினையும் உடைய ஆட்டுக்கிடாவைப் பலியாக இட்டு வணங்கி தன் மகளின் நோயினைப் போக்குமாறு வேண்டியதாகக் கூறப்பெறுகிறது. இன்றளவும் மக்கள் கிராமப்புறத்தில் உள்ள தெய்வங்களுக்குப் பலியிடும் பழக்கத்தைக் கொண்டிருந்தமை புலனாகிறது.

மலைமீது இருக்கக் கூடியவர் முருகக்கடவுள் ஆவார். அதனால் தான் குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் உறையும் இடமென்பர். மலையும், மலை சார்ந்த இடமுமான குறிஞ்சி நிலத்தின் கடவுளான முருகப்பெருமானை குறிஞ்சிக்கிழவன் என அழைப்பர். சங்க கால மக்கள் முருக வழிபாட்டை மிகவும் பயபக்தியுடன் நடத்தினர்.

முருகப்பெருமானின் திருவுருவையும் அவன் அணிந்துள்ள ஆடை அணிகலன்களையும், அவனுடைய கொடி, ஊர்தி ஆகியவற்றையும், முருகன் இயக்கும் வாத்தியம் முதலியவற்றையும் கூறி முருகாற்றுப்படையில் ஓர் உருவ வருணனை உள்ளது.

செய்யன், சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்தளிர் துயல்வரும் காதினன்
கச்சினன் கழலினன், செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும் பல்லியத்தன்
தக்நன் மஞ்சையன் புகர்இல் சேவல்அம்
கொடியன் நெடியன் தொடி அணி தோளன்
நரம்பு ஆர்த்தன்ன இன்குரல் தொகுதியொடு
மருங்கில் கட்டிய நிலன் நேர்பு துகிலினன்" (முருகு.206: 214)

முருகப்பெருமான் இவ்வுலகினைக் காத்து வருதலீனாலே இவ்வுலகமானது ஒவ்வொரு நாளும் இன்பமயமான நாள்களைப் பெற்று விளங்கியமையை குறுந்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடலின் மூலம் விளங்குகிறது.

"தாமரை புரையும் காமா் சேவடி
பவளத்து அன்ன மேனி திகழ்ஒளி
குன்றி ஏய்க்கும் உடுக்கை குன்றின்
நெஞ்சு பக எறிந்த அம்சுடா் நெடுவேல்
சேவல்அம் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே" (குறுந்.க.வா.)

அனைவரும் விரும்புகின்ற தாமரை மலா் போன்ற சிவந்த அடிகளையும், பவழம் போன்ற செந்நிற மேனியின் கண் திகழும் ஒளியினையும், செந்நிற ஆடையினையும், கிரௌஞ்சம் என்ற குன்றின் மையப் பகுதியைப் பிளக்குமாறு எறிந்த செந்நிறம் பொருந்திய வேலினையும், சேவல் கொடி ஏந்திய முருகப்பெருமான காத்தலால் இவ்வுலகமானது இன்பமயமான வாழ்நாளைப் பெறுவதாயிற்று என்பர்.

முருகப்பெருமானை வணங்குவதில் முக்கியமான நிகழ்வு வெறியாட்டு எனப்படும் வெறியாட்டில் முருகனுக்கு பூசை செய்வோன் வேலன் எனப்படுவான்.

தலைவியின் உடல் மெலிவதற்குரிய காரணம் தலைவன் தான் என்பதை அறியாத தலைவன் அன்னையானவள் வேலனை அழைத்து வெறியாட்டு நடத்தினால் தலைவியின் உடல்மெலிவு தீர்ந்துவிடும் என எண்ணினாள்.

"களம் நன்கு இழைத்து கண்ணிசூட்டி
வளநகர் சிலம்பப் பாடி பலி கொடுத்து
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகு ஆற்றுப்படுத்த உருகெழு நடுநாள்"(அகநா.22:8-11)

வேலனானவன் தலைவியின் இல்லத்திற்கு வந்து வெறியாடும் களத்தினை நன்கு அமைத்து முருகனுடைய வேலிற்கு மாலை சூட்டி, வீட்டில் முருகனைப் பற்றிய பாடல்களைப் பாடிப் பரவிப் பலியினையும் கொடுத்து, குருதியுடன் சிவந்த திணையினைக் கலந்து தூவி முருகனை இல்லத்திற்குள் வரும்படி கூறி வழிபாடு நடத்தினான். இதனால் தலைவியின் உடல்நோய் தீரும் என அன்னை நம்பினாள். பெரும்பாலான பாடல்களில் வெறியாட்டு என்பது தலைவியின் பசலை நோயினைத் தீர்க்க அன்னையாள் நடத்தப்படும் ஒரு நிகழ்வாகும்.

வெறியாட்டு ஆடும் வேலன் தான் மட்டுமின்றி, குறவர்களோடும் அவர் தம் மகளிரோடும் ஊர் மரத்தடியில் உள்ள வேங்கை மரத்தடியில் கள் குடித்து, கைகோர்த்து குரவையாடி முருகனை வழிபடுதலும் உண்டு. இக்கூத்தில் ஆடவர்கள் மகளிர் கைகளைத் தழுவி அவர்களுக்கு முதற்கை கொடுத்து அவர்களுடன் கலந்து நின்று ஆடுவது வழக்கம். அவ்வாறு ஆடும் பொழுது தொண்டகப்பறை முழங்கும் என முருகாற்றுப்படை கூறும்

"அருங்கடி வேலன் முருகொடு வளைஇ
அரிக்கூடு இன்இயம் கறங்க நேர்நிறுத்து" (முருகு.197)

சங்க கால மக்கள் மட்டுமின்றி குன்றின் மேல் இருக்கும் குமரனுக்கு பால்குடம், காவடி எடுத்தும் முடிகாணிக்கை செலுத்தியும் தம்முடைய வேண்டுதலை நிறைவேற்றும் பண்பாடு இன்றளவும் நடைபெற்று வருகிறது.

### 2.2.3. இந்திரன், வருணன் வழிபாடு:

சங்க இலக்கியத்தில் இவர்கள் பெரிதும் போற்றப்படவில்லை. இந்திரனும், வருணனும் சங்ககால மக்கள் வாழ்வுடன் பெரிதும் தொடர்பு கொண்டிருக்கவில்லை என்பார் டாக்டர்.ப.அருணாச்சலம்.

"கள்ளுங் கண்ணியுங் கையுறை யாக
சிலைக் கோட்டு வெள்ளை நால் செவிக் கிடாஅய்" (அகநா.-156: 13-14)

இறையுணர்வு கொண்ட சங்ககால மக்களின் வழிபாட்டு முறை வேறுபட்டுக் காணப்பட்டது. இறைவனுக்கு கள்ளினைப் படைத்து வழிபட்டனர். உயிர்களையும் பலியிட்டு வழிபட்டுள்ளமையை

"தொல்கியன் மடமயில் ஒழித்த பின்
வான்போழ் வல்விற் சுற்றிய நோன் சிலை" (அகநா.28: 4-5)

என்னும் அடிகள் விளக்கும்.

வீரர்கள் தங்கள் வீரத்திற்குக் கருவியாக உள்ள வில்லினைத் துளைத்து பளபளக்கும் தன்மையோடு அவற்றின் விளிம்பில் மயில் தோகையால் பீலி சுற்றி வைப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். இதுபோலவே நம் வீட்டில் உள்ள ஆயுதங்களைத் துடைத்து எண்ணெய் தடவி மெழுகுண்டு வைத்துப் பாதுகாக்கும் பழக்கம் இருந்து வருகிறது.

மருத நிலத் தெய்வமான இந்திரனை மழை வேண்டி பழந்தமிழர்கள் இந்திரவிழா நடத்தினர். மக்கள் துன்பமின்றி வாழவும் இந்திரவிழா நடைபெற்றதை

அறிய முடிகிறது. இந்த விழாவிற்கு இந்திர சோடணை விழா, வானவர் விழா என வேறு பெயர்களும் உண்டு. இந்திர விழா அறிவிப்பானது யானையின் பிடரியில் அமர்ந்து முரசறைந்து ஊர் முழுவதும் அறிவிக்கப்பட்டது. சிலம்பில் இந்திரனே நேரில் வந்து உறைந்தான் என கருதப்படுகிறது.

"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரகென வாழ்த்தி" (சிலப்-5)

### 2.2.4. திருமால் வழிபாடு:

திருமால் சங்க இலக்கியங்களில் மால், மாயோன் ஆகிய பெயர்களில் அழைக்கப்படுகிறான். முல்லை நிலக் கடவுளாகப் போற்றப்படுகிறான்.

"செவ்வழி நல் யாழ் இசையிஎனன் பையெனக்
கடவுள் வாழ்த்திப் பையுள் மெய்ந்நிறுத்து" (அகநா.14-15-16)

இதன் மூலம் திருமால் வழிபாடு இருந்துள்ளமை புலனாகிறது.

திருமாலைப் பற்றியக் குறிப்பு முல்லைக் கலியில் மிகுந்து காணப்படுகிறது. சங்கு, சக்கரம், விற்படைத் தவிர பிற ஆயுதங்கள் திருமாலுக்கு கூறப்படவில்லை.

ஏறுதழுவிய காதலனுடைய முடிமேல் அணிந்திருந்த முல்லைப்பூவை காளையானது தம் கொம்பிலே எடுத்துக்கொண்டு துள்ளியது. அவ்வாறு துள்ளும் போது அம்முல்லைப்பூவானது காதலியின் தலைமுடிக்குள் சென்று விழுகிறது. அதனை தலைவியானவள் மகிழ்வுடன் எடுத்து முடிந்துக்கொள்கிறாள். இச்செய்தியைக் கேட்ட அவளுடைய தந்தையின் தமையன்கள் எல்லாம் ஒன்று கூடி, தெய்வமாகிய மால் இவளுக்கு பொருத்தமானதாக கொண்டு வந்து காட்டிற்று என மகிழ்ந்து, களவொழுக்கம் வெளிப்படாது ஒழுகிய அந்த ஆயனுக்கே மணமுடித்துக் கொடுக்க முடிவெடுத்தனர். இந்நிகழ்ச்சியைத் தெய்வச்செயல் எனப்

போற்றும் அவ்ஆயர்கள், "தெய்வம் மால் காட்டிற்று" என்று பேசுவதிலிருந்து காடுறை மகளாகிய அந்த ஆயர் கூட்டத்தார் போற்றும் சிறப்புத் தெய்வம் "மால்" என்பது விளங்கும்.[20]

கலித்தொகையில் திருமாலைப் பற்றிய பாடல்கள் அதிகம் காணப்படுகின்றன.

"தொல் கதிர்த்திகிரியான்"(கலி.104:78)

"ஆடுகொள் நேமியான்" (கலி.105:72)

"தெய்வமால்" (கலி.107:22)

"மலையொடு மார்பு அமைந்த செல்வன்"(கலி.108:55)

நன்றாக கழுவப்பெற்ற நீலமணி போன்றும் கார்மேகத்தைப் போன்றும், கடலைப் போன்றும் கார் இருளைப் போன்றும், கரிய பூவைப் புதுமலர் போன்றும் இவனுடைய திருமேனி ஒளிரும். இவ்வகையான மேனி அழகினாலே "மாயோன்" என்னும் பெயர் இவனுக்கு வழங்குகிறது.

"வெளவல் கார்இருள் மயங்குமணி மேனியன்" (பரி.15:50)

"பூவை விரிமலர் புரையும் மேனியை" (பரி.15: 50)

முல்லை நில மக்கள் குரவைக் கூத்து ஆடி திருமாலை வழிபடுகின்றனர். முல்லைக் கலிப் பாடல்களில் இவர்கள் குரவையாடிப் பரவும் வகைகள் சிற்சில இடங்களில் குறிக்கப்பட்டிருக்கின்றனர். ஆயர்கள் வாழும் சிறுகுடியின் மன்றத்தில் ஆட்டத்திற்கு ஏற்ப இனிய பண் அமைந்த தாள இசையுடன் கூடிய கூத்து ஆடுகின்றனர். ஒருவரை ஒருவர் தழுவி நின்று கைகோத்து ஆடப்படுவது இக்கூத்தாகும்.

“தண்ணுமைப் பாணி தளராது எழுக
பண்ணமைஇன் சீர்க் குரைவயுள் தெண் கண்ணி
தின்தோள் திறல்ஒளி மாயப்போர் மாமேனி
அம்துவர் ஆடைப் பொதவனோடு ஆய்ந்த
முறுவலாள் மென்தோள் பாராட்டி சிறுகுடி
மன்றம் பரந்தது உரை”(கலி. 102: 35-39)

இவ்வாறு திருமாலைச் சங்ககால மக்கள் வழிபட்டதைப் போன்று இன்றும் திருமால் வழிபாடு சிறப்புற்று விளங்குகிறது.

### 2.2.6. நடுகல்:

போரினில் எதிரிகளோடு போரிட்டு உயிர் துறந்த வீரர்களுக்கு கல்நட்டு வணங்குவதை தமிழர்கள் வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

“நடுகற்பீலி சூட்டி துடிப்படுத்து
தோப்பிக் கள்ளொடு துரூ உப்பலி கொடுக்கும்” (அகநா. 35:8-9)

இவ்வாறு கடவுளை வழிபட்டு வந்த மக்கள் அடுத்து போரில் வீரமரணம் அடைந்தவர்களுக்கு நடுகல் நட்டு வழிபட்டுள்ளமை

“நல்அமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்” (அகநா. -67: 8-10)

இவ்வரிகள் மூலம் தெரியவருகிறது. தமிழக மக்களிடம் இன்றளவும் இறந்தவர்களைப் புதைத்த இடத்தில் கல்லறை கட்டி வழிபடும் வழக்கம் காணலாகிறது. நடுகல்லில் அவ்வீரனின் பெயர், புகழ், வீரம் போன்றவற்றைப் பொறித்து வந்த பழக்கமே இன்று கல்லறையில் பெயர் பொறித்து வழிபடக்கூடிய வழக்கம் தொடர்ந்து வந்திருக்கலாம் என எண்ண முடிகிறது.

இயற்கைச் சீற்றங்களில் இருந்து மக்களைக் காத்தல், கொடிய விலங்குகளிடமிருந்து மனிதர்களை மீட்டல் போன்ற செயல்களில் ஈடுபட்டு வீரமரணம் அடைந்தவர்களுக்கும் நடுகல் நடப்பட்டு சிறப்பு செய்யப்பட்டது.

### 2.2.7. நிமித்தம் பார்த்தல்:

நடக்கவிருக்கும் செயல்களின் நல்லவை, தீயவைகளை அறிய பறவைகள், விலங்குகள் இவற்றின் ஒலியையும் செயல்பாட்டையும் துணையாகக் கொண்டு செயல்பட்டவர்கள் சங்ககால மக்கள். அவ்வாறு அறியப்படுகின்ற உணர்விற்கு நிமித்தம் எனப் பெயரிட்டனர். புள், நாள், ஓரை என்ற சொற்களால் குறிக்கப்பட்டுள்ளது.

"இடூஉ ஊங்கண் இனிய படூஉம்
நெடுஞ் சுவர்ப் பல்லியும் பாங்கில் தேற்றும்
மனைமா நொச்சி மீமிசை மாச்சினை
வினை மாண் இருங்குயில் பயிற்றலும் பயிற்றும்" (நற். 246: 1-4)

பொருள் தேடச் சென்ற தலைவனின் பிரிவை எண்ணி வருந்திய தலைவியிடம் தோழி நாம் ஒரு செயலை நினைத்துக் கொண்டிருக்கும் போது சுவரில் உள்ள பல்லியும் நம் பக்கத்திலிருந்து ஒலிக்கும், அதுமட்டுமன்று நம் வீட்டில் வேலியாக உள்ள நொச்சிச் செடியின் பெரிய கிளையில் அமர்ந்து குயில் கூவும். இத்தகைய நிமித்தங்கள் உனக்கு கிடைக்கும் பொழுது உன் தலைவன் திரும்புவான் வருந்தாதே என்று கூறுகிறாள்.

மேலும் ஓணான் எதிர்ப்படுதல், குருகுகள் பறத்தல், தலைவியின் கைகளில் வளை செறிதல் போன்றவையும் நன்நிமித்தங்களாகக் கருதப்பட்டன.

பாலை நில வழியில் செல்பவர்களுக்கு நிமித்தம் பார்ப்பதற்கு ஓந்தியைத் தவிர வேறு எப்பொருளும் குறிக்கவில்லை. தலைவனை விட்டுப் பிரிந்திருந்த

தலைவியானவள் துன்பத்தால் வருந்திக் கொண்டிருந்தாள். வழியில் முதுமையான ஓந்தியைப் பார்த்தால் அதன் நிமித்தம் தனக்கு நன்றாகவே அமையும் எனக் கருதினாள்.

"வேதின வெரிநின் ஓதி முது வோத்து
ஆறுசெல் மாக்கள் புள்கொள, பொருந்தும்
சுரனே சென்றனர் காதலர்" (குறுந்.140: 1-3)

அதே நேரத்தில் கன்றில்லாத பசு எதிர்ப்படுதல் தீ நிமித்தமாகவும் கருதப்பட்டது.

"கன்றுஇல் ஓர்ஆ விலங்கிய
புன்தாள் ஓமைய சுரன் இறந்தோரே" (குறுந்.260:7-8)

தலைவன் சென்ற பொழுது நன்நிமித்தங்கள் நிறைய எதிர்ப்பட்டாலும், பாலை நிலத்தின் ஓமை மரங்கள் நிறைந்த வழிகளைக் கடந்து செல்லும் பொழுது கன்றில்லாத ஒற்றைப் பசுவையும் கடந்து தான் தலைவனாவன் சென்றான். இவ்வாறு செல்லும் பொழுது தீய நிமித்தத்தைக் கண்டாலும் தலைவன் திரும்பி வருவான் என்று தோழியானவள் தலைவியிடம் கூறுகிறாள்.

புள் நிமித்தம் பார்ப்பது போல விரிச்சிக் கேட்டல் நிகழ்வும் உண்டு.

"புள்ளும் ஓராம் விரிச்சியும் நில்லாம்" (குறுந்.218:3)

விரிச்சி என்பது நற்சொல் கேட்டலாகும். இக்காலத்தில் அசரீரி வாக்கு என்று சொல்வது போலக் கேட்கும் குரலால் நல்ல செயலும் நிகழும். தீயச் செயல்களும் நிகழும்.

தலைமகன் பரத்தையிற் பிரிந்த காலத்தில் தலைவி மகவு ஈன்றவிடத்து அதனைப் பார்க்கத் தலைவனானவன் வருகின்றான். அப்போது பரத்தையானவள்

முன்னர் பெரிய பாணர்கள் தலைவனைச் சூழ்ந்து காவல் செய்தார் போல இப்போது திருந்திய அணிகலன் அணிந்த மகளிர் நன்நிமித்தமாக நிற்கின்றனர் என்கிறாள்.

“பெரும்பாண் காவல் பூண்டென ஒருசார்
திருந்து மகளிர் விரிச்சி நிற்ப” (நற்.30: 3-4)

தலைவி அடைந்த அச்சத்தைப் போக்குவதற்கு தோழியானவள், நல்நிமித்தம் கண்டதை தோழியிடம் கூறி தலைவனானவன் விரைவில் வருவான் என கூறுகிறாள். ஆயர்கள் மணிமாலை அணிந்த குழலினை மாலை நேரத்தில் ஊதுகின்றனர். அதனால் அழகிய மாலையணிந்த தலைவனைப் பெறுவதற்கேற்ற நன்நிமித்தமாக ஒலித்தது. அதனால் நீ அஞ்சாதே என்று கூறுவதை

“அணிமாலைக் கேள்வற் தரூஉமார் ஆயர்
மணி மாலை ஊதூங் குழல்” (கலி.101: 34-35)

என்னும் பாடல் வரிகளால் அறியலாம்.

**காக்கை கரைதல்**

சங்ககால மக்கள் எப்போதாவது நிகழக்கூடிய சில நிகழ்ச்சிகளைக் கொண்டு நிமித்தங்களைக் நன்னிமித்தம், தீ நிமித்தம் என இரண்டு வகைகளாகப் பிரித்தனர். “காக்கை கரைதல்” விருந்தினர்க்குரிய நிமித்தமாக தற்காலத்திலும் கருதுகிறோம். காக்கை கரைதலைத் தலைவன் வரவு குறித்த நன்நிமித்தமாகக் கொண்ட தலைவி,

‘எழுகாலத்து ஏந்தினும் சிறிது –என்தோழி
பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே” (குறுந்.210:4-6)

என்கிறாள்.

பிரிவுத் துயரால் வருந்திய தனக்கு ஆறுதலாகக் கரைந்து குரல் தந்தமையாலும், அதன்படியே தலைவன் வந்தமையாலும் தலைவி மகிழ்ச்சி

அடைந்தாள். காக்கை செய்த உதவியை நினைக்கும் பொழுது, தான் வழங்கும் உணவு மிகச் சிறியதே எனக் கருதினாள்.

காக்கை கரைந்தால் வீட்டிற்கு விருந்தினர்கள் வருவர் என்னும் நம்பிக்கை இன்று நம்மிடையே இருப்பதைப் போன்றே, அக்காலத் தமிழ் மக்களிடமும் இருந்தது. காக்கை கரைதலைத் தலைவன் வரவு குறித்த நன்னிமித்தமாகக் கொண்ட தலைவி தெய்வத்தை வழிபட்டு இடும் பலி உணவாகக் காக்கைக்குச் சிறப்புச் செய்ய நினைத்தாள். பிரிவுத்துயரால் வருந்திய தனக்கு ஆறுதலாகக் காக்கையானது கரைந்து குரல் கொடுத்தாலும், அதன்படியே தலைவன் வந்தமையாலும் தலைவி மகிழ்ந்தாள்.

நல்நிமித்தம் உரைத்த காக்கைக்கு இடையர்கள் வளர்த்த பசுக்கள் தந்த பாலிலிருந்து தயாரித்த நெய்யோடு கலந்த வெண்சோற்றினை ஏழு பாத்திரங்களில் தோளில் வைத்து தாங்கி நின்றாலும் அக்காக்கைச் செய்த உதவிக்கு நான் உதவும் பலிச்சோறு ஈடாகாது என்று தோழி கூறுவதாக அப்பாடல் அமைந்துள்ளது.

“…………
பல்ஆ பயந்த நெய்யின் தொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு” (குறுந். 210:2-3)

மாசற்ற மரத்திலிருந்து மக்கள் இடுகின்ற பலிச் சோற்றை உண்ணுகின்ற காக்கையானது நெடியக் கிளையிலிருந்து தன் மேல் விழுகின்ற மழைத் துளியோடு அசைந்துக் கொண்டு இருக்கும்.

“மாசு இல் மரத்த பலி உண் காக்கை”(நற்.281:1)

இப்பாடலின் மூலம் பலியுணவிற்காக காத்திருக்கும் காக்கையைப் போல நாமும் அவருடன் கூடி வாழ்வதற்காகக் காத்திருக்கிறோம் என்பதை தோழி தலைவிக்கு உணர்த்துகிறாள்.

ஐங்குநுறூற்றுப் பாடலொன்றில் உடன்போக்கில் சென்ற தன்னுடைய மகளும் அவளது காதலனும் இல்லத்திற்கு திரும்ப வேண்டுமென்று நினைத்த தாய் காகத்திற்குப் பராய்க்கடன் உரைத்தது அதாவது,

“மறு இல்தூவிச் சிறு கருங் காக்கை
அன்புடை மரபின் நின் கிளையோடு ஆரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி” (ஐங். 391: 1-3)

குறையில்லாத கருமைநிறச் சிறகுகள் கொண்ட காக்கையே நீ நன்றிமித்தமாக கரைய வேண்டும் என வேண்டினாள். அவ்வாறு கரைந்தால், அக்காக்கையும் அதன் சுற்றமும் உண்ணுமாறு பொன்வட்டிலில் நிணத்தோடு கூடிய சோற்றினைப் பலியாகக் கொடுப்பேன் என்கிறாள் நற்றாய்.

நற்றிணைப் பாடலொன்றில் ஆலமரத்தின் கீழ் கடவுளுக்குப் படைத்த பலியுணவைச் சேர்ந்த விரல்களையுடைய காக்கைகள் உண்ணும். அவை பகல்பொழுதில் எங்குத் திரிந்தாலும் துன்பம் தரும் மாலைப்பொழுதில் தத்தம் இனத்தோடு சென்று சேர்ந்து விடும் இதனை,

“நெடு வீழ் இட்ட கடவுள் ஆலத்து
உகு பலி அருந்திய தொகு விரற் காக்கை” (நற். 343: 4-5)

இவ்வாறு காக்கையானது எங்கிருந்தாலும் மாலைப் பொழுதில் தன் கூட்டத்துடன் சென்று விடுகிறது. ஆனால் நம் தலைவன் சென்ற நாட்டில் மாலைப்பொழுது இல்லையோ எனத் தலைவி ஐயுற்றாள். இதே போன்று காக்கைப் பற்றிய நம்பிக்கைகள் இன்றும் தமிழர் பண்பாட்டில் காணப்படுகிறது.

### 2.2.9. கண்ணேறு:

கண்ணேறு என்பது ஒருவர் கண்ணினால் பார்த்தால், அவ்வாறு பார்க்கப்பட்டவருக்கு விளையக்கூடிய தீங்கைக் குறிக்கும் சொல்லாகும். கண்ணினால் எறிதல், அழித்தல் என்பது இதன் பொருளாகும். சிலருடைய கண்களின் பார்வைக்கு கண்ணேறு ஏற்படும் என்று இன்றளவும் நம்பிக்கை உள்ளது. இக்காலத்தில் இதனை 'திருஷ்டி' என்கிறோம். இதற்கென செய்யக்கூடியப் பரிகாரத்தை "திருஷ்டிப் பரிகாரம்" என்கிறோம். பெரும்பாலான உலக மக்களிடம் இருக்கும் இந்நம்பிக்கை அக்காலத் தமிழ்மக்களிடமும் இருந்தது. இதனைக் கூறும் நற்றிணைப் பாடலில்,

"வாராய் பாண நகுகம் - நேரிழை
கடும்புடைக் கடுஞ்சூல் நம் குடிக்கு உதவி
நெய்யோடு இமைக்கும் ஐயவித் திரள் காழ்
விளங்கு நகர் விளங்கக்கிடந்தோட் குறுகி
புதல்வன் ஈன்றெனப் பெயர் பெயர்த்து" (நற்.370:1-5)

குழந்தையையும் தாயையும் பார்க்க உறவினர்கள் வரும் பொழுது அவர்களின் கண்ணேற்றிலிருந்து குழந்தைகளைப் பாதுகாக்க வீட்டில் நெய்யையும் ஐயவி என்னும் வெண்சிறுகடுகையும் தூவினர்.

மற்றொரு பாடலில் மகளிர் நீராடும் பொழுது பிறருடைய கண்ணேறுப்படாமல் இருப்பதற்காக தலையில் எண்ணெய்யையும் ஐயவியையும் தேய்த்துக் கொண்டு நீராடினர். என்பதை,

"ஐயவி அணிந்த நெய்யாட்டு ஈரணி" (நற்.40:7)

என்ற பாடல் மூலம் அறிய முடிகிறது.

சங்க கால மக்களிடம் இக்கண்ணேறு கழித்தல் முறையானது பின்பற்றப்பட்டாலும் இன்றும் அவரவர் நம்பிக்கைகளுக:கு ஏற்ப கண்ணேறு கழித்தலுக்கான செயல்களைப் பின்பற்றும் பண்பாட்டு முறை காணப்படுகிறது.

### 2.2.10.பல்லி நிமித்தம்:

பல்லி நிமித்தம் பிற நிமித்தங்களைக் காட்டிலும் சிறந்ததாக பழந்தமிழர்களால் கருதப்பட்டது. பல்லியின் ஒலி பெரும்பாலும் நன்னிமித்தமாகவே கருதப்படுகிறது. நற்செய்திகளை சரியான முறையில் கணித்துச் சொல்கின்ற இடங்களில் பல்லி சொல்லக் கூடிய பலனுக்கு இன்றும் மக்களிடம் வரவேற்பு உள்ளது. நல்ல செயல்களுக்காக பல்லியின் சொல்லை எதிர்பார்த்துக் காத்திருக்கக்கூடிய சூழல்கள் சமூகத்தில் இடம்பெறுவதை இன்றளவும் காணமுடிகிறது.

“பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்ல கூறு என நடுங்கி
புல்லென் மாலையொடு பொரும்கொல் தானே” (அகநா.-289:15-18)

பிளந்த வாயினை உடைய பல்லி ஒலியெழுப்பும் பொழுதெல்லாம் தெய்வத்தைத் தொழுது, “நற்சொல் கூறுக” என வேண்டி மனம் நடுங்கி ஒளியிழந்து மாலைக் காலத்தே துன்புற்ற செய்தியை இப்பாடல் வரிகளின் மூலம் அறிய முடிகிறது.

“……………..மனைவயின்
பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன” (கலித்.11:20-21)

பல்லியானது நிமித்தம் சொல்வதோடு மட்டுமல்லாமல் அது நல்ல இடத்தில் சொல்ல வேண்டும் என்ற நம்பிக்கையும் மக்களிடத்தில் இருந்துள்ளமை தெரியவருகிறது.

“உறுவது கூறும்.சிறு செந்நாவின்
மணி ஓர்த் தன்ன தெண்குரல்
கணிவாய் பல்லிய காடு இறந்தோரே” (அகநா.151:13-15)

தலைவனின் வருகைக்காக பல்லியின் சொல் கேட்டு காத்திருக்கும் தலைவியைப் பற்றி இப்பாடல் எடுத்துரைப்பதாக அமைகிறது.

“இரை நசைஇக் கிடந்த முதுவாய்ப் பல்லி
சிறிய தெற்றுவது ஆயின் பெரிய
ஓடை யானை உயர்ந்தோர் ஆயினும்
நின்றாங்குப் பெயரும் கானம்
சென்றோர் மன்என் இருக்கிற் போர்க்கே” (அகநா.387:15-20)

கண்ணிமைக்காது உணவிலே கருத்தூன்றிக் கிடந்த முதிய பல்லியானது சிறிது தடை செய்தாலும் பெரிய முகப்படாம் அணிந்த யானை மீது செல்லும் அரசியராயினும் அவ்விடத்தில் இருந்து மேலும் செல்ல நினைக்காது வந்த வழி திரும்பிச் செல்வர் என்னும் செய்தியின் மூலம் பல்லியின் நிமித்தத்திற்கு இருந்த முக்கியத்துவத்தை உணர முடிகிறது.

“செங்காற் பல்லி தன்துணை பயிரும்
அங்காற் கள்ளிஅம் காடு இறந்தோரே”(குறுந்.16: 4-5)

பாலை நிலத்தில் கள்வர் அம்பின் நுனியை கூர்மைப்படுத்தும் பொழுது ஏற்படும் ஒலியைக் கேட்டு. தம் தலைவியைப் பற்றி சிந்தனை தோன்றாமாலிருந்தாலும், பல்லியின் துணையை அழைக்கும் குரல் கேட்டு நினையாமல் இரார் என்ற குறிப்பு இப்பாடலால் உணர்த்தப்படுகின்றது. பல்லி, தன்னுடைய துணையை அழைக்கும் ஒலியைத் தன் மனையிடத்துப் பலகால் கேட்டவர் ஆதலின், இடைச் சுரத்தில் பல்லி எழுப்பும் ஒலியின் வேறுபாடு உணர்ந்து உறுதியாக நம்மை அடைவார் என்ற குறிப்பும் புலப்படும். இப்பாடலின் மூலம் பல்லி நிமித்தத்தின் முக்கியத்துவம் பற்றி உணரமுடிகிறது.

"எம்மினும் விரைந்து வல்எய்தி பல்மாண்
ஓங்கிய நல்குல் ஒருசிறை நிலைஇ
பாங்கர்ப் பல்லி படுதோறும் பரவி" (அகநா.9:17-19)

வினைமேற் சென்ற தலைவன் வினை முடிந்து மீண்டு வரும்பொழுது விரைந்து செல்லும் தேரினை மேலும் விரைவாக ஓட்டும்படி தேர்ப்பாகனிடம் கூறியதை இப்பாடல் வரிகள் உணர்த்துகிறது.

### 2.2.11. நற்சொல் கேட்டல்:

பழங்காலத் தமிழர்கள் ஒவ்வொரு செயலை மேற்கொள்ளும் போது அதனை ஊக்கப்படுத்தக் கூடிய வகையில் நல்ல சொற்களைக் கேட்பது நன்மை பயக்கும் என்று நம்பினர். தொல்காப்பியர் இதனை "விரிச்சி" என்று குறிப்பிடுகின்றனர்.

"நலம் மிகு கூந்தல் நகை கொளப் புனைய"(ஐங்-463:2)

புதர்களின் மேல் பூத்திருந்த நறுமணம் மிக்க மலர்களைப் பறித்துத் தலைவி தன் தலையில் சூடிக் கொள்கிறாள். அதைக் கண்ட தலைவன் "நலம் மிகு கூந்தல்" என நற்சொல்லைக் கூறி தலைவியினுடைய அன்பினைப் பெறுகிறான்.

"என் கைக்கொண்டு தன் கண் ஒற்றியும்
தன் கைக்கொண்டு என் நல்நுதல் நீவியும்
அன்னைப் போல இனியக் கூறியும்" (நற்.28: 1-3)

தலைவனுடைய கைகளைத் தானெடுத்துத் தன் கண்களில் ஒற்றியும் தன் கைகளில் அவளுடை அழகிய நெற்றியைத் தடவியும் அன்னையைப் போல இனிய சொற்களைக் கூறினான் தலைவன்.

"அமிழ்தம் உண்க நம்அயல் இலாட்டி
மலைகெழு நாடனை வரும் என்றோளே" (குறுந்.201:1-2)

அயல்மனையில் உள்ளவர் வருவார் எனக் கூறிய சொல்லைத் தலைவியும் தோழியும் விருச்சியாகக் கொண்டனர். அவள் கூறியவாறே தலைவனும், வரைவோடு வந்தமையால் அவள் அமுதத்தை உண்க” என்கிறாள் தலைவி.

மனையிலே உள்ள மணற்பந்தரிலே மணி ஒலிக்க, நாழியின் கொண்ட நெல்லுடனே நறியுமுல்லைப் பூவும் நீரும் சொரிந்து முதுபெண்டிர்கள் விரிச்சி கேட்டு நிற்பர்.

“யாழ் இசை இன வண்டு ஆர்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பு அவிழ் அலரி தூஉய் கைதொழுது
பெருமுது பெண்டிர், விரிச்சி நிற்ப” (முல்லை.8-11)

இவ்விரிச்சிக் கேட்டலின் ஒரு பகுதியாகவே குறிகேட்டலையும் கூறலாம்.

தங்கள் குடும்பத்தில் ஏதேனும் தீயசகுனங்கள் ஏற்பட்டாலோ அல்லது நல்ல விசேசங்கள் ஏதேனும் நடக்க வேண்டும் என்றாலோ குறிக்கேட்கும் வழக்கம் சங்ககாலத் தமிழ்மக்களிடம் இருந்தது. மலைவாழ் பெண்ணாகிய கட்டுவிச்சி என்பவள் குறிக்கூறுவாள். இவளை “அகவன் மகள்” என்றும் அழைப்பர். தன் மகளின் மேனிவேறுபாட்டுக்குரிய காரணத்தை அறிய விரும்பும் தாயானவள் கட்டுவிச்சியை அழைத்து குறிக்கேட்பாள். கட்டுவிச்சியானவள் தெய்வத்தை வாழ்த்திப் பாடி தெய்வ ஆவேசம் முற்றக் குறிசொல்வாள். ஒரு சில நேரங்களில் முறத்தில் நெல்லைப் பரப்பி நெல்மணிகளை எண்ணிப் பார்த்துக் குறிசொல்வாள். அதுமட்டும் மல்லாமல் வேலனும் குறி கூறுவது வழக்கம்.

குறுந்தொகைப் பாடலொன்றில் தலைவியின் காம நோயின் உண்மைத் தன்மையை அறிய விரும்பிய தாய் கட்டுவிச்சியிடம் கட்டுப்பார்ப்பதை,

“அகவன் மகளே அகவன் மகளே
மனவுக் கோப்பு அன்ன நல்நெடுங் கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே” (குறுந்.23:1-3)

என்னும் பாடலடி புலப்படுத்தும்.

தெய்வங்களையும், குலத்தோரையும் அழைத்துப் பாடுகின்ற கட்டுவிச்சியே, சங்கு மணிகளால் ஆகிய கோவையைப் போன்ற நல்ல வெண்ணிறமுடைய நீண்ட கூந்தலையுடைய கட்டுவிச்சியே பாட்டுக்களைப் பாடுக. அப்பொழுது தோழியானவள் அவளை இடைமறித்து அவருடைய நெடிய குன்றத்தைப் புகழ்ந்துப் பாடியப் பாட்டையே மீண்டும் பாடுக என்றாள்.

நற்றிணைப் பாடலொன்றில், தலைவனது பிரிவால் தலைவிக்கு உடம்பில் பசலை நோய் ஏற்பட அதைக் குறித்து அன்னையானவள் கட்டுவிச்சியிடம் குறி கேட்கிறாள் என்ன ஆகுமோ என்று தோழி கூறுகிறாள்.

“நல் நுதல் பரந்த பசலைக் கண்டு, அன்னை
செம்முது பெண்டிரொடு நெல்முன் நிறீஇ
கட்டின் கேட்கும் ஆயின், வெற்பில்
ஏனற் செந்தினைப்பால் ஆர் கொழுங் குரற்” (நற்.288: 5-8)

தலைவியின் பசலையை நீக்க அன்னையானவள் முதுமையான கட்டுவிச்சி முதலானோருடன் வீட்டின் கண் நெல்லைப் பரப்பிக் கட்டுவித்து, அக்கட்டுகளுக்கு எதிரே நம்மை நிறுத்திக் குறி கேட்பாள். அவ்வாறு கேட்கும்போது, தினையின் பால் நிறைந்த செழுமையான கதிர்களைப் பறிக்கப் போகும் கிளிகளை விரட்டுவதற்காக நாம் சென்றிருக்கும்போது அதனைக் கூறாமல், இந்நோய் முருகனால் ஏற்பட்டது என்று கூறினாள் என்ன செய்வது என்று தோழி தலைவியிடம் கூறுகிறாள்.

அகநானூற்றுப் பாடலொன்றில் நன்கு செறிந்து விளங்கும் என்னுடைய வளையல்கள் கழண்டு விழுமாறு இருப்பதை நோக்கினாள். முதுமையான பொய் கூறுவதில் வல்லவரான கட்டுவிச்சியைக் கேட்கவும் தொடங்கினாள். அவளும், பிறப்பு அரிசியைப் பரப்பி வைத்து இது முருகனது செயலால் வந்த போக்குதற்கு கடினமான வருத்தம் என்றாள். அன்னையும் அதனை நம்பினாள் என்று தோழி தலைவிக்கு கூறினாள்.

ஐங்குநுறூற்றுப் பாடலொன்றில் தலைவியின் வேறுபாடு கண்டு வருந்திய தாய் வேலனை அழைத்து வெறியாடத் துணிந்தாள். அதனை அறிந்த தோழி அதனைத் தலைவனுக்கு உணர்த்தி திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்பதை உணர்த்துகிறாள்.

"பொய்யா மரபின் ஊர் முது வேலன்
கழங்கு மெய்ப் படுத்து கன்னம் தூக்கி
முருகு என மொழியும் ஆயின்
கெழுதகைகொல் இவள் அணங்கியோற்கே"(ஐங்.245: 1-4)

மற்றொரு பாடலில் தலைமகன் பிரிவினால் தலைவி வேறுபட்டது கண்டு வருந்திய தாய் வேலனை அழைத்து வெறியாடல் நடத்தி தன் மகளின் துயர் தீர்க்க முயன்றாள். இதை அறிந்த தோழி உறவினர் அனைவரும் அறியுமாறு தலைவியைப் பற்றி கூறுகிறாள்.

அன்னையானவள் வேலனை வெறியாடுதலுக்கு அழைத்தலை நான் அறிவேன். அவ்வாறே வேலனும் நம் மனையில் அமைந்த களத்தில் வெறியாட காரணம் முருகனே என்பானாயின், அம்முருகன் என்ற பெயர் அரிய மலைநாட்டினை உடைய தலைவனது பெயராகுமோ என்று தோழி கூறினாள்.

இவ்வாறு இன்றும் இக்குறி கேட்கும் பழக்கமானது பல இடங்களில் நடந்து கொண்டு தான் இருக்கிறது. கோயில்களிலும் இக்குறி சொல்லும் பழக்கம் காணப்படுகிறது. ஒரு சில கோயில்களில் கிடா வெட்டி பூசைப் போடும் நேரத்தில் பூசாரி அருள் வந்து குறி சொல்வதும் வழக்கம், பெண்களும் அதிக அளவில் குறிசொல்லும் பழக்கம் உடையவர்களாக இருக்கின்றனர். ஆண்களும் குறி சொல்லும் திறமை மிக்கவர்களாகத் திகழ்கின்றனர். அதனால் குறி சொல்வதைப் பொறுத்த வரை அப்பண்பாடானது அன்று முதல் இன்றும் பின்பற்றிக் கொண்டு வருதல் சுட்டத்தக்கது.

## 2.2.12.கனவு:

மக்கள் வாழ்வில் பின் நிகழப் போவது முன்னே உணர்த்துவது கனவு என்ற நம்பிக்கை. சங்ககாலம் முதல் இன்றளவும் இருந்து வருகிறது. மனித மனத்தின் ஆழ்மன வெளிப்பாடு கனவு. பகலில் நடக்கும் நிகழ்ச்சி இரவிலே வரும் என்றும் தூங்கச் செல்லும் முன் நாம் நினைக்கும் சில சம்பவங்களே கனவாகத் தோன்றும் என்பர் உளவியல் ஆய்வாளர்கள்.

இவ்வாறு காணும் கனவுகள் காணப்படும் நேரத்திற்கேற்ப பலனளிக்கக் கூடியவை என்ற நம்பிக்கை மக்களிடையே இருந்து வருகிறது. விடியற் காலையில் காணக்கூடிய கனவு பலிக்கும் என்றும் பகற்கனவு பலிக்காது என்பது மக்களிடம் பொதுவாக காணப்படக்கூடிய நம்பிக்கை.

"நுண்பூண் மடந்தையைத் தந்தோய் போல
இன்துயில் எடுப்புதி-கனவே" (குறுந்.147: 3-4)

தலைவன் தனது தலைவியைக் கனவிலே காண்கிறான். அவளுடைய அழகைப் போற்றுகின்ற பொழுது கனவு கலைந்து போகிறது. கனவு கலைந்து

போனாலும் கனவில் கண்ட தலைவி என் முன்னர் வருவாள் என தலைவன் நம்புகிறான்.

“நனவில் தான் செய்தது மனத்தது ஆகலின்
கனவில் கண்டு கதுமென வெரீஇ”(கலி.49: 3,4)

பகலிலே செய்த காரியங்கள் தான் இரவில் கனவாக வரும் என்ற செய்தியை இக்கலித்தொகைப் பாடல் உணர்த்துகிறது.

“கனவுகள் மக்களுக்கு வாழ்வில் பின் நிகழப்போவதை முன்னர் உணர்த்துகின்றன என்று நம்புகின்றனர். மரப்பெட்டி உடைதல், ஏற்றி வைத்த தீபம் அணைதல், தேங்காய் உடைதல் போலக் கனவு கண்டால் தீமை விளையும் எனக் கருதுகின்றனர். கனவில் மரணம் என்றால் சுபம். திருமணம் என்றால் இழவாகும். அதாவது கனவுக்கும் நேரில் காண்பதற்கும் பலன்கள் எதிரிடையாக இருக்கும்”[(21)] என்று சு.சக்திவேல் குறிப்பிடுகிறார்.

பிரிந்த தலைவன் கனவில் வந்து இன்பத்தைக் கொடுத்தான் எனத் தலைவி தோழியிடம் கூறுகிறாள்.

“கனவும் கங்குல் தோறும் இனிய நனவும்” (அகநா. 141-2)

என்ற பாடல் வரி கனவு பற்றிய நம்பிக்கையை எடுத்துரைக்கிறது. கனவுகள் நிமித்தங்களின் குறியீடாகவே கருதப்பட்டது.

அகநானூற்றுப் பாடலொன்றில் அன்றாட வாழ்க்கையில் நடக்கும் நிகழ்வுகளில் ஒன்று கனவு காணுதல், கனவில் வரும் நிகழ்ச்சிகள் கண்டிப்பாக நடக்கும் என்று நம்பிக்கை கொண்டிருந்தனர். ஒருவர் கண்ட கனவினை மற்றவர்களிடம் சொல்லி அதன் பலனை அறிந்துகொள்வது மனிதர்களின்

பண்பாகும். சங்க கால மக்கள் கனவிற்கு கொடுத்த முக்கியத்துவத்தை நாம் இன்றும் அதே பண்பாட்டோடு முக்கியத்துவம் கொடுத்துப் பின்பற்றுகிறோம்.

### 2.2.13. சூளுரைத்தல்:

தான் சொன்ன சொல் மாறாமல் வாழ்பவர்கள் சான்றோர்கள். வாழ்தல் வேண்டி பொய் கூறாத தன்மையினைக் கொண்டவர்கள் தன் நிலையிலிருந்து மாறாதிருக்க இத்தகைய சத்தியம் கடைபிடிக்கப்படுகிறது.

"திருமேனி விளக்கின் அலைவாய்ச்
செருமுருகு சேஎ யொடுற்ற சூளே"

தலைவன் தன்னிலை மாறமாட்டேன் என திருச்செந்தூர் முருகன் மீது சத்தியம் செய்ததாகவும் அந்நிலையிலிருந்து தவறிய அத்தலைவனுக்கு அத்தெய்வத்தால் ஏதாவது துன்பம் ஏற்படுமோ என அஞ்சிய தலைவியைப் பற்றி இப்பாடல் எடுத்துரைக்கிறது. அக்கால மக்கள் இறைவன் மீது கொண்டுள்ள பற்றினையும் அச்செயலிலிருந்து பிழைத்தால் இறைவன் தவறு செய்பவர்களையும் சத்தியம் மீறுபவர்களையும் தணடிக்கும் தன்மையினை உடையவன் என்ற நம்பிக்கையும் கொண்டிருந்தமை உணரமுடிகிறது.

"நீ கூறும் பொய்ச்சூள் அணங்கு ஆகின் மற்றுஇனி
யார்மேல் விளியுமோ கூறு" (கலித-88:20-21)

பரத்தையர் சேரியினின்று வருகின்ற தலைவனுடன் தலைவி ஊடல் கொள்கிறாள். தலைவன் பொய்சூள் கூறுவதைக் கேட்ட தலைவி அவனது பொய்சூளுக்கு அஞ்சுகிறாள். கற்புக் காலத்தில் சூளுரைத்தல் தொடர்புடைய அனைவரையும் பாதிக்கும் என என்னும் தலைவியினைப் பற்றி எடுத்துரைப்பதாக இப்பாடல் அமைகிறது.

தெய்வத்தின் முன் சூளுரைத்தல் நடைபெற்றமையை உணரமுடிகிறது. கடவுளைக் சுட்டிக்காட்டி சூளுரைத்தல் இனி ஒரு நாளும் உன்னைப் பிரியேன் என தெய்வத்தின் முன் சூளுரைத்தல் எனப் பல்வேறு நிலைகளில் சூளுரைத்தல் நிகழ்ந்துள்ளமை தெரியவருகிறது.

"யாரும் இல்லை தானே கள்வன்
தான்அது பொய்ப்பின் யான் எவன் செய்கோ" (குறுந்-25: 1-2)

களவுக்காலத்தில் தலைவியோடு நெருங்கிப் பழகியத் தலைவன் வரைவிற்கு சம்மதியாமல் காலநீட்டிப்புச் செய்வது கண்டு வருந்திய தலைவி இவ்வாறு புலம்புகிறாள்.

"வரிஆர் சிறுமனை சிதைஇ வந்து
பரிவுதரத் தொட்ட பணிமொழி நம்பி" (நற்றி.378:9-10)

தலைவனின் சூளுரையை எண்ணி தலைவி புலம்பும் செய்தியை இப்பாடல் கூறுவதாக அமைகிறது. இத்தகைய சூளுரை பண்பாட்டின் அடையாளமாகத் திகழ்ந்தமையை இதன்மூலம் காணமுடிகிறது. சத்தியம் என்ற சூளுரைத்தல் இன்றும் நம் மக்களிடையே காணலாகிறது.

### 2.2.14. பேய் பற்றிய நம்பிக்கை:

ஒருவர் இறந்த பின்னும் அவரது உயிர் இவ்வுலகில் உலவுகிறது என்ற நம்பிக்கை காலங்காலமாக மக்களிடம் நிலவுகிறது. இரவு நேரங்களில் இறந்த உடலில் இருந்து வெளியேறிய ஆவிகள் உலவுவதாக நம்புகின்றனர்.

பேய் பற்றிய நம்பிக்கையானது நெடுஞ்காலமாகவே மக்களிடத்தில் இருந்து வருகிறது. இயல்பாக இறக்காமல் வேறு விதமாக இறப்பவர்களின் ஆவி பேயாக சுற்றும் என்பது மக்களின் நம்பிக்கை.

"ஏனைப் பிசாசு அருள் என்னை நலிதறின்
இவ்ஊர்ப் பலி நீ பெறாஅமல் கொள்வேன்" (கலித்-65:17-18)

பேய்களில் ஆண், பெண் பாகுபாடும் இருந்துள்ளது.

"பொழுதும் எல்லின்று பெயலும் ஓவாது
கழுது கண்பனிப்ப வீசும்" (குறுந் -161 : 1, 2)

பேய் போல நடுஇரவில் பெருமழை வந்தது என தன் பிள்ளைகளைக் கூட்டிக் கொண்டு சென்று உறங்கிய தாயினைப் பற்றி இக்குறுந்தொகைப் பாடல் எடுத்துரைக்கிறது.

எழுதி யன்ன திண்நிலைக் கதவம்
கழுது வழங்கு அரை நாள்" (அகநா.-311:3,4)

இப்பாடல் நள்ளிரவில் பேய்கள் நடமாடும் என மக்கள் நம்பியுள்ள செய்தியைப் பற்றி கூறுகிறது.

சங்க கால மக்களிடம் பேய் பற்றிய நம்பிக்கை இருந்துள்ளது. அவர்கள் பேய்களைக் கண்டு அஞ்சினர். பேய்கள் சுடுகாட்டிலும், மரங்களிலும் வாழும் எனத் தமிழர்கள் நம்பினர். இறந்தவர்கள் இரவினில் பேயாகத் திரிவர் என்பதை அனைத்து மக்களும் நம்பினர். வேப்பிலையும் வெண்சிறுகடுகும் மக்களைப் பேயினின்றும் காக்கும் என நம்பப்பட்டது. குழந்தைகளுக்குத் தீங்கு நேரிடாமல் இருப்பதற்காகத் குழந்தைகளின் தலையில் நெய்யும் வெண்கடுகும் தடவப்பட்டன. இதை நற்றிணைப் பாடலொன்றில் காணலாம்.

"நெய்யோடு இமைக்கும் ஐயவித் திரள்காழ்" (நற்.370: 3)

இரவு மரத்தின் இலையை வேப்பிலையோடு சேர்த்துக் கட்டி வீட்டு வாசலில் தொங்கவிட்டனர். வெண்கடுகை வீட்டிற்குள் தூவினர். நறும்புகைகளை வீட்டிற்குள்

பரப்பினர் யாழ் முதலிய இசைக்கருவிகளில் இசை எழுப்பினர். இவ்வாறெல்லாம் பேய்களிடமிருந்து தங்களைக் காத்துக்கொண்டனர்.

இன்றும் பேய் பற்றிய நம்பிக்கை மக்களிடம் அதிகமாக காணப்படுகிறது. இறந்தவர்கள் வீட்டில் அவர்கள் ஆவி உலாவருவதாக நம்பிக்கை கொள்வதால் இன்றும் வீட்டின் வாசல்படியில் கடுகுகளைத் தூவியும் இதற்கென்றே மந்திரிப்பவர்களிடம் சென்று மந்திரித்து விபூதி வாங்கி அதை வீட்டிலிருந்து சுடுகாடு வரைக்கும் போட்டு வருகின்றனர். இப்படிச் செய்வதால் இறந்தவர்கள் பேயாக அலைந்து துன்பம் தர மாட்டார்கள் எனக் கருதினர். அதனால் பேய் பற்றிய நம்பிக்கை இன்றும் நம் பண்பாட்டோடு கலந்துள்ள ஒரு செயல்பாடாகவே உள்ளது.

**அறம் சார்ந்த நம்பிக்கை:**

“கரி பொய்த்தான் கீழ் இருந்த மரம் போலக் கவின் வாடி” -(கலித்-34:10)

என்பதில் பொய்சாட்சி கூறுவதை மக்கள் ஒருபோதும் ஏற்றுக்கொள்வதில்லை. பொய்சாட்சி கூறியவன் ஒரு மரத்தின் கீழிருந்தால் அந்த மரமே கருகி வாடிப்போகும் என்று மக்கள் நம்பியுள்ளனர். மலையில் வாழும் மக்கள் அறம் செய்யாமல் இருந்தால் வள்ளிக்கிழங்கு நிலத்திலே ஆழமாக ஊன்றினாலும் பருத்து காணப்படாது மழை பொழியாது. திணைக்கதிர் முற்றாது என்ற பல மூடநம்பிக்கைகள் பழங்கால மக்களிடம் இருந்துள்ளமை இதன் மூலம் தெரியவருகிறது.

## 2.3. விழாக்கள்:

மனித வாழ்வில் விழாக்களானது முக்கியப் பங்கு வகிக்கிறது. உற்சாகம், ஊக்குவித்தல், உறவினை மேம்படுத்துதல் போன்ற ஒப்பற்ற நிகழ்வாக விழா சிறந்து விளங்குகிறது. எந்த ஒரு விழாவினையும் கொண்டாடி மகிழாதவன்

மனிதனாகவே இருக்க முடியாது. தமிழரின் பண்பாட்டுக் கூறுகளை வெளிப்படுத்தும் நிகழ்வாகவே விழாக்கள் அமைந்துள்ளன.

ஒரு குறிப்பிட்ட நாளில் குடும்பத்தார், சுற்றத்தார், உற்றார், உறவினர் ஆகிய அனைவரும் ஒன்று கூடி மகிழ்வதை திருவிழாக்கள் என்றும் பண்டிகைகள் என்றும் இலக்கியங்களில் குறிக்கப் பெற்றுள்ளன. மக்களுக்கிடையே ஒற்றுமை ஏற்பட விழாக்கள் காரணமாக அமைந்துள்ளன. விழாக்கள் பெரும்பாலும் சமயச் சார்புடையனவாக நடத்தப்பட்டு வருகின்றமை காணமுடிகிறது.

"மனித சமுதாயம் பல்வேறு காரணங்களால் பல்வேறு பிரிவுகளாக வாழ்ந்திருந்த போதிலும் அச்சமுதாயம் ஒன்றிணைந்து கொண்டாடுவது திருவிழாக்களாகும்.

ஆண்டு முழுவதும் உழைத்த மனிதன் ஓய்வு நேரத்தில் மகிழ்ச்சியாக இருக்க விரும்புவது இயல்பு, தமிழகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகளாகத் திருவிழாக்கள் நடைபெற்று வருவதை அறிகிறோம். சமுதாய மாற்றத்தால் புதிய திருவிழாக்களும் தோன்றுகின்றன. இவ்விழாக்கள் மூலம் கலையும், கலையனுபவமும் மேலோங்கி வளர்கின்றன. கலைகளின் வளர்ச்சிக்கே திருவிழாக்கள் மூலகாரணமெனின் அது மிகையாகாது. திருவிழாக்கள் அனைத்தும் கோயிலுடன் பின்னிப் பிணைந்துள்ளன. கோவில் என்றாலே திருவிழா. திருவிழா என்றாலே திருவிழாக்கள். சமயத்தின் கூறாக மட்டுமின்றி கலைகளின் வளர்ப்புப் பண்ணையாகவும் திகழ்கின்றன. திருவிழாக்கள் பண்பாட்டு உறவை வளர்க்கவும், ஒருமைப்பாட்டுணர்வை வளர்க்கவும் பயன்படுகின்றன"[22] என டாக்டர் சு.சக்திவேல் கூறுவது குறிப்பிடத்தக்கது.

### 2.3.1. பாவை விழா:

தை மாதம் பெண்கள் நோன்பிருந்து ஆற்றங்கரைகளில் மணலால் பாவை உருவம் செய்து வைத்து வழிபட்டு நீர்நிலையில் நீராடி மகிழ்வர். தைந்நீராடுதல் என்னும் விழாவினைப் பண்டைத் தமிழர்கள் கொண்டாடி மகிழ்ந்தனர். இவ்விழா பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளமை புலனாகிறது.

"தைஇ நின்ற தண்பெயல் கடைநாள்......
வண்டற் பாவை உண்துறைத் தரீஇத்
திருநுதல் மகளிர்..............." (அகநா.269: 14, 19-20)

இளமகளிர் தைத்திங்களின் இறுதியில் மழை பெய்து குளிர்ச்சி மிகுந்த நாட்களில் வண்டல் விளையாட்டுக்கு வைத்திருக்கும் பாவையை நீர் உண்ணும் துறையினில் கொண்டு வந்து நீராட்டி மகிழ்ந்து பாவை விழாவினை கொண்டாடிய செய்தியை இப்பாடலின் மூலம் அறியமுடிகிறது.

"தைஇத் திங்கள் தண்தயம் படியும்
பெரும் தோள் குறுமகள்" (நற்.80: 7,8)

"தையின் நீராடிய தவத்தலைப் படுவாயோ" (கலி.59: 13)

என்ற அடிகளின் மூலம் தைநீராடும் நோன்பு பண்டையத் தமிழர்களிடம் இருந்துள்ளமை தெரியவருகிறது.

### 2.3.2. கார்த்திகைத் திருநாள் விழா:

கார்த்திகைத் திருநாளை பழங்காலத் தமிழர்கள் சிறப்பாகக் கொண்டாடி மகிழ்ந்தனர். "துபாய்ஸ் என்பார் கார்த்திகைத் தீபத்தைத் தீபஒளி என்றும் கார்த்திகை மாதத்தில் நடைபெறும் என்றும் நெருப்புக்கு உரியது என்றும் உழவுத் தொழிலின் பாற்பட்டது என்றும் கூறுகிறார். ஹோலியும், தீபாவளியும்

நெருப்புக்கும் விளக்குக்கும் மதிப்பு அளிக்கும் தலைசிறந்த கொண்டாட்டங்கள்"(23) என்று வில்லியம் குருக் கூறுகிறார்.

கார்த்திகைத் திருநாளன்று வீதிகளிலும், வாசலிலும் விளக்கேற்றி வைத்து மலர்மாலை கட்டித்தொங்கவிட்ட செய்தியை இப்பாடல் எடுத்துரைக்கிறது.

"உலகு தொழில் உலந்து நாஞ்சில் துஞ்சி
மழைகால் நீங்கிய மாசு விசும்பில்
குறுமுயல் மறுநிறம் கிளர, மதி நிறைந்து
அறுமீன் சேரும் அகல் இருள்நடுநாள்
மறுகு விளக்குறுத்து மாலை தூக்கி
பழவிறல் மூதூர் பலருடன் துவன்றிய
விழவு உடன் அயர வருகதில் அம்ம"(அகநா.141:5-11)

இக்காலத்தில் உழவுத் தொழிலும் முடிந்து, மழை பெய்வதும் முடிவடைகிறது. ஊரில் உள்ளவர்கள் பலரும் ஒன்றுகூடி இவ்விழாவினைக் கொண்டாடுவர்.

கார்த்திகை விழாவைக் கொண்டாடுவதற்கு பொருள் தேட பிரிந்து சென்ற தலைவரும் வருவார் எனத் தலைவி கூறுகிறாள். ஆகவே, அவ்வூரில் இருந்து வெளியூரில் வசிப்பவர்கள் அனைவரும் கார்த்திகை விழாக் கொண்டாட ஊர் திரும்பி விடுவார்கள் என்பதை அறியமுடிகிறது.

தீபத்திருநாளன்று கோயில்களின் முன்பு சோளத்தட்டை, பனை ஓலை போன்றவற்றை குவியலாக வைத்து தீயிடுவர். அவை எரிந்த பின்பு அந்தச் சாம்பலை எடுத்துச் சென்று தங்கள் நிலங்களில் இடுவர். சாம்பலை இட்டால் உழவுத்தொழில் நன்கு விளங்கும் என்ற நம்பிக்கை தமிழர்களிடம் இருந்துள்ளது.

இத்திருவிழாவில் இலைகள் மற்றும் அரும்புகள் இல்லாதது போல ஒரே மாதிரியாக மலர்ந்த இலவம் பூக்களைப் பார்க்கும் பொழுது, மிகுந்த ஆரவாரத்துடன் மகளிர் அனைவரும் கூட்டமாகச் சேர்ந்து ஏற்றிய கார்த்திகைத் தீபத்தைப் போல பொலிவு பெற்று இருக்கும் என்பதை,

"இலை இல மலர்ந்த முகைஇல் இலவம்
கலிகொள் ஆயம் மலிபு தொகுபு எடுத்த
அம்சுடர் நெடுங்கொடி பொற்பத் தோன்றி"(அகநா.11:3-5)

அகநானூற்றுப் பாடலில் காணலாம்.

மற்றொரு நற்றிணைப் பாடலில் தலைவனும் தலைவியும் உடன்போக்கு செல்லும் பொழுது தலைவன் தலைவியிடம் கார்த்திகைத் திருவிழா அன்று ஏற்றப்படும் விளக்கின் வரிசையைப் போல, இலவ மலரும், கோங்க மலரும் பூத்துக் குலுங்கும் மரங்கள் நிரம்பிய உன் தந்தையின் காட்டினைக் காண்பாயாக என்று கூறுகிறான்.

"அறுமீன் பயந்த அறம் செய் திங்கள்
செல் சுடர் நெடுங்கொடி போல
பல்பூங் கோங்கம் அணிந்த காடே" (நற்.209:9-11)

இக்கார்த்திகை விழாவானது பண்டைத் தமிழர்கள் சிறப்பாக கொண்டாடி இருந்தாலும் அப்பண்பாட்டையே இன்றுள்ளவர்களும் மிகச்சிறப்பாக இக்கார்த்திகை விழாவினை சிறப்பாக கொண்டாடி மகிழ்கின்றனர்.

### 2.3.3. உள்ளி விழா:

கொங்கு நாட்டில் வாழ்கின்ற மக்கள் கொண்டாடும் விழாக்களுள் ஒன்று உள்ளி விழாவாகும்.

"................கொங்கர்
மணியரை யாத்து மறுகினாடும்
உள்ளி விழவின் அன்ன" (அகநா.-368 : 16-18)

கொங்கர்கள் இடுப்பில் மணியைக் கட்டிக்கொண்டு தெருவில் கூத்தாடுவது உள்ளி விழாவாகும்.

**2.3.4. புனல் விழா:**

சங்கப் பாடல்களில் புனல் விழா பற்றிய குறிப்புகள் காணப்பெறுகிறது.

"ஒண் பொறிப் புனைகழல் சேவடிப் புரள
கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று
இரும்பொலம் பாண்டில் மணியொடு தெளிர்ப்பப்
புனல் நயந்து ஆடும் அத்தி அணி நயந்து" (அகநா.-376:7-10)

என்ற அகநானூற்றுப் பாடல் புனல் விழாவினைப் பற்றிக் கூறுகிறது.

"நலம் பாராட்டி நடையெழிற் பொலிந்து
விழவிற் செலீஇயர் வேண்டும்" (அகநா.-326: 7-8)

என்னும் பாடலில் பரத்தையிடம் சென்று திரும்பி வந்த தலைவனிடம் தலைவனே உன் தலைவியை விட மிக அழகானவள் பரத்தையே, ஆதலால் நீ இனி அட்டவாயல் என்னும் ஊரில் அழகு பொருந்திய வயல்களின் பெரிய அழகினை ஒத்த தலைவியின் அழகினைப் பாராட்டி, அவளுடன் புனல் விழாவிற்குச் செல்லுதல் உனக்குத் தகுதியில்லாத செயல் என்று தோழி வாயில் மறுத்த செய்தி இடம்பெறுகிறது.

### 2.3.5. பூந்தொடை விழா:

படை பயிற்சியினை சிறப்பாக முடித்த இளைய வீரர்களுக்கு நடக்கு அரங்கேற்று விழாவாக இதனைக் கொண்டாடி மகிழ்வர். இதனை மழவர் விழா என்றும் அழைத்தனர்.

"வார்கழற் பொலிந்த வன்கண் மழவர்
பூந்தொடை விழவின் தலை நாளன்ன
தருமணல் ஞெமிரிய திருநகர்" (அகநா.-187: 7-9)

பூந்தொடை விழாவினைக் கொண்டாடும்பொழுது தெருக்களிலும் வீதிகளிலும் குளிர்ச்சி பொருந்தி மணல் கொட்டப்பட்டிருக்கும். பூத்தோரணங்கள் கட்டப் பெற்று அந்நகர் முழுதும் திருநகர் போல் காட்சியளிக்கும் என இப்பாடல் எடுத்துரைப்பதாக அமைகிறது.

சங்ககாலத்தில் வாழ்ந்த பழந்தமிழர்கள் தங்கள் வாழ்நாளில் விழாக்களுக்கு முக்கியத்துவம் அளித்திருந்தனர். அனைவரும் ஒன்று கூடி மனம் மகிழக்கூடிய விழாக்களைக் கொண்டாடி மகிழ்ந்துள்ளமை புலனாகிறது.

### 2.4. விளையாட்டுகள்:

தமிழர் வாழ்க்கையில் விளையாட்டுக்கள் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன. மனிதன் என்றும் இளமையாக இருப்பதற்கு ஒரு சிறந்த கருவியாகவும் இருக்கிறது. விளையாட்டினால் மகிழ்ச்சி அடைகிறோம் என்று தொல்காப்பியம் எடுத்துரைக்கிறது.

"செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்று
அல்லல் நீத்த உவகை நான்கே" [(24)]

என்ற பாடலிலிருந்து விளையாட்டின் முக்கியவத்தை உணர்ந்து கொள்ள முடிகிறது. சங்க கால மக்கள் பல்வேறு வகையான விளையாட்டுகளில்

விருப்பமுள்ளவர்களாகத் திகழ்ந்தனர். பழங்காலத் தமிழர்கள் ஓய்வு நேரங்களில் பலவகையான விளையாட்டுக்களை விளையாடி மகிழ்ந்துள்ளனர்.

### 2.4.1.ஆடவர் விளையாட்டுகள்:

கொல்லேறு தழுவுதல், மற்போர் புரிதல், நீரில் முழ்கி மண் எடுத்து விளையாடுதல் ஆகியன ஆடவரின் பொழுது போக்குகள். கொல்லேறு தழுவுதலில் மணம் ஆகாத இளைஞர்கள் பங்கு கொள்வர். காளையை அடக்கி அக்காளைக்குரிய தலைவியை மணப்பது அக்கால மரபாக இருந்தது.

### 2.4.2.மகளிரின் விளையாட்டுகள்:

பந்தாடுதல், கழங்காடுதல், மலர் பறித்து விளையாடுதல், புனல் விளையாடுதல் ஆகியன மகளிரின் விளையாட்டுகள்.

### 2.4.3.குழந்தைகளின் விளையாட்டுகள்:

வண்டல் அயர்தல், சிறுவீடுகட்டி விளையாடுதல் ஆகியன சிறுமியரின் பொழுது போக்குகள், சிறுதேர்களை உருட்டி விளையாடுதல் சிறுவரின் விளையாட்டுகள், கிலுகிலுப்பை வைத்து விளையாடுதல், அம்புலியை அழைத்து விளையாடுதல் ஆகியன குழந்தைகளின் விளையாட்டுகள் ஆகும். மேலும் பல பொதுவான விளையாட்டுகளும் பண்டைத்தமிழர்கள் விளையாடி இருக்கின்றனர்.

### 2.4.4. அசதியாடல்:

ஆண், பெண் இருபாலரும் சேர்ந்து வேடிக்கையாகப் பேசி மகிழ்வதை அசதியாடல் என்பர். ஒரு சிலரைத் துணையாகக் கொண்டு விளையாடும் இவ்விளையாட்டு குடும்ப விழாக்கள் மற்றும் பொது நிகழ்ச்சிகளில் தற்காலத்திலும் விளையாடுகின்றனர்.

இதனை கலித்தொகைப் பாடலில்,

“கல்லாக் குறள கடும்பகல் வந்தெம்மை
இல்லத்து வாவென மெய்கொளீஇ யெல்லாநின்
பெண்டிருள் மன்னோ கூறு “ (கலி.94:13-16)

என்றுரைக்கும்.

### 2.4.5.அம்புலி அழைத்தல்:

குழந்தைகள் அழுது அடம்பிடிக்கும் நேரங்களில் அக்குழந்தைகளை அச்சுறுத்தியும், விளையாட்டுக் காட்டியும் அவர்களின் மனதை மாற்ற நினைப்பர். அப்போது குழந்தையிடம் “புலி வருகிறது” என்று கூறி அச்சுறுத்தியும் நிலவைக் காட்டி அதை குழந்தையோடு விளையாட வருமாறு அழைத்தும் மகளிர் குழந்தைகளுக்கு விளையாட்டுக் காட்டுவது வழக்கமாகும். இதனை,

“ஐய! திங்கட் குழவி வருக! என
யான் நின்னை அம்புலி காட்டல் இனிது”(கலி.80:18-19)

முடிகின்றது.

### 2.4.6.ஏறுகோள்:

“எழுந்தது துகள் ஏற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்புக் கலங்கினர் பலர்” (கலி.102:21-24)

முல்லை நிலத்தில் நடைபெற்ற ஒரு வீர விளையாட்டே ஏறுகோள் ஆகும். இவ்விளையாட்டில் இளைஞர்கள் தம் உயிரையும் பொருட்படுத்தாமல் காளைகளை அடக்கி உள்ளனர். “ஏறு தழுவுதல்” என்னும் சொற்றொடரால் இவ்விளையாட்டைக் குறிக்கலாம். இதை வீரவிளையாட்டாக மட்டும் கருதாமல் முல்லை நில மக்கள் வீரம் நிறைந்த மணமகளைத் தேர்ந்தெடுக்க கையாண்டமுறையாகவும் இதனைக் குறிக்கலாம்.

தற்காலத்திலும் ஏறுதழுவுதல் என்னும் வீரவிளையாட்டு ஜல்லிக்கட்டு மற்றும் எருதுகட்டு என்ற பெயர் மாற்றத்தில் பல ஊர்களிலும் பல போராட்டங்களை எதிர்கொண்டு நடைபெற்று வருகின்றது.

**2.4.7.ஓரை:**

ஓரை என்பது பெண்கள் விளையாடுகின்ற விளையாட்டாகும். கரிய சேற்றைக் கிளறி ஆமையின் முட்டையையும், ஆம்பலின் கிழங்கையும் மகளிர் எடுத்து விளையாடுவர். ஓரை விளையாட்டு விளையாடிய பெண்களை ஓரை மகளிர் என குறிப்பதுண்டு.

**2.4.8. எண்ணி விளையாடல்:**

ஒன்று, இரண்டு, மூன்று என விரலால் சுட்டி எண்ணி விளையாடுவதை குறிப்பதாகும். பெரும்பாலும் பெண்கள் விளையாடும் விளையாட்டாகவே அமைந்திருக்கும். குதிரை வண்டிகள், யானைகள், பறவைகள் போன்றவற்றை அக்கால மகளிர் எண்ணி விளையாடி மகிழ்ந்ததைக் காண முடிகிறது. இவ்விளையாட்டின் மூலம் பொறுமை நம்பிக்கை மற்றும் கணித அறிவும் வளர்க்கப்பட்டிருக்கின்றது.

சங்ககாலப் பெண்கள் வீட்டிற்கு அருகில் உள்ள மேட்டில் ஏறி நின்றுக் கொண்டு வழியில் செல்லும் உமணர்களின் உப்பு வண்டிகளை எண்ணிக்கொண்டிருப்பார்கள் என்பதனை

"மடநோக்கு ஆயமொடு உடன் ஊர்பு ஏறி
எந்தை திமில் இது, நுந்தை திமில் என
வளை நீர் வேட்டம் போகிய கிளைஞர்
திண் திமில் எண்ணும் தண் கடற் சேர்ப்ப"(கலித்.331: 5-8)

மீன்வற்றலை உண்ண வரும் பறவைகளை விரட்டும் தோழியர் மெல்ல அக்குருவியின் மீதேறி, இது என் தந்தையின் படகு, இது உன் தந்தையின் படகு என படகினை எண்ணுவர். இதன் மூலம் விளையாட்டின் மூலம் கணித அறிவு வளர்ந்த பண்பாட்டினை காண முடிகிறது.

### 2.4.9. சுண்ணம் தூவல்:

சுண்ணம் என்பது ஒரு வகையான வாசனைப் பொடியாகும். ஒருவர் மீது ஒருவர் இச்சுண்ணப் பொடியைத் தூவி யாருடைய பொடி சிறந்தது என்பதற்கான போட்டியும் நடந்துள்ளது. இது பலரும் விளையாடும் விளையாட்டாகும். ஆண்கள் மீது பெண்கள் இப்பொடியைத் தூவி விளையாடியுள்ளனர்.

"பலர் தொகுபு இடித்த தாதுஉகு சுண்ணத்தார்"(மதுரை.399)

புன்காயச் சுண்ணம் புடைத்த"(பெரும்பா.221)

என்னும் சங்க இலக்கியப் பாடல்கள் சுண்ண விளையாட்டுப் பற்றிக் குறிப்பிடுகிறது. வடமாநிலங்களில் வண்ண பொடிகளைத் தூவி மகிழும் ஹோலிப் பண்டிகையும் இவ்வகை விளையாட்டைக் குறிப்பதாகவே உள்ளது.

தமிழ் மக்களின் நாகரீகத்தோடும் பண்பாட்டோடும் இணைந்த ஒன்றே விளையாட்டு. பிறரது கட்டாயமின்றி தனக்குப் பிடித்த மகிழ்ச்சியூட்டும் செயல்களில் ஈடுபடுவது விளையாட்டாகும்.

### 2.4.10. வையைப் புதுப்புனல் விளையாட்டு:

சிறுவர், சிறுமியர், மகளிர், ஆடவர் என அனைவரும் பங்கேற்று விளையாடக் கூடிய விளையாட்டு வையைப் புதுப்புனல் விளையாட்டாகும். சங்ககாலத்தில் கொண்டாடப்படும் இவ்விழா "நீர்விழா" என அழைக்கப்பட்டுள்ளது.

"புரைதீர் புதுப்புனல் வெள்ளத்தின் இன்னும்
கரை கண்டதூஉம் இலை" (கலி.98 : 28-29)

என்னும் கலித்தொகை வரிகள் புனலாடல் குறித்து எடுத்துரைக்கிறது.

### 2.4.11. சிற்றில் விளையாட்டு:

சிறுவர், சிறுமியர் விளையாடும் விளையாட்டாகவே பெரும்பாலும் இவ்விளையாட்டு கருதப்படுகிறது. சிறுவர் சிறுமிகளின் கற்பனைக்கு ஏற்ப வீட்டினைக் கட்டி விளையாடி மகிழ்வதை சிற்றில் என்பர்.

"சுடர்த் தொடீஇ கேளாய்! தெருவில் நாம்ஆடும்
மணற் சிற்றில் காலிற் சிதையா, அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி" (கலி.51: 1-3)

ஒரு பெண் தெருவில் சிற்றில் இழைத்து உணவு சமைத்து விளையாடும் பொழுது ஒருவன் வந்து அச்சிற்றிலை தனது காலால் சிதைத்து விட்டுச் சென்றதை இப்பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

தலைவனானவன் தலைவியிடமும் தோழியிடமும் தனது குறைதீர்க்க வேண்டும் எனத் தாழ்ந்து கேட்கும் சூழலில்,

"சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்
விளையாட ............."(கலித். 59: 5-6)

ஒளி பொருந்திய வேலைப்பாடுடைய மரத்தால் செய்யப்பெற்ற சிறிய பானையையும், பொம்மையையும் கொண்டு சிற்றில் கட்டி விளையாட வந்தாய்? என்பதிலிருந்து சிற்றில் விளையாட்டானது தமிழர்களின் மரபில் இருந்த ஒன்று என்பதை விளக்குவனாய் உள்ளன.

## 2.5.அளவைகள்:

பழந்தமிழர்கள் பொருட்களை அளவிட அளவுமுறைகளைக் கையாண்டுள்ளனர். ஒரு வாணிப சமூகத்தினருக்கு எடைகளும், அளவுகளும் தேவை. பேரெண்களாகப் பெருக்கி எண்ணவும், பின்னங்களாக வகுத்துக் காணவும் அவர்கள் வல்லவராதல் வேண்டும். "எண்" எனும் சொல்லைத் தமிழன் பெயர்ச் சொல்லாகவும், வினைச் சொல்லாகவும் ஆண்டனர். எண்ணுவதற்கு மணிகள் வைத்திருந்தனர். கழங்கு கொண்டு அவர்கள் எண்ணினர். அளவை என்பது அளத்தற்குரிய மிகச்சிறிய அளவு"[(25)] என்று ந.சுப்பிரமணியன் குறிப்பிடுவது இங்கு எண்ணத்தக்கது.

தொல்காப்பியர் அளவிடுதல் பற்றி

"அளந்தறி கிளவியும் நிறையென் கிளவியும்
கிளந்த இயல் தோன்றுங் காலை"[(26)]

என்று குறிப்பிடுகிறார் ஒன்று முதல் ஒன்பது வரை உள்ள அளவுப்பெயர்கள் ஒரு, இரு என வழங்கப்பெறும். அளத்தலை ஒரு கலம், இரு கலம் என்று அளப்பதைச் சுட்டுகின்றார். ஒன்று, பத்து, ஆயிரம் என்று தமிழர்கள் குறித்து வந்தனர். அதற்கு மேல் உள்ள எண்களைக் குறிக்க வெள்ளம், ஆம்பல், தாமரை போன்ற சொற்களைப் பயன்படுத்தினர். கலம், சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு, கழஞ்சு, பலம், மா போன்ற சொற்களை அளவீடுகளாகப் பயன்படுத்தி உள்ளனர்.

"விழுநீர் வியலகம் தூணி ஆக
எழு மாண் அளக்கும் விழு நெதி பெறினும்" (நற்.16: 7-8)

கடல் சூழ்ந்த அகன்ற நிலத்தையே மரக்கலனாகக் கொண்டு ஏழு மரக்கால் அளவு பெரிய நிதியைக் கொடுத்தாலும் தலைவியை விட்டு பிரியமாட்டேன் என

தலைவன் கூறுகிறான். இங்கு துணி என்பது மரக்கால் என்னும் அளவையாகும். இது தானியங்களை அளக்கப் பயன்படுத்தப்பட்டது.

"செம்பொறி அரக்கின் வட்டு நா வடிக்கும்" (நற்.341-2)

சிவந்த புள்ளிகளை உடைய அரக்கினால் செய்யப்பட்ட வாட்டுச்சாடி என்னும் அளவிடும் கருவியைப் பற்றி கூறுகிறது நற்றிணை.

"நிலனும் விசும்பும் நீர் இயைந்து ஒன்றி

குறுநீர்க் கன்னல் எண்ணுநர் அல்லது" (அகநா.-43:5-6)

என்னும் பாடல் வரிகளில் நாழிகை வட்டில் என்னும் அளவிடு கருவியானது மழையின் அளவைக் கண்டறியப் பயன்படுத்தப்பட்டுள்ளமை அறியமுடிகிறது.

"…………

வரிக்கூழ வட்டித் தழீஇ" (கலி.109-14)

நெல்லை அளக்கும் வட்டியானது பல நிறங்களில் இருந்தமையை கலித்தொகை குறிப்பிடுகிறது.

"அகன் பெருவட்டி நிறைய மனையோள்

அரிகாற் பெரும் பயறு நிறைக்கும் ஊர" (ஐங்.47:2-3)

அகன்ற பெரிய வட்டியில் அறுவடை செய்த நிலத்திற்குச் சென்ற ஒருத்தி சிந்திக் கிடக்கின்ற நெல்லை சேகரித்தமையை இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

கூடி வாழ்ந்த மனிதன் தன் முன்னோர்கள் பின்பற்றியவற்றை தான் வாழ்கின்ற சமுதாயத்தில் நடைமுறைப்படுத்தினான். இவ்வாறு காலம் காலமாக சமுதாயத்தில் பின்பற்றப்பட்ட சிந்தனைகள் எண்ணற்றவை ஆயினும் சிலவற்றை மட்டுமே எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**தொகுப்புரை:**

மனித இனம் கூடி வாழும் இயல்பு உடையது. பின் வளர்ச்சியுற்று குழுக்களாகவும் கூட்டங்களாகவும் வாழ்ந்தனர். இவற்றிற்கு இடையில் ஏற்பட்ட உறவுப் பிணைப்பே சமுதாயமாக மலர்ந்தது. மனிதன் கூடிவாழத் தலைப்பட்ட பொழுது அவர்களிடம் காணப்பட்ட சிக்கலான சமூக உறவுமுறைத் தொடர்புகளே சமூகம் எனப்படுகிறது. சமூக உறவுமுறை எங்கெல்லாம் காணப்படுகின்றதோ அங்கெல்லாம் சமூகம் உயர்வுடையதாக அமைகிறது. மனிதன் சேர்ந்து வாழத் தலைப்பட்ட போது தான் உயர் பண்புகளும், இலட்சியங்களும் மனித சமுதாயத்தை நல்வழிப்படுத்தக் கூடியதாக அமைந்தமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

மனித சமுதாயத்தில் காணப்படக்கூடிய நடத்தைகள் பின் அச்சமூகத்தின் வழக்கமாக மற்றவர்கள் பின்பற்றக்கூடிய வழக்கமாகவும் மாறிவிடுகின்ற தன்மை விளக்கப்பட்டுள்ளது. இவ்வாறாக அமைந்த பழக்க வழக்கங்களான விளக்கேற்றுதல், காக்கைக்குச் சோறிடுதல், நோன்பிருத்தல், சடங்குகள் ஆகியவைப் பற்றியச் செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

மனிதன் தன் வாழ்வில் கடைபிடிக்கக் கூடிய சில நடத்தைகள் தொடர்ந்து பின்வரக் கூடிய சந்ததியினாலும் ஒரு சமூகத்தினராலும் பின்பற்றப்படும் நம்பிக்கைகளான சமயம் பற்றிய நம்பிக்கை, இறைநம்பிக்கை, வழிபாடு, நடுகல், தீ வலம் வருதல், நிமித்தம் பார்த்தல், நற்சொல் கேட்டல், கனவு, பேய் பற்றிய நம்பிக்கை, மூடநம்பிக்கை ஆகிய நம்பிக்கைகள் சங்ககால சமூகத்தால் பின்பற்றப்பட்டுள்ளமை அறியலாகிறது.

காமன் திருவிழாவில் நீராடுதல் என்பது மரபு, தலைவனின் பிரிவை எண்ணி தலைவனின் வரவுக்காகக் காத்திருப்பது இல்லறத் தலைவியின் பண்பாகும்.

இளவேனிற் காலத்தில் காமன் விழா எடுக்கும் பொழுது நீராடி விளையாடுவது சமுதாயத்தில் மரபு வழிப்பட்ட பண்பாடாக இருந்துள்ள செய்தி புலனாகிறது.

தன் நிலையிலிருந்து மாறாதிருக்கவும் வாழும் காலத்தில் பொய் கூறாத தன்மையினைக் கொண்டிருக்கவும் சூளுரைத்தல் பழந்தமிழர்களிடம் இருந்துள்ளமை தெரிய வருகிறது. அவ்வாறு கூறியது பொய்த்தால் தெய்வத்தால் தலைவனுக்குக் குற்றம் ஏற்படும் என அஞ்சுகின்ற தலைவியின் பண்பினை உணரமுடிகிறது.

சங்ககால பழந்தமிழர்கள் கொண்டாடிய பாவை விழா, கார்த்திகைத் திருவிழா, உள்ளி விழா, புனல் விழா, பூந்தொடை விழா பற்றியச் செய்திகள் விளக்கப்பட்டுள்ளன. பழங்காலத்தில் ஆடவர் விளையாடிய விளையாட்டுகள், பெண்கள், குழந்தைகள் விளையாடிய விளையாட்டுகள் பற்றிய செய்திகள் எடுத்துரைக்கப்பெற்றுள்ளது.

சங்ககால மக்கள் பொருட்களை அளவிடப் பயன்படுத்திய அளவை முறைகளைப் பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்


1. B.Kuppusamy, An Introduction to Social Psychology P.469
2. சீ.பக்தவச்சலபாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.12
3. மேலது, பக்.8-9
4. The Oxford English Dictionary Vol IX P.315
5. S.N. Ganguly, Tradition, Modernity and Development, P.61
6. க.கைலாசபதி, சமூகவியலும் இலக்கியமும், ப.5
7. கலைக்களஞ்சியம் தொகுதி-7, பக்.29,30.
8. தொல்காப்பியர், பொருள், அகத்.நூ.37
9. க.காந்தி, பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.15
10. கலைக்களஞ்சியம், தொகுதி-7, 1961, பக்-29-30
11. பாஸ்கல் கிஸ்பர்ட், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், ஜெ.நாராயணன் (தமிழாக்கம்), ப.232
12. மு.வ.மொழி வரலாறு, ப.42
13. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப.488
14. நா.கணபதிப்பிள்ளை, இந்து சமய பாலபாடம், ப.211
15. பாஸ்கல் கில்பர்ட், சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், நாராயணன், ஜெ.(மொ.ப)பக்.281
16. டாக்டர்.தா.ஏ.ஞானமூர்த்தி, சங்ககாலச் சமுதாயம், முத்துக்கோவை, 1981 ப.353
17. தொல்காப்பியம், பொருள், அகத்-நூ.5
18. மு.சண்முகம்பிள்ளை, சங்ககாலத் தமிழர் வாழ்வியல், ப.178
19. டாக்டர். ஆ. இராமகிருஷ்ணன், சங்ககால சமயநிலை, ப.99
20. மு.சண்முகம்பிள்ளை, சங்கத்தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப.29
21. சு.சக்திவேல், நாட்டுப்புறவியல் ஆய்வு, ப.211
22. மேலுது ப.235

23. Crooke William, Religion and Folic Lore of Northern India, 1925, P.342

24. தொல்காப்பியர், பொருள், மெய்ப்பாட்டியல் நூ.14

25. ந.சுப்ரமணியன் சங்க கால வாழ்வியல், ப.284

26. தெல்காப்பியம், எழுத்து, நூ.40

# இயல் -3

## தொழில் நிலையில் பண்பாட்டுச் சிந்தனைகள்

மக்கள் வாழ ஆதாரமாக விளங்குவது தொழில் நிலையேயாகும். தொழில் வளமே ஒரு நாட்டின் உயர்வுக்குக் காரணமாக அமைகின்றது. தொழில்வளம் அந்நாட்டின் உயர்வினை மட்டுமின்றி பண்பாட்டினையும் வெளிப்படுத்தும்.

பணி அல்லது தொழில் என்பது ஒருவருடைய வாழ்வாதாரத்திற்கு வருமானம் ஈட்டக்கூடிய செயல். இதனை உத்தியோகம் அல்லது அலுவல் என்றும் கூறுவர். ஒருவர் பணம் அல்லது சேவை மனப்பான்மை அல்லது இரண்டிற்குமான தம்முடைய உழைப்பை பகுதி நேரமாகவோ அல்லது முழுநேரமாகவோ செலவு செய்தல் தொழில் எனப்படும். ஒருவர் செய்யும் தொழிலை அடிப்படையாகக் கொண்டு, அவருடைய சமூக நிலை (Social Status) நிர்ணயிக்கப்படுகிறது.

மனிதன் சோம்பேறியாக இல்லாமல் தனக்கு வேண்டிய உணவினை எப்பொழுது அவனே சென்று தேடிப் பறித்து உண்ணத் தலைப்பட்டானோ அன்றே தொழில் என்பது தொடக்கம் பெற ஆரம்பித்து விட்டது எனலாம். மனிதன் முதலில் விலங்கினைப் போல அலைந்து சுற்றித் திரிந்தான். அதன் பின் ஓரிடத்தில் நிலையான வாழ்வை மேற்கொண்டான். இதுவே பிற்காலத்தில் பெருந்தொழிலாக மாற்றம் பெற்றிருக்கும்.

மனிதன் தன்னுடைய உணவிற்காகவும் மேம்பாட்டிற்காகவும் இரும்பு, தங்கம், செம்பு முதலிய கருவிகள் மூலம் தனக்குத் தேவையான உபகரணங்களை உருவாக்கிக் கொண்டான். இதனை அறிவுப்பூர்வமாகப் பயன்படுத்திய உடன் பல இடங்களுக்கும் சொந்தக்காரன் ஆனான். இவ்வாறு இல்லாதவன் அடிமையாகச் சுற்றித் திரிந்தான். இவ்வாறு காடு, வயல், கொல்லை, தோட்டம், தோப்பு, பாத்தி,

நஞ்சை, புஞ்சை என்பனவற்றை உருவாக்கி அதன் மூலம் கிராமம், நகரம், பேரூர் என சொந்தமாக்கிக் கொண்டான் வேலை செய்த மக்கள் ஊர்மக்களாய் நகரமக்களாய் வளர்ச்சி பெறத் தொடங்கினர். பின் தனி மனிதன் தகுதிக்கேற்றவாறும், தொழிலுக்கு ஏற்றவாறும் தனித்தனியாக வாழ்ந்திருக்க வேண்டும். முன்னோர்கள் பெரும் செல்வவளம் உடையவராக இருப்பினும் அச்செல்வத்தினை முதலீடாகக் கொண்டுத் தாமும் ஏதேனும் ஒரு தொழிலைச் செய்து பொருளை ஈட்ட வேண்டும். அவ்வாறு பொருளீட்டுவதே ஆண்மகனுக்கு அழகாக மதிப்புடைய செயலாகக் கருதப்பட்டது. பழந்தமிழர் ஒவ்வொருவரும் தம் தகுதிக்கேற்ப தொழில்கள் பல செய்து இருப்பதை நம் இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

இன்றைய சமுதாய நிலை போன்றே அன்றும் ஏழை, பணக்காரன் என்ற சமுதாய அமைப்பு காணப்பட்டது. இச்சமுதாயத்தில் பெரும்பாலும் உழவர்கள், வேட்டுவர், இடையர், மீனவர், வணிகர், கைத்தொழில் செய்வோர் போன்றோர் இருந்தனர். ஆறலைத் தொழில் செய்வோர் சமுதாயத்தில் பிற்பட்டவராகக் கருதப்பட்டனர். பழந்தமிழ் சமுதாயத்தில் பொருளாதார நிலையிலும் செல்வச் செழிப்பிலும் நிறைந்தவர்களாக அரச குடும்பத்தினர் மட்டுமே இருந்தனர். அதே சமுதாயத்தில் பாணன், கூத்தர் போன்றோர் எளிமையான வாழ்க்கை உடன் இருந்து வாழும் தன்மையுடையவர்களாகவும் விளங்கினர். இவ்விரு நிலைகளுக்கும் இடையே பல்வேறு விதமான தொழில்களைச் செய்வோரும் வாழ்ந்தனர்.

தனி மனித தேவை தான் அவன் வாழும் சமுதாய தேவையாகின்றது. இந்நிலையில் முகிழ்த்து பயன் தருவதே தொழிலின் நோக்கமாகும். பழந்தமிழரின் பொருளாதார நிலையில் முதலிடம் பிடித்தது தொழில் என்றால் அது மிகையாகாது. பயிர்த்தொழில், நெசவுத் தொழில், தச்சுத்தொழில் முதலிய தொழில்கள் வருவாய்க்குரிய தொழில்களாக விளங்கின. இக்கால விஞ்ஞான வளர்ச்சியினால்

ஏற்பட்டுள்ள தொழிலுக்கும், பழங்காலத் தொழிலுக்கும் இடையே வேறுபாடுகள் உள்ளன. பழங்காலத்தவர்கள் தாங்கள் வாழ்ந்த சூழலுக்கேற்ப இடம், பொருள் போன்றவற்றின் அடிப்படையில் தொழிலினை மேற்கொண்டிருந்தனர் என்பதை இலக்கியங்கள் வழி அறிய முடிகின்றது. ஒரு நாட்டின் வரலாறு என்பது அந்நாட்டை ஆண்ட அரசர்களின் வரலாறு மட்டுமன்று; அந்நாட்டில் வாழ்ந்த குடிமக்களின் வாழ்க்கையும் சேர்த்து அமைந்த ஒன்றாகும்.

**தொழில்கள்:**

பண்டைக் காலத்தில் தமிழகத்தில் வழக்கிலிருந்த தொழில்கள் பற்றி அறிவதற்கு முன் தொழில்கள் என்பதற்கான ஒரு வரையறையைக் காணலாம். தொழில் என்பது உழைப்பு அல்லது ஒரு செயலைக் குறிக்கின்றது. உழவாளர் என்ற சொல் பொதுவாகத் தொழிலாளர்களைக் குறிக்கும்.

உழைப்பு என்பது மூளையையோ உடலையோ முழுவதுமாகவோ, பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும். ஆனால் அந்தச் செயலிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியை உழைப்பு உள்ளடக்காது. இவ்விலக்கணத்தின் படி உழைப்பு எல்லா வகையான தொழில் திறமைகளையும் உள்ளடக்கும். கல்வி அல்லாத தொழிலாளர்களின் உற்பத்தி முயற்சிக்கும் கைத்தொழில் கலைஞர்கள், கல்வியாளர்கள், ஆசிரியர்கள், வழக்கறிஞர்கள், நீதிபதிகள், எழுத்தாளர்கள், வேளாண்மைத் தொழிலாளர்கள், வணிகர்கள், நுண்கலைஞர்கள், இலக்கிய அறிஞர்கள், மருத்துவ அறிவியல் வல்லுநர்கள், நிர்வாகிகள் ஆகியோரின் பணி முயற்சிகளும், மார்பின் உழைப்பு இலக்கணத்துள் அடங்குகின்றன(1) என்று பொருளியில் பேரறிஞரான மார்சல் உழைப்பிற்கு இலக்கணம் கூறியுள்ளார்.

மக்களின் வளமான வாழ்க்கைக்கும் வசதிக்கும் பயன்படும் தொழில்கள் அனைத்தும் வாழ்வியல் தொழில்கள் ஆகும். இவ்வாழ்வியல் தொழில்களைக் கைத்தொழில்கள் கைவினைத் தொழில்கள், நிலஞ்சார் தொழில்கள், பிறதொழில்கள் எனப் பிரித்துக் காண இயன்றபோதும் நாம் இவ் இயலில் திணை அடிப்படைத் தொழில்கள், வாணிகம், தொழிலும் தொழில் பிரிவுகளும்என்னும் அடிப்படையிலும் பகுத்துக் காணலாம்.


தொழில்கள்
திணை அடிப்படையில் தொழில்கள்
வாணிகம்
தொழிலும் தொழில் பிரிவுகளும்
1. குறிஞ்சி
2. முல்லை
3. மருதம்
4. நெய்தல்
5. பாலை
1. உள்நாட்டு வாணிகம்
2. வெளிநாட்டு வாணிகம்
3. பண்டமாற்று வாணிகம்
1. தச்சர்
2. கொல்லர்
3. குயவர்
4. ஆடைவெளுப்போர்
5. சாணைப்பிடிப்போர்
6. பூவிற்றல்
7. கிணறு வெட்டுதல்
8. பொம்மை செய்தல்
9. நெசவுத்தொழில்
10. பாய்பின்னல்

### 3.1. திணை அடிப்படையில் தொழில்கள்:

எந்த ஒரு இனமும் தோன்றிய போதே பண்பாட்டோடும் நாகரீகத்தோடும் தோன்றியிருக்க முடியாது. பிறந்த குழந்தையானது அது நடப்பதற்கு எத்தனை போராட்டங்களையும் முயற்சிகளையும் மேற்கொண்டதோ அதே போன்று தான் மனித இனமும் வாழ்க்கையில் நிலைத்து வாழ பல இன்னல்களையும் போராட்டங்களையும் சந்தித்து பல்வேறு முயற்சிகளையும் மேற்கொண்டன. இது மாற பல ஆண்டுகள் ஆகியிருக்கலாம்.

"ஓரிடத்தில் தங்கி நிலைத்து வாழத் தலைப்பட்ட சமுதாயமாகச் சங்ககாலச் சமுதாயம் மாறியதைத் தான் திணைப்பாகுபாடுகள், திணை நிலை வாழ்வுகள் காட்டுகின்றன"(2).

இத்திணை நிலைப் பாகுபாடுகளை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனவும் பகுத்துக் கூறினர். பண்டைத் தமிழர்கள். இத்திணைப் பகுப்புகள் வழியாக மக்கள் நிலத்திற்கேற்ற வாழ்க்கை முறையினை மேற்கொண்டு வாழ்ந்தனர் என்பதை அறியமுடிகிறது. மேலும் சங்க இலக்கியம் பல்வேறு வாழ்க்கை முறையினை பல்வேறு வாழ்க்கை மரபுகளை இனவளர்ச்சியுடன் வாழ்ந்ததை எடுத்து இயம்புகின்றது.

"நாகரிக முதிர்ச்சியற்ற வேடர்கள் பயிரிடுபவர்களாக இல்லாமல் சிதறிய உணவு சேகரிப்பவர்கள், ஏரையும் இழுமாடுகளையும் பயன்படுத்தத் தெரியாமல் தோண்டும் கம்பையும் மண்வெட்டியையும் கருவிகளாக எடுத்துக்கொண்டு அடிக்கடி இடம் மாறுபவர்களாகிய குடியானவர்கள் வெள்ளாடு, செம்மறியாடு, பிறகால்நடை வளர்ப்போர், அலைந்து பிற பொருள்களை விற்போர், கைவினைஞர்கள் நாடோடியாக அலைந்து திரிகின்றவர்கள் என பலவகைப் படிநிலைகள் இந்திய சமூகத்தில் காணப்பட்டதாகக் கூறுவர்"(3)

மேலே கூறப்பட்டது போல தமிழகத்தின் இனக் குழுக்கள் திணைகளின் அடிப்படையில் பாகுபடுத்தப்பட்டிருக்கின்றன. பழந்தமிழ் இலக்கியங்களைத் தொகுத்த ஆசிரியர்கள் எவ்வாறு திணைக்கு ஏற்றவாறு தொழில்களைப் பகுத்துப் பிரித்தனர் என்பது ஆய்விற்குரியதாகும். ஒரு சில இடங்களில் திணைமயக்கம் ஏற்பட்டாலும் அது பெரிதாகத் தெரியவில்லை.

"குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானிலத்தும் முறையே வேட்டையாடுதல், ஆடுமாடு மேய்த்தல், உழவு செய்தல், மீன் பிடித்தல் போன்ற தொழில்களைச் செய்தோர் முறையே குறவர், ஆயர், உழவர், மீனவர் என நான்கு பிரிவுகளாக அமைந்தனர். துணைத் தொழில் புரிந்தோர் தச்சர், குயவர், கம்மியர், கொல்லர், வண்ணார்"(4) எனப்பட்டனர் என பா.இறையரசன் கூறுவதிலிருந்து அந்தந்த நிலத்திற்குரிய தொழிலானது வேறுபட்டிருந்ததை அறியமுடிகிறது.

தொல்காப்பியர் நிலத்தை அதன் தன்மைக்கு ஏற்ப வகைப்படுத்தி ஒவ்வொரு நிலத்திற்கும் கருப்பொருளையும் குறிப்பிட்டுள்ளார்.

"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகைப் பிறவுங் கருவென மொழிப"(5)

இந்நூற்பாவில் வரும் செய்தியானது தொழிலைக் குறிப்பதாகும்.

### 3.1.1. குறிஞ்சி நிலம்:

மலையும், மலை சார்ந்த இடமும் குறிஞ்சி எனப்படும். இதனைத் தொல்காப்பியர்,

"சேயோன் மேய மைவரை உலகமும்"(6)

என்று குறிப்பிடுகின்றனர்.

ஒவ்வொரு திணைக்கும் அவரவர் நிலத்திற்கேற்ப பெயர்கள் வேறுபட்டு நிற்கும். குறிஞ்சி நிலத் தலைவன், தலைவியரின் பெயர்கள் குறவன், குறத்தி என இருக்கும் என்று தொல்காப்பியர் கூறுகிறார். இவர்களுடைய தொழில் தினை விதைத்தல், அவற்றைக் காவல் காத்தல், தேன் எடுத்தல், பல் வகையான நெல்களை விளைவித்து விற்றல், உண்ணுதல் போன்றவை தொழில்களாகக் கொள்ளப்படுகின்றது.

**தினைப்புனம் காத்தல்:**

சங்க காலத்தில் பரண் அமைத்துக் காவல் காத்து இருந்திருக்கிறார்கள். இரவில் புலி, சிங்கம், கரடி போன்ற கொல்லும் தன்மையுடைய விலங்குகளால் துன்பம் ஏற்படும் என அஞ்சி அதிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ள உயரமான இரு மரங்களுக்கு இடையே கொம்புகளைக் கட்டிப் பரண் அமைத்திருக்கலாம். இப்படி அமைத்த பரணில் ஏறி நின்று பார்த்தோமேயானால் தினைக் கொல்லையானது முழுமையாகக் கண்ணில் தோன்றும். எனவே தான் பரண் அமைத்துக் காவல் காத்தல் வந்திருக்கும்.

பரணை அமைத்துக் காவல் காக்கும் தொழிலுக்கு ஆண்கள் மட்டுமின்றி பெண்களும் சென்றிருக்கின்றனர். ஆண் யானையும், பெண் யானையும் தினை உண்ணுவதற்கு நடு இரவில் மின்னல் உண்டாக்கும் ஒளியில் வரும் என்பதனையும் யானைகள் புன்செய் நிலத்தில் புகுந்து நிற்கும்.

அதனுடைய காலடி சத்தம் கேட்ட கானவன் உயர்ந்த மலையில் ஆசினிப்பலாவின் மேலிட்ட பரணில் ஏறி கவணியில் கல்லை வைத்து எறிந்தான், யானைகள் இரண்டும் பயந்து ஓடின என கலித்தொகை கூறுகின்றது.

பெண்களும் அஞ்சாது தினைப்புனம் காக்கச் சென்ற குறிஞ்சி நிலத் தலைவி ஒருத்தி, காதலினால் பசலைப் பாய்ந்து அழகுகெட அதனை உணராத

செவிலியும் நற்றாயும் வெறியாட்டு நடத்திய பின் திணை புனத்தை காவல் காத்த பின்பாவது உனது அழகு திரும்ப வரும் எனக் கூறி காவல் காக்க அனுப்பினர். அங்குள்ள வேங்கை மரங்கள் அதிகமுள்ள குன்றிடத்தில் சந்தன மரத்தால் செய்த பரணில் நின்று தலைவி திணைக் கொல்லையைப் பாதுகாத்து வந்தாள்.

மேலும், குறுந்தொகையில் பரண் மேல் ஏறி நின்று கிளிகளை ஓட்டுவதை,

‘‘உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே
சிலம்பின் சிலம்பும் சோலை’’(குறுந்.360: 6-7)

என்னும் அடிகள் புலப்படுத்தும். தலைவி ஒருத்தி திணையை உண்ணவரும் கிளியை ஓட்டுவதற்காக பரணில் ஏறி நின்று கிளியின் வரவை எதிர்பார்த்து இருந்தாள். அப்போது கிளி ஒன்று திணையைக் கொத்த வந்தது. குறமகளிர் கையால் புடைக்கும் குளிர் என்னும் கருவியால் ஒலி எழுப்பினாள். அந்த சத்தத்தைக் கண்டு பயந்து கிளி பறந்து சென்றது.

**திணை விதைத்தல்:**

குறிஞ்சி நிலத்தின் மலைப்பக்கத்திலுள்ள குறவன் காட்டைத் திருத்தி மலை நெல்லை விதைப்பான். அவற்றிற்கு மலையருவியின் நீரினால் தண்ணீர் கட்டி வருவான். மேகம் மழையைத் தரும் என நம்பி, மலை நெல்லை விதைத்து, அருவியின் நீரால் அதனை விளைவிப்பதை அறிய முடிகிறது.

பெரிய மலையின் பக்கத்தில் என் ஐயன்மார் உழுது விதைத்த கரிய அடித்தண்டினை உடைய செவ்விய திணைக்கதிரெல்லாம் கொய்யப்பட்டன என்றும் மலைசார்பிடத்தில் அகலப்படுத்தி வளைந்த கொல்லையாகிய மழை பெய்யும் பதம் பெற்ற காட்டினை உழுகின்ற குறவர் சிலவாய விதைகளைக் கலப்பாக விதைத்து ஒரு சேரப் பலவாக விளைந்து சாய்ந்து கதிர் விளங்கிய திணைக் கொல்லை இருந்தது என்பதை அறிய முடிகிறது.

விளைந்த திணைப் புனைத்தினை வளையல் அணிந்த மகளிரும் குறவரும் காவல் காத்ததை,

''கடவுள் ஓங்குவரைக்கு ஓக்கி குறவர்
முறித்தழை மகளிர் மடுப்ப, மாந்தி
அடுக்கல் ஏனல் இரும்புனம் மறந்துழி''(அக.நா. 348:8-10)

என்னும் அடிகள் விளக்கும்.

அவ்வாறு காவல் காக்கும் பொழுது நிலைக்கெட்டு ஓடும்படி மலையிடத்தே உயர்ந்த பரணிலிருந்து குறவன் கவண்கல்லை வீசியெறிந்து விரட்டியதை,

''திணைமேய் யானை இனன் இரிந்துஓட
கல்உயர் கழுதில் சேணோன் எறிந்த
வல்வாய்க் கவணின் கடுவெடி ஒல்லென''(அக.நா.392: 13-15)

என்று அகநானூற்றுப் பாடலின் வழி அறியமுடிகிறது.

இவ்வாறு தினை விதைத்து காவல் காப்பர், பின் அத்தினையை அறுவடை செய்து கட்டுகிறான் குறவன், அப்போது தினைப்புனத்தில் ஓரத்தில் நரைக்கொடிகள் படருவதற்கு இடமில்லாமல் பக்கத்திலிருந்த நறுமணம் மிக்க சந்தன மரத்திலே படர்ந்தது.

திணையை அறுக்கும் போது திணைக்கதிர்கள் சிதறி இருந்தன என்றும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார். பின் பொலி இட்டனர், பொலியிடுதல் என்பது, திணைப்புனத்தில் முற்றிய வரகினைக் கதிரோடு கூடிய தட்டைகளாகத் தொகுத்து களம் ஒன்றில் போட்டு, அதன் மேல் காளையினை நான்கு, ஐந்து சுற்று சுற்றி வந்து மிதிக்கச் செய்தார்கள். அப்போது தான் தட்டையில் இருந்து வரகுத்திணையானது கொட்டும். இதனைப் பொலியிடுதல் என்று அழைத்தனர்.

பொலியிட்டு தனியாகப் பிரிந்த வரகினை அகன்ற பாறையில் குவித்துப் பின் அதனை திரிகையில் இட்டுத் திருகி முறத்தினால் புடைத்துக் குவித்தனர். அதன்பின் உரலிலிட்டு அரிசியாக்கியதை,

“கவைக்கதிர் வரகின் கால்தொகு பொங்கழி
கவட்டுஅடிப் பொருத பல்சினை உதிர்வை
அகன்கண் பாறைச் செவ்வயின் தெறீஇ”(அக.நா.393:5-7)

என்று அகநானூறு எடுத்துரைக்கின்றது. இதன் மூலம் குறிஞ்சி நில மக்களின் தொழில் குறித்து அறிய இயலும்.

### தேனெடுத்தல்:

குளிர்ச்சி பொருந்திய மலைகள் உள்ள காட்டில் தேன்கூடுகள் நெருங்கித் தொங்கிக் கொண்டிருந்தன. இதனை மலைநாடன் அழித்துக் தேன் கொண்டு வந்தான் என்பதை,

“நறைகால் யாத்த நளிர்முகைச் சிலம்பில்”(அக.நா.242-18)

அகநானூறும்,

“……..பெருமலை
வாங்கமை பழுனிய நறவுண்டு
வேங்கை முன்றிற் குரவையும் கண்டே”(நற்.276:8-10)

என்று நற்றிணையும் உரைக்கும்.

### வேட்டையாடுதல்:

மனிதன் விலங்குகளோடு விலங்காக வாழ்ந்த காலத்தில் விலங்குகளைத் தாக்கி வாழத் தொடங்கிய பொழுது வேட்டையாடுதல் தொழில் தோன்றி இருக்க வேண்டும். அன்று தொடங்கி இன்று வரையிலும் இத்தொழில் காலந்தோறும் வளர்ந்து, வேட்டைத் தொழிலும் ஒரு கலை என்று போற்றும் அளவிற்குச் சிறந்து விளங்குகின்றது.

சங்ககாலத்தில் வேட்டையாடும் தொழில் சிறப்பாகப் போற்றி வளர்க்கப்பட்டது. வேட்டைக்குச் செல்பவர்கள் தங்களுக்குத் தேவையான கருவிகளை எடுத்துச் சென்றனர். காட்டில் உள்ள எல்லாப் பகுதிகளுக்கும் சென்று விலங்குகள் இருக்கும் இடம் அறிந்து வலை விரித்துச் சிக்கியவுடன் அஞ்சாது பாய்ந்து தாக்குதலே வேட்டைத் தொழிலின் முக்கிய கூறுகளாகும். இத்தொழில் நற்றிணையில்

''பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ
நெடுங்சால் கணந்துளம் புலம்பு கொள் தெள்விளை''(நற்.212:1-2)

என்று ''கணத்துள்'' என்னும் பறவை வேடுவன் விரித்த வலையைக் கண்டு யாழிசையைப் போல் ஒலி எழுப்பி மற்ற பறவைகளுக்கு எச்சரிக்கை விடுப்பதாக குடவாயிற் கீரத்தனர் உரைப்பர்.,

கபிலர், தினைப்புனத்திற்கு வந்த விலங்குளின் மேல் வேடுவன் அம்பெய்தி வீழ்த்துகிறான். இரத்தம் தோய்ந்த அவ்வம்பைத் தலைவியின் கண்ணுக்கு உவமையாக,

''ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த
பகழி அன்ன சேயரி மழைக்கண்'' (நற்.13: 3-4)

எனச் சித்திரித்துள்ளார்.

''காடு தேர் வேட்டத்து விளிவு இடம் பெறா அது
வரி அதள் படுத்த சேக்கை தெரி இழைத்
தேன் நாறு கதுப்பின் கொடிச்சியர் தந்தை''(அக.நா.58: 3-5)

என்னும் அகநானூற்று அடிகளில், தேன் மணக்கும் கூந்தலையுடைய குறத்தியின் தந்தைமார் வேட்டைக்காக காடுகளுக்குச் செல்வர். அங்கு உறக்கம் தவிர்த்து தொழிலை மேற்கொள்வர். மீண்டும் வீட்டுக்கு வந்தவுடன் புலித்தோல் விரித்த

படுக்கையில் உறங்குவர் என ஆசிரியர் சுட்டுகின்றார். மேலும் வேட்டைக்குச் செல்லும் போது புலிக்கூட்டத்தைப் போன்ற நாய்கள் தொடர்ந்து வரச் செல்வர்.

''ஊதல் வேண்டுமால் சிறிதே வேட்டொடு
வேய்பயில் அழுவத்துப் பிரிந்த நின்
நாய் பயிர் குறிநிலை கொண்ட கோடே''(அக.நா.318:13-15)

என்பதில் பின் பிரிந்து சென்று வேட்டை ஆடுபவர்களை ஒன்று சேர்க்க ஊது கொம்பினை பயன்படுத்தினர் என்பதையும் அறியமுடிகிறது.

குறவர்களின் குடிகளில் ஆண் யானை ஒன்று புகுந்தது. அதனை வேட்டையாடுவதற்கு அழகிய குடியில் உள்ள குறவர்கள் கூர்மையான அம்பினை எடுத்துக்கொண்டு சென்றதை,

''………………அம்குடிக்குறவர்
கணையர் கிணையர் கைபுனை கவணர்
விளியர் புறக்குடி………..''(நற். 108:3-5)

எனவும்,

''எல்லுமுய லெறிந்த வேட்டுவன் சுவல''(நற்.59:3)

உடும்பையும் முயலையும் வேட்டையாடும் வேட்டுவன் குறிக்கப்பெறுகின்றனர்.

### 3.1.2 முல்லை நிலம்:

காடும் காடு சார்ந்த பகுதியும் முல்லை நிலமாகும். தலைவனுக்காகத் தலைவியும் தலைவிக்காகத் தலைவனும் ஆற்றியிருத்தலை உரிப்பொருளாகக் கொண்டது.

ஆநிரை மேய்த்தல், ஆநிரை மூலம் பெறப்படும் பால், தயிர், நெய், வெண்ணெய் போன்றவற்றை விற்றல் ஆகியன இந்நிலத்தவரின் தொழில்களாகும். தொல்காப்பியத்தில்,

“ஆயர் வேட்டுவர் ஆடுஉத் திணைப்பெயர்
ஆவியின் வரூஉம் கிழவரும் உளரே”[7]

என்று முல்லை நிலத்தில் ஆண்களை உணர்த்தும் திணைப்பெயர் ஆயர் எனவும் வேட்டுவர் எனவும் வரும் என்கிறார் தொல்காப்பியர்.

ஆட்டினை மேய்ப்பதைத் தொழிலாகக் கொண்ட இடையர்களை நற்றிணையில் ஆடுமேய்க்கும் தொழிலையுடைய இடையர்கள் சங்க காலத்தில் கொல்லையில் ஆடு மேய்ந்த காட்சியை புலவர்கள் இவ்வடிகளால் சுட்டிக்காட்டியுள்ளார்.

அதிகாலையிலேயே பால் கறந்த பின் கன்றுகளைத் தொழுவத்தில் விட்டுவிட்டு ஆடு மேய்க்கும் சிறுவர்கள் அவ்வெருமைகளின் மேலேறிக் கொண்டு தனித்தனியாக மாடுமேய்க்கச் சென்றனர் என்றும் கால்நடை மேய்க்கும் இடையர்கள் தீக்கடைக்கோல், உறி போன்ற கருவிகளையும் தோற்படைகளையும் பனையோலைப் பாயுடன் சேர்த்து வைத்திருந்தனர்.

ஆடுகள் இடம் நகராமல் இருக்க இடையன் வீளை எனும் அழைப்பொலியை எழுப்புகின்றான். அவற்றை அறிந்த ஆடுகள் அங்கேயே தங்கி இருந்ததை இடையர்கள் கால்நடைகளை மேய்த்துக்கொண்டே அங்குள்ள மலர்களைப் பறித்து மாலைகள் தொடுத்த செயலை உணர்த்துகின்றது. வளமான முல்லை நிலப்பகுதியில் மாடுகளை மேய்த்துக் கொண்டு கோவலர் முல்லைப்பண் இசைத்ததையும் எடுத்துரைக்கின்றது.

### மாடு பிடித்தல்:

முல்லை நிலத்தில் வாழந்த ஆண்கள் சிறந்த வீரர்களாக இருந்தனர். அந்நிலத்தில் உள்ள பெண்கள் வீரர்களைத்தான் மணம்புரிந்து கொள்ளுவார்கள் கொல்லேறு தழுவுதல் என்பது ஒரு விளையாட்டாகும். பந்தயத்திற்கென்ற சில

காளைகளை வளர்ப்பார்கள். அவ்வாறு வளர்க்கப்பட்ட காளைகளை அவிழ்த்து விரட்டுவார்கள். அக்காளைகளை அடக்கும் வீரர்களையே பெண்கள் மணந்து கொள்வார்கள். இதனை முல்லைக் கலியிலே காணலாம்.

உயிருக்குப் பாதுகாப்பு இல்லாத ஒரு விளையாட்டாக இருந்தாலும், ஆயர்குலப் பெண்கள் ஏறு தழுவுதல் விளையாட்டில் வெற்றிபெற்றவனையே ஆண்மகனாக மதிப்பர். இல்லறத்தை இனிது நடத்துவதற்கு ஏற்றவனாக வீரர்களையே எண்ணினர்.

“எழுந்தது துகள்
ஏற்றனர் மார்பு
கவிழ்ந்தன மருப்பு
கலங்கினர் பலர்”(கலி.102: 21-24)

தொழுவினுள் விடப்படுகின்ற பல வகையான ஏறுகளைத் தடுத்து, அவற்றின் மேலே பாய்வதற்காக அவற்றின் எதிரில் ஆரவாரத்துடன் பலரும் சென்றனர். அப்பொழுது அவ்ஏறுகள், கொலைத்தன்மை மிக்க சீற்றத்துடன் காணப்பட்டன. எதிரே வந்தவர்களை நோக்கிச் சீறிப் பாய்ந்து ஓடியது.

அப்பொழுது புழுதித் துகள் எங்கும் எழுந்தது. ஆயர் மார்புகளைக் காட்டி நின்றனர். ஏறுகளும் சீற்றத்துடன் குத்துவதற்காக கொம்புகளைக் கீழே தாழ்த்தின. அதைப் பார்த்து பலரும் கலங்கிப் போய் நின்றனர்.

அவிழ்த்து விடப்பட்ட காளைகளையும், அவைகளைப் பிடிக்கும் வீரர்களையும், அந்நிகழ்ச்சியைக் காணும் பொதுமக்கள் ஆகிய செயல்கள் போன்றவற்றை காண அற்புதமாக இருக்கும்.

“தொழுவினுள் புரிபு புரிபு புக்க பொதுவரைத்
தெரிபு தெரிபு குத்தின ஏறு”(கலி.103: 22-23)

என்பதில் காளைகளை அடைத்து வைத்திருக்கும் இடத்திற்குள் அவைகளைப் பிடிப்பதற்காக விரும்பி விரும்பி உள்ளே வந்த வீரர்களை தெரிந்து தெரிந்து காளைகள் தங்கள் கொம்புளால் குத்தியமை சுட்டப்பட்டுள்ளது.

"கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்" (கலி.103: 63-64)

கொல்ல வருகின்ற காளையின் கொம்பினைப் பிடித்து அடக்க அஞ்சுகின்றவன் கோழையாவான். அவனை இப்பிறப்பில் மணம் செய்து கொள்ள எந்த ஆய மகளும் விரும்பமாட்டாள். மறுபிறப்பிலும் கூட மணக்க விரும்பமாட்டாள்.

ஆயர்கள் ஆடு மாடுகளைத் சிறந்த செல்வமாகக் கருதினர். அவைகளை அடக்கி ஆளும் திறமை மிக்கவர்களாக விளங்கினார்கள் என்பதை அனைவருக்கும் தெரிவிக்கும் பொருட்டே இப்பழக்கத்தை தம் பண்பாட்டோடு இணைத்துக் கொண்டனர்.

**ஆடுமாடுகளை மேய்த்தல்:**

தன் வருமானத்திற்கான தொழிலாக ஆடு மாடுகளை ஆயர்கள் மேய்த்தனர் என்பதை முல்லை நிலத்தில் பூக்கும் பூக்களை எடுத்துச் சூடிக் கொண்டும் ஆடுகளையே தமக்கு செல்வமாகவும் கொண்ட இடைக்குடியில் பிறந்த மகன் நேரம் மறையவே, கையில் எடுத்துச் சென்று பனை ஓலையால் ஆன பறி ஓலையை விரித்து படுத்து உறங்குவான். காலையில் எழுந்து பாலைக் கரந்து ஊர்ப்பகுதியில் உள்ள வீடுகளுக்குச் சென்று கொடுப்பான். பிறகு, அவர்கள் கொடுக்கும் உணவினை வீட்டுக்குக் கொண்டு வந்து கொடுப்பான் இதே போன்று மாலை நேரத்தில் மெதுவான நடையை உடைய இளங்கன்றுகள் கயிறுகளால் கட்டப்பட்டிருக்கும். அக்கன்றுகளிடத்தே பெருத்த பால் மடிகள் சுருங்குவதை விரும்பினவாய் குரலை எழுப்பியவாறு ஒலிக்கும். அதனைக் கண்ட கோவலர்

அக்கன்றுகளை அவிழ்த்துவிட, ஒலிக்கும் மணிகள் உடைய கருத்தினைக் கொண்ட பசுக்கூட்டங்கள் தத்தம் வீடுகளை நோக்கிச் செல்லும். கையிலே கோலை வைத்துக்கொண்டு வேட்டியை மடித்துக் கட்டிய கோவலர்கள் பின்னே மெத்தென நடந்து வருவர்.

கார்காலத்து நள்ளிரவில் தாம்புக் கயிற்றினைக் கொண்ட உறியினையும் பானையையும் கொண்டு கோலினைத் தன் காலுடன் சேர்த்து தனியே நிற்கும் இடையானவன் செம்மறியாட்டின் பாதுகாவலுக்காக நிற்கின்றான். தீக்கடைக் கோலினால் தீ ஏற்படுத்தி வாயை மடித்து சீழ்க்கை ஒலியை எழுப்புகின்றான். அவ்வொலிக்குப் பயந்து ஆட்டுக்குட்டியைப் பிடிக்க வந்த குள்ளநரி ஓடியது என ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

கோவலர்கள் தங்களது ஆடு மாடுகளை மேய்க்கும் போது குழல் இசைத்து அழைப்பதை வழக்கமாகக் கொண்டிருப்பர். ஆடுமாடுகள் மேய்ப்பதை மட்டுமின்றி மழை பொழிந்ததால் காடு செழித்துக் காணப்படுவதை, மழையானது இடைவிடாது பெய்தமையால் இடையர்கள் பெருமகிழ்வு அடைந்து காட்டை உழுதனர் என்பதை உழுத புன்செய் நிலத்தில் வரகுப் பயிர்கள் விதைத்ததையும் விதைக்கப்பட்ட வரகானது நன்கு வளர்ந்ததையும் உணர முடிகிறது.

ஆயர்கள் ஆடு மாடு மேய்ப்பது மட்டுமின்றி அவற்றிற்குத் தேவையான தாவரங்களைப் பயிரிடுதலையும் காட்டினைத் திருத்தலையும் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

இவ்வாறு முல்லை நில மக்களின் தொழிலான ஆடு மாடு மேய்த்தல், கால்நடை வளர்த்தல் போன்றவை அவர்களின் தொழிலாகக் சங்க இலக்கியத்தில் குறிப்பிடுவது போல அப்பண்பாடு இன்றும் தொடர்வதை உணரமுடிகிறது.

### 3.1.3. மருத நிலம்:

வயலும், வயில் சார்ந்த பகுதியும் உடையது மருத நிலமாகும். மருத நிலம் நீர் வளமும், நிலவளமும் உடையது. நீர்வளம் நிறைந்த ஊர்களும் ஊர்களைச் சார்ந்த இடங்களுமே மருதநிலம். மருத நிலத்திற்குத் தெய்வம் இந்திரன். இங்கு உழவுத் தொழில் என்பது முதன்மையானத் தொழிலாகும். வாழ்க்கையின் ஆதாரமாய் உழவுத் தொழில் என்பது முதன்மையானத் தொழிலாகும். இது வாழ்க்கையின் ஆதாரமாய் அதைச் சார்ந்த பிறத் தொழில்களும் இவர்களுக்கு வாழ்வாதாரங்களாகும்.

தமிழ்நாட்டின் சிறப்பான தொழிலாக உழவுத் தொழிலே அமைந்திருந்தது. இதன் சிறப்பை உணர்ந்த திருவள்ளுவர்,

“சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை”[(8)]

என்று சிறப்பித்துள்ளார்.

**உழவுத்தொழில்**

உழவுத்தொழில் செய்பவர்கள் உழவர்கள் என அழைக்கப்பட்டனர். உடல் உழைப்பு உழவுத் தொழிலுக்கு அதிகம் தேவை. இத்தொழிலைப் பழந்தமிழர்கள் உழவு என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர்.

உழவர்கள் ஏரின் வாழ்நர், களமர், உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் என அழைக்கப்பட்டனர். நாட்டினுடைய வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைவது உழவுத்தொழில். ‘‘வளமார்ந்த மருதநிலத்தில் வாழ்ந்த மக்கள் ஏனையோரினும் நாகரீகத்தில் மேம்பட்டவர் ஆவர்’’[(9)] என அ.தட்சிணாமூர்த்தி குறிப்பிடுகின்றார்.

உழவுத் தொழில் என்பது உழுதல், உரமிடுதல், நீர்பாய்ச்சுதல், பயிர்களைப் பாதுகாத்தல், அறுவடைசெய்தல் எனப் பல கூறுகளாய் அமைகிறது. உழுதல் என்பது நிலத்தைப் பண்படுத்தி அதற்குரிய பருவம் பார்த்து பயிர்த்தொழில் செய்தல் ஆகும். நீர்வளம் நிறைந்த பகுதிகளில் நன்செய் பயிர்கள் பயிர் செய்யப்பட்டன. நாற்று நடுவதற்கு முன் உழவர்கள் பலமுறை அந்நிலத்தை உழவிடுவர். இவ்உழவுத்தொழில் பற்றி,

“நெல்லுக்கு நான்குழவு என்னும் பழமொழி நம் நாட்டவருக்குத் தெரிந்த விசயம். நெல் தொன்று தொட்டு சேற்றில் விளையும் பயிராகக் கருதி நான்கு நாள் விட்டு விட்டு உழுதல் உத்தமம். நெற்பயிரின் வேர் ஓர் அங்குலம் வளர்ந்து பரவும் தன்மையுடையதாதலால் உழவுக்குத் தக்கபடி விருத்தியாகும்”[10] என அபிதான சிந்தாமணி குறிப்பிடுகிறது.

காலைப்பொழுதில் உழவுத்தொழில் செய்த எருமை தன் களைப்பை நீக்குவதற்கு நீராடி பின் மருதநிழலில் படுத்துறங்கிய காட்சிகள் பலப்பாடல்களில் காணப்படுகின்றன. மழை பெய்தால் தான் விவசாயிகளின் வாழ்வில் மகிழ்ச்சி ஏற்படும். அப்படி மழை பெய்தமையால் உழவர்கள் மகிழ்ச்சி அடைந்து வயலுக்குச் சென்று மகிழ்ச்சியாக விரைவாக வயலை உழுதனர்.

குடுமிகளைக் கொண்ட உழவர்கள் தோட்டத்தில் மண் பிறழும்படி அரிதாயையுடைய நிலம் பிளவுபடும்படி உழுதார்கள். செம்மண் நிறைந்த மேட்டு நிலத்தை நெல் பயிரிடுவதற்காக உழுதனர்.

வயலில் விதைப்பதற்காக விதையைக் கொண்டு சென்ற உழவர்கள் முன்னர் விளைந்த நெல்மணிகள் களத்திலே உதிர்ந்து கிடப்பதைக் கண்டு, கொண்டு சென்ற விதை நெல்லை அப்படியே வைத்து விட்டு, களத்தில் கிடந்த நெல்லைப்

பொறுக்கியபடி இருந்தனர். மாலை நேரம் வந்ததால் பொறுக்கிய நெல்மணிகளுடன் தம் இல்லம் வந்து சேர்ந்த செய்தியை இப்பாடல் எடுத்துரைப்பதாக அமைகிறது.

''வித்திய உழவர் நெல்லொடு பெயரும்
பூக்கஞல் ஊரன் தன் மனை
வாழ்க்கை பொலிக என வேட்டேடே'' (ஐங்.3:4-6)

**எருவிடுதல்:**

பண்டைக்காலத்தில் உழவுத் தொழில் செய்த மக்கள் கால்நடைகளின் கழிவாகிய தொழு உரமும் இலைதழையாகிய தலை உரமும் பயன்படுத்துவதை மரபாகக் கொண்டிருந்தனர். இயற்கை முறை எருவினைப் பயன்படுத்தியமை தெரியவருகிறது. நெல்பயிர் செழித்து வளர்ந்து நிறைய விளைச்சல் தர வேண்டுமானால் ஊட்டச்சத்து அவசியம் என்பதால் தற்காலத்தில் அறிவியல் சார்ந்த மருந்துகள், உரங்களை எருவாக பயன்படுத்துகின்றனர்.

"தர்து எரு மருகின்" (நற்.345:3)

''இரும்புனிற்று எருமைப்பெருஞ்செவிக் குழவி
பைந்தாது எருவின் வைகு துயில் மடியும்''(நற்.271:1-2)

"தாது எரு மறுகின் மூதூர்" (அக.நா.65-4)

"தாது எருத்த தைந்த"(மலைபடு.531)

"இடுமுள் வேலி எருப்படு வரைப்பின்"(பெரும்பாண்.154)

தொழுவத்தில் உள்ள ஆநிரைகளின் சாணமும் பூக்களில் உதிர்ந்து காய்ந்து போனவையும் உரமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளமை தெரியலாகிறது. நிலத்தை உழுவதற்கு முன்னரும் உழுத பின்னரும் கால்நடைகளின் சாணத்தையும் இலை தழைகளையும் பயன்படுத்தினர்.

‘‘ஏரினும் நன்றால் எருவிடுதல் நட்டபின்
நீரினும் நன்று அதன் காப்பு’’[11]

என்ற குறள் நிலத்தை நன்றாக உழுது எருவிட்டு போதிய நீர் பாய்ச்ச வேண்டியதையும் பயிர்களைப் பாதுகாக்க வேண்டியதன் அவசியத்தையும் எடுத்துரைக்கின்றது. அதே போல களையெடுத்தலின் தேவையைப் பற்றி குறிப்பிடும்பொழுது

“களைகால் கழீஇய பெரும்புன வரகின்”(அக.நா.194-9)

என்று அகநானூறு கூறுகின்றது.

பூச்சிக்கொல்லி உரங்களைப் பயன்படுத்தாமல் கால்நடைகளுடைய சாணம், இலை தழைகள், வேப்பம் பிண்ணாக்கு முதலிய இயற்கை உரங்களே சங்ககால மக்களால் பயன்படுத்தப்பட்டது என்ற செய்தியை அறியமுடிகிறது.

**உழுகருவிகள்:**

உழவுத்தொழிலுக்கு பயன்படும் கருவிகளுள் முக்கியமானது கலப்பை எனப்பட்டது. உழவர் நிலத்தைப் பயன்படுத்த உபயோகிக்கும் கருவி. இது நிலத்திலுள்ள உறுதியான மண்ணினைக் கீழ் மேலாகக் கலப்பது என்று கலப்பைக்கு விளக்கம் அளிக்கிறது. அபிதான சிந்தாமணி[12] இவ்வகைக் கருவியை உருவாக்கவும் பயன்படுத்தவும் பழந்தமிழர் கற்றிருந்தனர். அகநானூறறில் இக்கருவியானது ஏர் என்றும், நாஞ்சில் என்றும் வழங்கப்படுகிறது.

அதே போல கலப்பையின் உறுப்பாகிய கொழு இலக்கியத்தில் இடம்பெறுகின்றது.

“தண் துளிக்கு ஏற்ற பல உழு செஞ் செய்”(அக.நா.26-24)

பெருமழை பெய்த பொழுது விடியற் காலையிலே ஏர் உழுவதற்காக உழவர்கள் சென்று விடுவர். புழுதியால் புரண்ட செம்மண் நிலத்தில் ஆழமாக உழுது விதையை விதைத்தனர்.

"பேர்உறை தலைஇய பெரும்புலர் வைகறை
ஏர்மடம் படுத்த இருமறுப் பூழிப்
புறம்மாறு பெற்ற பூவல் ஈரத்து
ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்
வித்திய மருங்கின் விதைபல நாறி"(அக.நா.194:1-5)

**களை எடுக்கும் கருவிகள்:**

நிலத்தைப் பல முறை உழுது பண்படுத்தி விதைத்துப் பயிரை ஒழுங்கு செய்வதற்கும், களை எடுப்பதற்கும் பல கிளைகளையுடைய கலப்பையைப் பயன்படுத்தினர். அதே போல, களைகளைக் களையப் பயன்படும் துளர் என்ற கருவியை,

"தொடுப்பு எறிந்து உழுத துளிர் படு துடவை" (பெரு.பாண். 1201)

என்பதால் அறியமுடிகிறது. இதில் கலப்பையால் உழுது விதைத்த விளை நிலத்தில் தோன்றிய களைகளைக் களக்கொட்டால் களையப்பட்ட தோட்டம் சுட்டப்படுகிறது. இதே போல்

"தொய்யாது வித்திய துளர்படு துடவை"(மலை.படு.122)

என்பதிலிருந்து களைக்கொட்டால் கொத்தி செடிகளை வளர்த்திருப்பதை அறிய முடிகிறது.

**உழவுத் தொழிலில் எந்திரம்:**

நீரினைத் தேக்கி வைத்தல், நிலத்தினைப் பண்படுத்துதல், பல்வித வித்துக்களைப் பயன்படுத்துதல், வளைபொருள்களாகிய கரும்பிலிருந்து

தேவையான இரண்டாம் நிலை பொருளாகிய கரும்புச் சாற்றினைப் பிரித்தெடுக்க இரும்பு பழி எந்திரம் வழங்கப்பட்டது. இவ்வெந்திரமானது ஆண் யானை முழங்கும் முழக்கத்திற்கு மாறாக ஒழித்ததை,

"கரும்பின் எந்திரம் களிற்றெதிர் பிளிற்றும்" (ஐங்.55:1)

என்றும் இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன. மேலும், கரும்பு ஆலையில் சென்று, பயனுற அசைந்த கரும்பினையும் மிகப் பெரும் மழை பெய்தால் எவ்வாறு அதிகமான சத்தம் கேட்குமோ அதேப் போல கோல்களின் கனுக்களை எந்திரம் பிழிவதால் அந்தக் கரும்பினின்று எழும் ஆராவாரத்தை,

"ஆலைக் கலமருந் தீங்கழைக் கரும்ப" (மலை.படு.119)
என்னும் அடி விளக்கும்.

இதேபோல ஊர்களின் தோற்றப் பொலிவானது, கரும்பாலைப் புகையினால் பரப்பப் பெற்று இருண்ட மேகம் சூழ்ந்த பெருமலை போலத் தோன்றியதை,

"பொங்கழி ஆலைப் புகையொடும் பரந்து
மங்குல் வானத்து மலையில் தோன்றும்" (சிலப்.10: 151-152)

மேலே சொல்லப்பட்டுள்ள பாடற்கருத்துக்களின்படி சங்ககால மக்களின் பண்பாட்டில் கரும்பு பிழியும் எந்திரம் பயன்படுத்தப்பட்டிருப்பதை அறிய முடிகிறது. இன்றும் நிறைய இடங்களில் கரும்பு எந்திரம் மூலம் கரும்புச் சாறு விற்பனை சிறப்பாக நடந்துக்கொண்டிருக்கிறது.

**நீர்பாய்ச்சல்:**

மனிதனின் வாழ்வாதாரத்தில் நீர் எவ்வளவு முக்கியத்துவம் பெறுகிறதோ அந்தளவிற்குப் பயிர்கள் வளர்வதற்கும் நீர் முக்கியமானதாகும். பயிர்கள் சிறப்பாக வளர்வதற்கு எருவினை அடுத்து நீர் அவசியமானதாகும். தேவையான நீரை

நிர்நிலைகள் அமைத்து அதில் சேமித்து வைத்திருந்தனர். நீர்வளமும், நிலவளமும் பெருகினால் நாட்டுவளம் உயரும் என்பதை நன்கறிந்தவர்கள் பண்டைத் தமிழர்கள்.

கள்ளுண்டு மகிழ்ந்து ஆரவாரம் கொண்ட உழவர்கள் காஞ்சி மரத்தின் கொம்புகளை சிறுதுண்டுகளாக நட்டனர். இனிய சுவைமிக்க கரும்பில் சிறந்தவற்றை எடுத்துப் பல கழிகளைக் குறுக்கும் நெடுக்காக வைத்து அடைத்து அணையாகக் கோலி அப்பள்ளங்களில் நீரைத் தேக்கி வைத்து தேவையான பொழுது பயிர்களுக்கு பாய்ச்சியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

''பல்மர உயிர்சினை மின்மினி விளக்கத்துக்
செல்மழை இயக்கம் காணும்''(நற்.31:10-11)

மேகத்தின் இயக்கத்தினைக் கொண்டு மழை பெய்யும் வாய்ப்பினை அறிந்து தம் பயிர்த் தொழிலை அமைத்துக்கொள்ளும் மேன்மையினை உடையவர்கள் பழந்தமிழர்கள்.

''குன்றக்குரவன் ஆர்ப்பின் எழிலி
நுண்பல் அழிதுளி பொழியும்''(ஐங்-231:1-2)

உரிய காலத்தில் மழை பொழியவில்லை என்றால் மக்கள் ஒன்று கூடி நின்று மழை வேண்டி இறைவனிடம் வணங்குகின்ற காட்சியினை இப்பாடலடிகளில் காணமுடிகிறது. பெய்யும் மழை பயிர்த் தொழிலுக்கு போதுமானதாக இருந்தால் அதனைப் பயன்படுத்தியதோடு எஞ்சிய நீரை தேக்கி வைத்து மழைபொழியாக் காலங்களில் பயன்படுத்தி உள்ளனர்.

**அறுவடை செய்தல்:**

விளைந்தப் பயிர்களை அறுவடை செய்து அதில் உள்ள தானியங்களைப் பெறுவதற்காக தாளுடன் அறுக்கும் செயல் அறுவடை செய்தல் ஆகும். அறுவடை

செய்வதிலும் கதிர்களை அடித்து நெல்லைப் பெறுவதிலும் பழந்தமிழர்கள் சிறப்பு பெற்றிருந்தமை அறிய முடிகிறது.

உழவர்கள் அருகில் இருக்கும் கோரையினை நீக்கி நெற்கதிர்களை அறிந்து, அறிந்த கதிர்களை மாறுபட வைத்து கட்டுகளாக இறுக்கிக் கட்டி, கட்டிய கட்டுகளைக் கள் உண்டு களித்திடும் களமர்கள் மருதநிலம் சூழப்பெற்ற கொடிகள் அசைந்தாடும் இடத்தில் உள்ள களத்திலே கொண்டு வந்து சேர்த்த செய்தியையும் அறியமுடிகிறது.

களத்தில் வைக்கப்பட்டிருந்த கதிர்களில் உள்ள நெல்மணிகளைக் குருவிகள் கொத்தித் தின்றதாம். அதனை விரட்ட உழவனின் மகள் சத்தமிட்டு விரட்டிய செய்தியை இப்பாடல் உணர்த்துகிறது.

“வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇப்
பழனப் பல்புன் இரியக் கழனி”(நற்.351: 1-2)

நன்கு விளைந்து ஒன்றொடு ஒன்று இணைந்து வரப்பை உரசிக்கொண்டிருகின்ற நெற்கதிர்களை அறுவடை செய்யும் போது கூடுகட்டி பயிர்களுக்கு இடையே வாழும் குருவிகளை விரட்டுவதற்கு தண்ணுமை எண்ணும் இசைக் கருவியை இசைத்து விரட்டியுள்ளனர். இச்செயலானது உழவர்கள் பிற உயிர்களின் மேல் கொண்டுள்ள அன்பு புலனாகிறது.

“செவ்வி சேர்ந்த புள்ளி வெள்ளரை
விண்டுப் புரையும் புணர்நிலை நெருங்கட்டும்
பிண்ட நெல்லின்” (நற்.25: 2-4)

தூய்மை செய்து வைத்திருந்த நெல் மணிகள் மலை போல் காணப்படும். அவற்றை நெற்கூட்டில் இடுவர். அந்நெல்லை அளவிட அந்நெற்கூட்டில் உழவர்கள் புள்ளிகள் வைத்து அளவிட்ட செய்தி இப்பாடலின் வழி அறியலாகிறது.

“மென்தினை நெடும்போர் புரிமார்
துஞ்சுகளிறு எடுப்பும்தம் பெருங்கல் நாடே”(நற்.125: 11-12)

அறுவடை செய்யும் பொழுது நெற்கதிர்களை மட்டுமல்லாமல் திணை, வரகு முதலிய கதிர்களையும் அறுவடை செய்தமை தெரியலாகிறது. திணை வரகுக் கதிர்களைத் தாளுடன் அறுத்துப் போட்டனர். யானைகளையும், எருமைகளையும் கொண்டு போரடித்தமை அறிய முடிகிறது.

“கருங்கால் வேங்கைச் செஞ்சுவல் வரகின்
மிகுபதம் நிறைந்த தொருகூட்டு ஒரு நிறை”(அகநா.397:6-7)

அறுவடை செய்து தூய்மை செய்த தானியங்களைப் பதப்படுத்தி நெற்கூட்டில் பாதுகாத்த நிலையினை உணரமுடிகிறது. உழவர்கள் அறுவடை செய்த தானியங்களை உலர்த்திப் பாதுகாத்து வைத்திருந்தமை புலனாகிறது.

மருதநில மக்களின் முக்கியத் தொழில் உழவுத் தொழில. அவர்கள் உழவினைச் செய்யும்முறை எருவிடுதல், நீர்பாய்ச்சுதல், அறுவடைச் செய்தல், அறுவடைச் செய்த நெல் திணை போன்றவற்றை பாதுகாத்தமை பற்றி எடுத்துரைப்பதன் மூலம் மருதநில மக்களின் பண்பாடு புலனாகிறது.

### 3.1.4. நெய்தல்:

கடலும், கடல் சார்ந்த பகுதியும் உடையது நெய்தல் நிலமாகும். நெய்தல் நிலத் தெய்வம் வருணன். நெய்தல் நில மக்களின் தொழில் மீன் பிடித்தல் அவற்றை விற்றல். இவை அவர்களின் அன்றாடத் தொழிலாகும். இவர்களை நுளையர், நுளைச்சியர், பரதவர், மீனவர் என அழைத்தனர். கடலுக்கு மீன் பிடித்தலுக்காகச் சென்றிருக்கும் ஆடவர்கள் நல்ல முறையில் திரும்ப வேண்டும் என்பதற்காக வீட்டில் உள்ள பெண்கள் விளக்கில் மீன் எண்ணெய்யை ஊற்றி ஏற்றி அணையாமல் பாதுகாத்தும் வந்துள்ளனர்.

**முத்துக்குளித்தல்:**

சங்க இலக்கியப் பாடல்களால் கொற்கை என்னும் துறைமுகம் முத்துக்குப் பெயர் போன துறையாய் விளங்கியது என்பர். கடலில் முத்துக்கள் மிகுதியாய் இருக்கும் பகுதியில் அலைகள் அவற்றை அள்ளிக் கரையில் வீசும் கடற்கரை வெண்மணற் பரப்பில் அம்முத்துக்கள் ஒளிசிந்தும். பெருங்கடலினின்றும் உருண்டு திகழும் முத்துக்களைத் திரட்டிக் கொண்டு வந்து பரதவர் பங்கிட்டுக் கொள்வர்.

**சங்கெடுத்தல்:**

முத்துக்களைப் போலவே சங்குகளும், வலம்புரிகளும் கடலில் சில பகுதிகளில் மிகுந்திருந்தன. அவை கரையிலும் வெளிப்பட்டு வருதல் உண்டு. வலம்புரிச் சங்குகள் மேய்ந்தமையால் அடிச்சுவடுப்பட்ட மணற்பரப்பு உழுதது போல் காணப்படும்.

ஆழ்கடலில் மூழ்கி முத்தெடுக்கும் பொழுது தமக்கு ஊறு நேரிடாதவாறு கடலில் திரியும் கொல்லும் தன்மையுடைய சுறாக்களை விலக்கிச் செல்வர் பரதவர் அச்சந்தரும் கொடுஞ் சுறாக்களை தம்மை அணுகாது தடுத்து விடுவர். இக்கருத்து குறித்து வி.கனகசபை என்பார் ஆயரத்தொண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் என்ற நூலில் “அவர்கள் முத்தும் சங்கும் எடுக்க கடலில் மூழ்கினர். அத்துடன் மூழ்குமிடத்தில் சுறாக்கள் வராமல் தடுப்பதற்குரிய மந்திரமும் அவர்கள் அறிந்திருந்தனர் என்று குறிப்பிட்டுளார். இச்செய்தியை மார்க்கோபோலோ என்ற வெனிஸ் நகர வாணிகப் பயணியும் பின்வருமாறு கூறியுள்ளார். அவ்வங்கக் குடாவில் அளவிற் பெரிய மீன்கள் நிறைந்திருப்பதால், அவை முத்துக்குளிப்பவர்களை அடியோடு கொன்று விடும் இக்கேட்டினைத் தவிர்க்கும் பொருட்டு அவ்வணிகர்கள் தங்களுடன் மந்திரத்தால் வசியம் செய்யும் பலரை அழைத்துச் செல்வர் பார்ப்பனக்குடியைச் சேர்ந்த இரு மந்திரவாதிகள் அம்மீன்களின் மீது தாங்கள் கற்ற வித்தையை ஏவி அதனால் மீன்களைத் தம்

வயப்படுத்தி முத்துக் குளிப்பவருக்கு யாதொறு தீங்கும் நேரிடாதவாறு தடுத்துப் பாதுகாக்கின்றனர்.

**மீன் பிடித்தல்:**

நெய்தல் நிலப் பரதவ மக்கள் கடலில் மீன்பிடித்தலைத் தலையாய கலையாகக் கொண்டிருந்தனர் எனினும் முத்துச்சிப்பிகள் நிறைந்த கடற்பகுதிகளை ஒட்டி வாழந்தவர்கள் முத்துக்குளிக்கும் கலையிலும் சங்கு மற்றும் பவளம் எடுக்கும் கலையிலும் ஈடுபட்டிருந்தனர்.

பரதவ இளைஞர்கள் படகில் அயலகடல் நடுவே சென்று வாளரம் போன்ற வன்சுறாக்களோடு பெருமீன்களைத் துண்டங்களாகக் கூறுபடுத்தித் தோணிகளில் குவித்துக் கரையேறித் தங்கள் கழிசூழ் பாக்கம் சேர்வர்.

கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லக்கூடிய பரதவர்கள் கடலின் சூழ்நிலையை முதலில் நன்கு அறிந்து கொள்வார்கள். அறிந்து கொண்ட பின்னரே கடலுக்கு மீன் பிடிக்கச் செல்வார்கள்.

கடற்கரைச் சோலையில் உள்ள பரதவர்கள் கடலுக்குச் செல்லும் முன்னர் அதன் தன்மையை ஆராய்வதற்காகப் புன்னை மரத்து நிழலில் தங்கியதாகவும் அதன் பின்பு கடலுக்குச் செல்வதற்கான நேரம் குறித்து முறுக்குண்ட வலையைப் பிரித்து வைத்திருந்த செய்தியை அறிய முடிகிறது. கொல்லும் தொழிலையுடைய கூரிய வாயினை உடைய உளியை எடுத்துக்கொண்டவர்கள் மீனவர்கள். அழுத்திப் பொருந்திய திண்ணிய மூங்கிலின் வலியக் கோலையும் எடுத்துக்கொண்டு வளைந்த மீன்பிடி படகுகளில் ஏறிக் கடலுக்குச் சென்றனர்.

கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லும் காலங்களில் கடலில் எப்பொழுது வேண்டுமானாலும் புயல் வரலாம். சுனாமி போன்ற இயற்கைச் சீற்றங்களும் வரலாம்

கடலுக்குச் செல்லும் பரதவர்களுக்கு கடலில் இருக்கும் சுறா திமிங்கலம் போன்ற பெரிய மீன்களினால் ஆபத்து ஏற்பட்டிருக்கலாம். எனவே, அவர்கள் தங்களைக் காத்து கொள்ளவும் தாக்கும் பொழுது எதிர்த்துப் போரிடவும் இது போன்ற கருவிகள் பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

மீன் பிடிக்கச் செல்லக்கூடிய பரதவர்கள் விடியற்காலையில் எழுந்து மீன் வேட்டையில் ஈடுபடுவர். பறிகொண்டு அவற்றை வாரி எடுத்து நுண்ணிய மணற்பரப்பில் காயவைப்பர். காயவைத்த மீன்களைத் தின்னுதற்குக் கொக்கு போன்ற பறவை இனங்கள் வருவதால் அவற்றை விரட்டுவதற்கு ஆட்கள் இருப்பார்கள். மீன் வேட்டையில் ஈடுபட்ட செய்தியை,

> "நாள்வலை முகந்த கோள்வல் பரதவர்
> நுணங்குமணல் ஆங்கண் உணங்கப் பெய்ம்மார்
> பறிகொள் கொள்ளையர், மறுக உக்க
> மீன் ஆர் குருகின் கானல்அம் பெருந்துறை"(அகநா.300:1-4)

இப்பாடல் வழி அறிய முடிகிறது.

மரங்கள் அடந்த கடற்கரைச் சோலையில் உள்ள கடலில் நெய்தல் நிலத் தலைவியின் தமையன்மார்கள் பலவகையான மீன்களைப் பிடித்து வந்தமையை அறிந்து கொள்ள முடிகிறது.

ஓசையினை உடைய குளிர்ந்த கடலில் பரதவர்கள் இரவில் தம் சுற்றத்தாருடன் மீன் பிடிக்கச் செல்வார்கள். இருளில் வெளிச்சம் தெரிவதற்காகப் பல விளக்குகளை எடுத்துச் செல்வார்கள். மீன்களைப் பிடிக்கும் பரதவர்கள் தங்கள் மகனையும் மீன் பிடிக்கப் பழக்குவார்கள் என்ற செய்தியை,

“அந்த இருப்பைப் பூவின் அன்ன
துய்த்தலை இறவொடு தொகைமீன் பெறீஇயர்
வரிவலைப் பரதவர் கரு வினைச் சிறாஅர்
மரல் மேற்கொண்டு மான்கணம் தகைமார்
வெந் திறல் இளையவர் வேட்டு எழுந்தாங்கு
திமில் மேற்கொண்டு, திரைச்சுரம் நீந்தி”(நற்.111: 1-6)

எடுத்துரைக்கிறது.

பகல்பொழுதில் உப்பினை உலர்த்திய இடமான உப்பங்கழியிலே மீன்கள் வந்து போகுமாம். அதனைக் கண்ட மீனவர்களும் அவர்களின் சிறார்களும் விளக்கொலியின் மூலம் அம்மீனைப் பிடிப்பார்கள்.

“………………
இருங்கழி துழவும் பனித் தலைப்பரதவர்
திண் திமில் விளக்கம் எண்ணும்
கண்டல் வேலிக்கழி நல் ஊரே”(நற்.372:11-13)

என்ற செய்தி இப்பாடலின் வழி புலனாகிறது. மீனவர்கள் வாழக்கூடிய பகுதியானது எப்போதும் புலால் நாற்றம் வீசும். அது சிறு மீன்கள் நிறைந்த தண்ணீர் துறையாக இருக்கும் எனக்

“வான் கடற் பரப்பில் தூவற்கு எதிரிய
மீன் கண்டன்ன மெல் அரும்பு ஊழ்த்த
…………………..” (அக.நா.10: 1-2)

கூறுகிறது.

மீனவர்கள் மீன்பிடித்தலைப் பற்றிக் கூறும்போது, பெரிய கடற்பரப்பில் சிவந்த இறால் மீன் நடுங்கும்படி மீன்களை பிடிக்கும் தொழிலில் அழகிய வலையினைக் கையிலே கொண்டவாறு நீண்ட படகில் தந்தையானவன் மீன்பிடிக்கும் தொழிலில் தங்கினான். உப்பு விற்று வாங்கி வந்த நெல்லாலே ஆக்கப்பட்ட மூரலாகிய வெண்சோற்றை அயிலை மீனை இட்டு ஆக்கிய சுவை

மிகுந்த குழம்பை அதிலே ஊற்றிக் கொழுமீன் கருவாட்டுடன் தன் தந்தைக்கு அவனுடைய மகள் கொண்டு செல்கிறாள் என்பதை,

“பெருங் கடற் பரப்பில் சேயிறா நடுங்க
கொடுந் தொழில் முகந்த செங்கோல் அவ்வலை
நெடுந் திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு
உப்பு நொடை நெல்லின் மூரல் வெண்சோறு
அயிலை துழந்த அம்புளிச் சொரிந்து
கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்
திண் தேர்ப் பொறையன் தொண்டி அன்ன எம்” (அக.நா.60:1-7)

அகநானூற்றுப் பாடல் மூலம் தெளிவாக அறியலாம்.

மீன் பிடிக்கச் செல்லும் மீனவர்கள் படகில் விளக்கினை வைத்துக்கொண்டு மீன்பிடிக்கச் செல்கின்றனர். மீனவர்களின் வளைந்த படகில் இருக்கின்ற விளக்குகள் வானத்தைத் தொட்டு நிற்கும் கடலின் மீது கண்டாற் போன்று பொருந்தத் தோன்றும் என்பதை,

“மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளி சுடர்
வான்தோய் புணரிமிசைக் கண்டாங்கு”(அகநா-65:11-12)

போன்ற பாடல்களின் வழி மீன்பிடித்தல் பற்றிய செய்திகளை அறியமுடிகிறது.

**மீன் விற்றல்:**

கடலுக்குச் சென்று மீன் பிடித்து பிடித்த மீனை விற்றல் என்பது நெய்தல் திணையில் தினம் நடக்கக்கூடிய தொழிலாக இருந்துள்ளது. கடலில் பிடித்த மீன்களை கரைக்குக் கொண்டு வந்து இறக்கியமை கண்டு மிகுந்த மகிழ்ச்சியுடன் இளையவர்களும், முதியவர்களும் தம் சுற்றத்தாருடன் சேர்ந்து வளையில் இருந்து மீன்களைப் பிரித்து வகை வகையாக கூறு கட்டி வைத்து விலை கூறி வைப்பார்கள். மீன் விற்றுத் தீர்ந்தவுடன் மீனவர்கள் கரையில் களைப்பு நீங்க

உறங்குவார்கள். கடலில் இரந்து பிடித்த மீன்களை இறால் மீன், வாளை மீன், பிற மீன்கள் எனத் தனித்தனியாகப் பிரித்து வைத்து வியாபாரம் செய்வார்கள்.

விற்ற மீன்களைத் தவிர எஞ்சிய மற்ற மீன்களை வெயிலில் காய வைத்து அதனைக் கருவாடாக மாற்றியும் உண்பார்கள். சிலவற்றை விற்கவும் செய்தார்கள்.

**உப்பு விளைவித்தல்:**

மருத நில மக்கள் எவ்வாறு நிலத்தில் உழவு மேற்கொண்டு வேலை செய்தார்களோ அதுபோல நெய்தல் நில மக்களாகிய பரதவர்கள் கடல் என்ற நிலத்திலே உப்பை விளைவித்தனர்.

பரதவர்கள் ஒரு நேரிய இடத்தினைத் தேர்ந்தெடுத்து மழை நீரை எதிர்பாராது கடல் நீரைக்கொண்டு உப்பை விளைவிப்பார்கள். அப்படிப்பட்ட வேளாண்மையை உடையது கடற்கரைச்சோலை என்ற செய்தியை காணமுடிகிறது. மீனையும் தங்களால் விளைவிக்கப்பட்ட உப்பினையும் ஊர் ஊராகச் சென்று விற்றனர்.தன் தந்தை கடலில் இருந்து கொண்டு வந்த மீனையும் முத்தையும் விற்றுப் பொருள் சேர்த்தாள் என அகநானூறு கூறுகிறது.

**உப்பு விற்றல்:**

கடல் தண்ணீர் கொண்டு விளைவித்த உப்பினை வண்டி வண்டியாக ஊர் ஊராகச் சென்று அவ்வுப்பினை விற்று வருபவர்களை உமணர்கள் என அழைத்தனர். இவர்களைப் பற்றிய குறிப்புகள் சங்கப்பாடல்களில் காணலாகிறது.

உப்பளங்களில் குன்று போல் குவிந்து கிடக்கும் உப்பின் குவியலை உப்பு வணிகர்கள் மலை நாட்டு ஊர்களுக்கு கொண்டு போய் விலைக்கு விற்பார்கள் என்ற செய்தியை

"உவர் விளை உப்பின் குன்றுபோல் குப்பை
மலை உய்த்துப் பகரும் நிலையா வாழ்க்கை
கணம் கொள் உமணர் உயங்குவயின் ஒழித்த"(நற்.138:1-3)

இப்பாடல் கூறுகிறது.

உப்பு வண்டியில் பூட்டியிருந்த எருதுகள் மேயும்படி அவிழ்த்துவிட்டு வரகினைச் சமைத்து உண்டு இளைப்பாறினார்கள். சமைத்த அடுப்பினை அவ்விடத்தே விட்டுச் சென்றனர் என்ற செய்தியானது இப்பாடலில் இடம் பெற்றிருப்பதன் மூலம் உமணர்களின் வாழ்க்கையை ஒத்திருந்தது என்பது புலனாகிறது. அவர்களது குடும்பம் ஓரிடத்தில் தங்கி இருந்தாலும் உப்பை விற்க வேறு நிலங்களுக்குச் செல்வதால் தங்கள் குடும்பத்தை விட்டு அதிக நாள் பிரிந்திருந்தனர்.

உப்பினை வண்டியில் ஏற்றிச் செல்லும் போது வண்டியின் அச்சு முறிந்து போனால் அதனை வீசி எறிந்து விடுவர் என்பதை பாடல்கள் அறிவுறுத்துகின்றன. உப்பு வணிகர்கள் உப்பினை ஏற்றிக் கொண்டு செல்லும் பாதையானது கரடு, முரடானதாகவும், நீர் இல்லாத பாலை நிலத்தின் அரிய வழிகளில் சகடத்தை இழுத்துச் செல்ல இடர்படும் எருதுகளை அதட்டி ஓட்டியும் உப்பு விற்கச் சென்றனர்.

பாலை வழியினில் செல்லும் பொழுது கள்வர்களின் பயம் இல்லாமல் இருப்பதற்காக உமணர்கள் சத்தம் எழுப்பியும் மாடுகளின் கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் மணியின் ஒலியும் கேட்கும் என்று இப்பாடல் கூறுவதாக அமைகிறது. கடலும், கடல் சார்ந்த பகுதியில் வாழ்ந்த நெய்தல் நில மக்கள் மீன் பிடித்தல், அவற்றை விற்றல், உப்பு விளைவித்தல், வற்றல் ஆகிய தொழில்களைச் செய்து தமது வாழ்க்கையை மேம்படுத்தி உள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

உப்பு உற்பத்தி செய்தலே நெய்தல் நிலத்திற்குரிய தொழிலாகும். பெரும்பாலும் உப்பு வணிகர்கள் வியாபாரம் செய்யச் செல்லும் பொழுது பாலை நிலத்தைக் கடந்து செல்வதாகவே காட்டப்பெற்றுள்ளது. அவர்கள் நீரில்லாமல் உள்ள அரிய வழியில் சென்றதையும், கையில் கோல் கொண்டிருந்ததையும், அவர்களது வண்டியில் பூட்டியுள்ள எருதுகளை அதட்டும் ஓசையானது குன்றுகளில் எதிரொலித்ததையும்,

"நீர் இல் அத்தத்து ஆர் இடை மடுத்த
கொடுங்கோல் உமணர் பகடு தெழி தெள் விளி
நெடும் பெருங் குன்றத்து இமிழ் கொள இயம்பும்
கடுங்கதிர் திருகிய வேய் பயில் பிறங்கல்" (குறுந். 17:12-15)

உப்பு வணிகர்கள் பல புரிகளையுடைய நீண்ட கயிற்றால் கட்டப்பட்ட வண்டியை எருதுகளின் கழுத்தில் பூட்டுவர். ஏற்றமான இடங்களில் ஓட்டும் போது சிரமமாக இருப்பதால் அவ்எருதுகளை அதட்டி ஓசை எழுப்புவர். அவ்வோசையைக் கேட்டு ஆணும், பெண்ணுமான மானினங்கள் அஞ்சி ஓடியதை

"..........................பலபுரி
வார்கயிற்று ஒழுகை நோன்சுவற் கொளீஇ
பகடுதுறை ஏற்றத்து உமண்விளி வெரீஇ
உழைமான் அம்பிணை இனன் இரிந்து ஓட"(அக.நா.173: 8-11)

என்ற பாடலடிகள் காட்டியுள்ளன.

நீரில்லாமல் வறட்சியினால் நிலங்களும் நெடிய சுனைகளும் வற்றிப் போயிருந்தன. குன்றின் அருகில் இருந்த மரக்கிளைகள் பற்றி எரிந்தன. வெப்பம் தாங்க மாட்டாமல் மூங்கில்கள் வெடித்துச் சிதறின யானைகள் வருந்திய நிலையில் காணப்பட்டன. அத்தகைய பரற்கற்கள் பொருந்தியக் காட்டினைக் கடலில் விளைந்த உப்பினைக் கொண்டு வரும் வணிகர் கூட்டம் கடந்து சென்றது.

பொதி சுமந்து எருதுகளோடு சென்ற உமணர்கள் சற்றே இளைப்பாறும் பொருட்டு ஓரிடத்தில் தங்கினர். அப்பொழுது ஏற்பட்டத் தாகத்தை தீர்க்கும் பொருட்டு அவ்விடத்தில் ஓர் இடத்தைத் தேர்வுச் செய்து கிணறு தோண்டினர். அக்கிணற்றில் நன்கு நீர் ஊறி வழியில் செல்வோரின் தாகத்தை தீர்த்தது.

குனிந்து செல்லும் படியான தலைகுவித்துள்ள குடிசைகளைக் கொண்ட குடியிருப்புகளை உடைய சிற்றூர் உள்ளது. அவ்வூரில் பகடுகளின் மணி ஒலிக்க, உப்பு வண்டிகளை எருதுகள் வருந்தி இழுக்க, அதனால் உண்டான புழுதி காற்றால் சுழற்றியடிக்கும் வழியில் வணிகர்கள் உப்பு விற்பனைக்குச் சென்றுள்ளனர். உப்பு வணிகர்கள் பொதி சுமப்பதற்காக கழுதைகளையும் பயன்படுத்தி உள்ளனர்.

பாதிரிப் பூவையும், அலரிப் பூவையம் ஒன்றாகக் கட்டிய மாலையுடன், செருப்பு ஒலிக்கும் காலுடனும், கோலுடைய கையுடனும் உமணர்கள் கூட்டமாகச் சென்றார்கள். எல்லோரும் ஒன்றாக கூடி வந்ததால் அவர்களது எருதுகள் கடந்து செல்வதற்கு கடினமான மேடுகளை மணி ஒலிக்க கடந்தன. அவ்வாறு ஒலிக்கக் கூடிய மணியின் ஒலியும், உமணர்கள் எழுப்பும் சீழ்க்கை ஒலியும் அவ்வழியே செல்லும் புதியவர்களுக்குப் பாதுகாப்பாக இருந்ததை,

"அந்தப் பாதிரித் தூய்த்தலைப் புதுவீ
சரிஇதழ் அலரியொடு இடைபட விரைஇ
வண்தோட்டுத் தொடுத்த வண்டுபடு கண்ணி
தோல்புதை சிரற்றுஅடி கோலுடை உமணர்"(அக.நா.191:1-4)

என்று அகநானூறு உரைக்கும்.

பாலை வழியில் பயணம் சென்ற வணிகர்கள் இடைஇடையே தங்கி உணவு சமைத்து உண்டதை ஒரு சில பாடல்கள் குறிப்பிட்டுள்ளன.

உப்பு வணிகர்கள் தங்கிச் சமைத்துச் சென்ற இடம் பாழ்பட்டுக் கிடந்ததைக் குறுந்தொகைப் பாடலொன்று,

"உமணர் சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்தலை

ஊர்பாழ்த்தன்ன ஓமைஅம் பெருங்காடு" (குறு.124:1-2)

உப்பு வணிகர்கள் கூட்டம் கூட்டமாகி தங்கள் பொருள்களுடன் பல ஊர்களுக்கு இடம் பெயர்ந்துச் செல்வர். உப்பு வண்டிகளைத் தாம் தங்கும் இடங்களில் நிறுத்திக்கொள்வர். எருதுகளைத் தறிகளில் பிணிப்பர். இரவு தங்கி உணவு உண்டு மகிழ்ந்து பிற இடங்களுக்குச் செல்வர். அவ்வாறு அவர்கள் நீங்கிச் சென்ற இடம் ஊர் பாழ்பட்டது போல் காணப்படும்.

**உமணரும் உப்பும்:**

பரதவர்கள் தாங்கள் விளைவித்த உப்பினை மேன்மையுடைய உப்புவணிகர்கள் வரும் வரை குவியலாக கட்டி வைப்பர். உப்பு வணிகர்கள் வந்த பின்பு விலையினைக் கூறி விற்றார்கள் என நற்றிணைப் பாடல் கூறுகிறது.

"உவர் விளை உப்பின் உழாஅ உழவர்

ஒழுகை உமண வருபதம் நோக்கி"(நற்.331: 1-2)

உப்பினை வாங்கிய வணிகர்கள் உப்பினை வண்டியில் ஏற்றி வரிசையில் நிறுத்தினர் என்னும் செய்தி சுட்டப்பெறுகிறது.

"கடுவெயில் கொதித்த கல் விளை உப்பு

நெடு நெறி ஒழுகை நிரை செலப் பார்ப்போர்"(நற்.354:8-9)

கள்வர் பயத்தால் உப்பு வணிகர்கள் பலர் ஒன்று சேர்ந்து செல்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். பல புரிகளையுடைய நீண்ட கயிற்றை கொண்டு வண்டியினை எருதுகளின் கழுத்தில் பூட்டுவர். ஏற்றமான இடங்களில் வண்டியினை ஓட்டும் போது எருதுகளை அதட்டி ஓட்டுவார்கள். அச்சமயம் ஒரு விதமாக

ஓசையை எழுப்பி வண்டியை விரைவாகச் செலுத்துவார். மாட்டு வண்டியை ஓட்டுபவர்கள் போன்ற ஒலியை எழுப்பி வண்டியை ஓட்டுவதை இன்றும் காணலாம்.

### 3.1.5. பாலை நிலம்:

மணலும், மணல் சார்ந்த இடமும் பாலை நிலமாகும். வறட்சி மிகுந்த இடமாகும். இந்நிலத்திற்குரிய தெய்வம் கொற்றவை. இங்கு வாழும் மக்கள் தங்கள் வாழ்வாதாரத்திற்காக பிற நிலங்களுக்கு இடம் பெயர்ந்து பொருளீட்டி வந்துள்ளனர். இங்கு தண்ணீர் கிடைப்பதும் அரிதாகும். இம்மக்கள் இச்சுரத்தின் வழியாகச் செல்வோரை அச்சுறுத்தியும் கொன்றும் அவர்கள் கொண்டு செல்லக் கூடிய பொருட்களை கவர்ந்து வாழ்ந்து வந்தனர்.

ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய தொழிலைத் தொல்காப்பியர் சுட்டிச் சொல்லவில்லை என்றாலும் உரையாசிரியர்கள் அதைச் சுட்டிச் சென்றுள்ளனர். அதன்வழி குறிஞ்சி நிலத்திற்குரிய தொழில் வேட்டையாடுதல் என்றும், முல்லை நிலத்திற்குரிய தொழில் ஆநிரை மேய்த்தல் என்றும் மருதநிலத்திற்குரிய தொழில் மீன்பிடித்தல் என்றும் விளங்கிக் கொள்ள முடிகின்றது. இளம்பூரணர் இவற்றொடு பாலைக்குரியத் தொழிலாக ஆறலைத்தலைக் குறிப்பிட்டுள்ளார்.

பாலை வழியில் செல்லும் மக்களை அலைக்கழிப்போரே ஆறலைக்கள்ளர் எனப்பட்டனர். அவர்களுடையத் தோற்றம், செயல்பாடுகள், தங்கி இருக்கக் கூடிய இடங்களை வைத்தே அவர்களை இனங்காணலாம்.

ஆறலைக்கள்வர்கள் சுருளுடைய தலைமுடியையும், அதை சேர்த்துக் கட்டாத குடுமியை உடையவர்களாகவும், தறுகண்மையின்மை உடையவர்களாகவும், கொடுமையான செயலைச் செய்யும் அம்பினை கையில் கொண்டவர்களாகவும் இருப்பார்கள் என்பதை,

"…………………வணர்கரி
வடியாப் பித்தை வன்கண் ஆடவர்
வடியமை பகழி யார வாங்கி
வம்பலர்ச் செருத்த வஞ்சுவரு கவலை" (அகநா. 161: 2-4)

என்ற அகநானூற்றுப் பாடல் கூறுகிறது.

வளைந்த வில்லையும் கொடிய பார்வையையும் உடைய வீரர்கள் எருதினைக் கொன்று அதன் தசையினை நெருப்பில் சுட்டெடுத்துப் பேய்களைப் போலத் தின்றனர். அவ்வூனைத் தின்றதால் தண்ணீர் தாகத்தை தீர்த்துக் கொள்ள, முதிர்ந்த தோப்பிக் கள்ளைக் குடித்து புலால் நீங்காத கையும் கழுவாத வாயும் உடையவர்களாக இருந்தனர் என்பதை,

"நிணம் பொதி விழுத்தடி நெருப்பி னவைத்தெடுத்
தண்கரு மரபிற் பேஎய் போல
விளரூன் றின்ற வேட்கை நீங்கத்
துகளற விளைந்த தோப்பி பருகிக்
குலாஅ வல்விற் கொடுநோக் காடவர்
புலராக் கையர் புசா வாயர்"(அக.நா.263: 13-18)

இரவுப் பொழுதில் பழுப்பு நிற ஆடையுடன் வழியில் யார் வருகிறார்கள் என்பதை ஆறலைக் கள்வர்கள் எதிர்பார்த்துக் காத்திருப்பர்.

இதனை நற்றிணையில்,

"………………..அல்லில்
துவர்செய் ஆடைச் செந் தொடை மறவர்
அதர் பார்த்து அல்கும் அஞ்சுவரு நெறியிடை" (நற்.33:6-7)

என்று கூறப்பட்டுள்ளது.

மேலும், அவர்கள் கூர்மையான அம்பை உடையவர்களாகவும் கழல் அணிந்தவர்களாகவும் இருந்ததை,

"கிடின் என இடிக்கும் கோல் தொடி மறவர்
வடிநவில் அம்பின் வினையர் அஞ்சாது" (நற்.48:6-7)

நற்றினையில் கூறப்பட்டுள்ளது.

உகாய் மரத்தில் ஏறி வழிப்போக்கர்கள் யாராவது வருகிறார்களா எனப் பார்த்திருக்கும் கள்வர், நீர் வேட்கைக்காக மரப்பட்டைகளையே மென்று தின்று நீர் வேட்கையைத் தீர்த்துக்கொள்வர். அதே போன்று அம்பு விடும் திறமையை அறிந்து கொள்வதற்காக வழியில் வரும் புதியவர்களிடம் அணிகலன்கள் இல்லை என்றாலும் அவர்களை கொன்று பறவைகளுக்கு இறையாக இடுவர். கொடிய வழியில் செல்பவர்களிடம் கள்வர்களை கொள்ளையடித்தும் பொருள்களைப் பறித்துக்கொண்டு வழிப்போக்கர்களைக் கொன்று விடுவர். எனவே, கள்வர்கள் வேட்டைக்கு கிளம்பும் போது பிணங்களைத் திண்பதற்காகப் பெண் பருந்தொன்று தன் துணையை அழைத்ததாக அகநானூறு கூறுகிறது. கள்வர்கள் களவுத்தொழில் செய்ததற்காக தங்கியிருந்த இடம் ஆசினிப் பலா நிரம்பிய ஒடுங்காடு ஆகும்.இதனை,

"கடுங்கண் மழவர் களவுழ வெழுந்த
நெடுங்கா லாசினி யொடுங்காட்டு ம்பர்"(அகநா. 91: 11-12)

என்ற பாடலடிகள் வழி அறிய முடிகிறது.

இவ்வாறாக சங்க காலத்தில் பாலைத்திணையில் ஆறலைக்கள்வர்களின் செயல்பாடுகள் இருந்துள்ளன.

**அம்புகளைக் கூர்மையாக்குதல்:**

விடியற்காலையில் எழுந்து கொலைத் தொழில் புரிதல் வேண்டியும், தொழில் மேல் செல்லுதற்காகவும் தங்களுடைய கருவிகளை சரி செய்யத் தொடங்கினர்.

ஆறலைக் கள்வர் இரும்பைத் தலையிடத்தேக் கொண்ட தங்கள் அம்புகளின் கூர்மையை அறிய தம் கை விரல் நகங்களால் ஒலி எழச் செய்து சரிபார்த்ததை குறுந்தொகைப் பாடல் குறிப்பிட்டுள்ளது.

"உகிர்நுதி புரட்டும் ஓசை போல" (குறுந். 16:3)

கொல்லனது உலைக் கூடத்திலுள்ள வெம்மையான பட்டடைக் கல்லைப் போல் இருந்த பாறையின் மேல் ஏறித் தங்கள் அம்புகளைத் தேய்த்து கூர்மையாக்குவர்.

"உளைக்கல் அன்ன பாறை ஏறி
கொடுவில் எயினர் பகழி மாய்க்கும்"(குறுந்.12:2-3)

கள்வர்கள் அம்பு எய்தி, வழிச் செல்வோரிடம் பொருளைப் பறித்து அவர்கள் கொன்றுவிடுவர் என்பது பாலைப்பாடல்களில் காணப்படும் பொதுவான செய்தியாகும். ஆனால் அவர்கள் வேல் எறிந்தும் கொல்வர் என்பதை அகநானூற்றில்,

"கொலைவெங் கொள்கைக் கொடுந்தொழில் மறவர்
ஆறுசெல் மாக்கள் அருநிறுத்து எறிந்த
எ.்.குஉறு விழுப்புண் கூர்ந்தோர் எய்திய" (அக.நா.363:10-12)

கூறப்பட்டுள்ளது.

எறும்பு புற்றுகளைப் போன்று குறுகிய பலவாகிய சினைகளை உடைய பாறைகளின் வழியே கொல்லனது உலைக்களத்தின் பட்டடைக் கல்லைப் போல வெம்மையுடைய வழியினைக் கடந்த வனைந்த வில்லினை உடைய வேட்டுவர்கள் அப்பாறையின் மீதேறி தங்களுடைய அம்புகளைத் தேய்த்துக் கூர்மைப்படுத்தினர் என்னும் செய்தியை இப்பாடலில் காண முடிகிறது.

“கயிறு கடை யாத்த கடுநடை ஏறி உளித்
திண் திமில் பரதவர் ஒண் சுடர்க் கொளீஇ
நடுநாள் வேட்டம் போகி”(நற்.388: 3-5)

பரதவர்கள் ஒளி பொருந்திய விளக்குகளைக் கொளுத்திக் கொண்டு இரவு நடுயாமத்தில் வேட்டைக்குச் செல்வர். வேட்டையில் கடலிலிருந்து பெற்ற மீன்களை விடியற்காலையில் கொண்டு வருவர்.

கூர்மைமிக்க அம்புகளால் கொடுந்தொழிலைச் செய்யக் கூடியவர்கள். அம்பெய்தும் தொழிலன்றி பிற தொழிலை அறியாதவர்கள் என நற்றிணைப் பாடல் எடுத்துரைக்கிறது.

“களிற்று முகம் திறந்த கல்லா விழுத்தொடை
ஏவல் இளையரொடு மா வழிப்பட்டென” (நற்.389:4-5)

**கொலையும் கொடுந்தொழிலும்:**

வழிபோக்கர்கள் தனியாக வருகின்றார்களா இல்லை கூட்டமாக வருகின்றார்களா என்று கள்வர்கள் கவனித்து அவர்களைத் தாக்க முற்படுவர்.

பசுமையற்றுப் போன வேனிற் காலத்தில் வில்லாற்றல் மிகுந்த ஆறலைக் கள்வர்கள் நிலைத்து நிற்கும் தன்மை வாய்ந்த யாமத்தின் கிளைகளை இடமாகக் கொண்டு வழிப்போக்கர்களின் தன்மையினை அறிந்து அவர்கள் காணாதவாறு மறைந்து நின்று கண்டறிந்து தாக்கும் தன்மையுடைய கள்வர்கள் வாழக்கூடிய பாலை நிலம் என அகநானூறு குறிப்பிடுகிறது. பாலை நிலத்தின் வழியாகச் செல்லும் வழிப்போக்கர்களைக் கொன்று குவிக்கும் செயலைப் பற்றிய பாடல்கள் நிறைய காணப்படுகின்றன.

ஆறலைக் கள்வர்கள் வழிபோக்கர்களைக் கொன்று கொல்லப்பட்டவர்களின் உடல்கள் மறையுமாறு இலைக்குவியல்களால் மூடி வைப்பர். ஆறலைக் கள்வர்கள் இடைவிடாது அம்பு எய்தமையால் சுரத்தினைக் கடந்து செல்லும் வழிப்போக்கர்கள் இறந்துபடுவதால் அவர்களுடைய உடம்பில் இருந்து வழிந்தோடும் குருதியினைக் குடிப்பதற்காக வந்த காகமானது வேறு தொழிலைச் செய்யாது தன் கூட்டிலேயே தங்கி விடும் என பாலை நிலத்தின் கொடுமையினை இப்பாடல் உணர்த்துவதாக அமைகிறது.

**கணந்துள் பறவை:**

கணந்துள் பறவையானது பாலை நிலத்தில் வாழக் கூடிய பறவையாகும். பாலை நிலத்தில் செல்பவர்களை எச்சரிக்கும் வகையில் ஒலியினை எழுப்பும்.

பாலை நிலத்து வழியினில் அழகிய சிறகுகளையும் நெடிய கால்களையும் உடைய கணந்தள் என்னும் பறவை துன்பம் செய்கின்ற ஆறலைக் கள்வர்கள் பற்றிய உண்மையினைத் தம் குரலால் அறிவுறுத்தக் கூடியது.

இவ்வாறு பாலை நிலத்தில் வாழக்கூடிய மக்கள் இரக்கமற்ற மனிதர்களாக வாழ்ந்துள்ளனர். வழிப்போக்கர்கள் கொண்டு செல்லக்கூடிய பொருட்களைக் கவர்ந்து அவர்களைக் கொன்று குவிக்கும் தன்மையினை உடையவர்கள்.

**பண்டமாற்று:**

காசு பணம் அச்சடிக்கப் படாத காலத்தில் தங்களிடம் இருக்கும் பொருளை மற்றவர்களுக்கு கொடுத்து அவர்களிடம் இருக்கும் பொருளைத் தனக்காக வாங்கி மனிதன் பயன்படுத்தி இருப்பான். இது தான் பண்டமாற்றின் முதல் நிலை எனலாம். தங்கள் நிலத்தில் விளைந்த பொருட்களை வேற்று நிலத்தில் வாழக்கூடிய மக்களிடம் கொடுத்து விட்டு அங்கு உற்பத்தியாகும் பொருட்களை தங்கள்

நிலத்திற்கு கொண்டு வருதல், பயன்படுத்தல் பண்டமாற்றின் வளர்ந்த நிலையாகும். சங்க காலத்தில் பண்டமாற்று முறை இருந்துள்ளமையை அறிய முடிகிறது.

**பண்டமாற்றில் உப்பு, மீன், நெல் பெறுமிடம்:**

பண்டமாற்று முறையில் குறிஞ்சி நிலத்தில் பெறப்பட்ட தேனை முல்லை நில மக்களுக்கு விற்றார்கள். நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பையும் மீனையும் மருதநிலத்தில் விற்று அங்கு விளைந்த நெல்லினைப் பண்ட மாற்றாகப் பெற்றனர். நெய்தல் நிலத்தலைவியின் தாய் உப்பினை விளைவிக்கும் உப்பளம் சென்று உப்பைப் பெற்றுக்கொண்டு அவற்றை மருதநிலத்தில் விற்று வெண்ணெய் வாங்கி வந்து தன் குடும்பத்திற்கு உணவு படைத்தாள் என்ற செய்தியை இப்பாடல் உணர்த்துகிறது ஒரு வட்டி மீனுக்கு நெல்லும் உப்பும் பண்டமாற்றுப் பெறப்பட்டதை

“முள் எயிற்றுப் பாண்மகள் இன் கெடிறு சொரிந்த
அகன் பெரு வட்டி நிறைய, மனையோள்
அரிகாற் பெரும் பயறு நிறைக்கும் ஊர” (ஐங்.47:1-3)

வலைவீசி மீன்பிடிப்பதில் வல்ல பாணனுடைய இளமகள். வட்டி நிறைய வரால் மீனைக் கொண்டு வந்து உழவர்களின் மனைக் கிழத்தியிடம் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாக பழைய வெண்ணெல்லை வாங்கி வந்த செய்தியை,

“வலைவல் பாண்மகன் வால் எயிற்று மடமகள்
வராஅல் சொரிந்த வட்டியுள், மனையோள்
யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் ஊர”(ஐங்.48-1-3)

என்று பாடல் எடுத்துரைக்கிறது.

“அம்சில் ஓதி அசைநடைப் பாண் மகள்
சில் மீன் சொரிந்து, பல் நெற்பெறூஉம்
பாணர் ஊர”(ஐங்.49-1-3)

பாணர் குடிப் பெண்ணானவள் சில மீன்களைக் கொடுத்து, அவற்றுக்கு ஈடாக பல நெற்களைப் பெறுதற்கு இடமான ஊர் என்று சுட்டும் பொழுது பண்டமாற்று முறை வெளிப்படுத்தப்படுகிறது.

மருத நிலத்தில் விளைந்த நெல்லினை வண்டியில் கொண்டு சென்று நெய்தல் நிலத்தில் விற்றனர்.

**3.2. வாணிகம்:**

பண்டைக் காலத்தில் பண்டமாற்று முறையில் வாணிகம் நடைபெற்றது. பொருள்களை வாங்கி விற்போர் வணிகர் எனப் பெற்றனர். சங்ககாலத்தில் வணிகர்கள் செல்வவளம் மிக்கவர்களாய் வாழ்ந்துள்ளனர். ‘அறநெறியிலிருந்து சிறிதும் பிறழாமல் இல்லறம் நடத்திப் பல திரட்சிகளை உடைய மலைகளைக் கண்டாற் போன்றும் பருந்துகள் இளைப்பாறியிருந்து பின்னர் உயரப்பறக்கும் இயல்புடையதுமான நல்ல தொழில் நிலையில் சிறந்து விளங்கும் நல்ல வீடுகளில் பல்வேறுப்பட்ட பண்டங்களுடன் பல்வேறு மணிகள், முத்து, பொன் போன்றவற்றை வாங்கிக்கொண்டு சிறந்த நாட்டுப் பொருட்களை விற்கும் வணிகர் என மதுரைக்காஞ்சி வணிகர் சிறப்பை விளக்குகிறது.

தேவர்களை வழிபட்டும், அவர்களுக்கு யாகங்களைச் செய்தும், பசுக்களுடன் எருதுகளைப் பாதுகாத்தும், அந்தணர்களின் புகழைப் பரப்பியும், புண்ணியங்கள் செய்தும், நெல், கமுகு, போன்றவற்றைக் கொடுத்தும் வரும் செயற்பாடுகள் குறைவுபடாத சிறந்த வாழ்க்கையை உடையவர். கொள்வதும் மிகையாய்க் கொள்ளாது கொடுப்பதும் குறைவாய்க் கொள்ளாது பழையதாகிய திரண்ட பொருளினை உடையவர்’ எனப் பட்டினப்பாலை வணிகர் சிறப்பினை பாடியுள்ளது.

வணிகர்களைத் தொல்காப்பியர் “வைசியன்” என்று குறிப்பிடுகின்றார். சங்கப் பாடல்களில் காணப்படும் வணிகர்களை குறிப்பிட்ட ஒரு சாதியினராகக்

கருதமுடியவில்லை. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் நிலங்களில் பொருள்களை உற்பத்தி செய்தவர்கள் அப்பொருள்களைத் தாமே எடுத்தச் சென்று விற்றனர். ஒரு நாட்டின் தொழில்களில் உழவுத்தொழிலும் வணிகமும் தலைசிறந்த ஒன்றாகவும் பொருளாதார மேம்பாட்டிற்கு வழிவகுப்பனவாகவும் அமைந்து காணப்படுகின்றன. அவ்வகையில் சங்க இலக்கியத்தில் இவ்விருத் தொழில்கள் பற்றிய குறிப்புகளும் காணப்படுகின்றறன. சங்க இலக்கியத்தில் காணப்படும் வாணிகத்தினை,

உள்நாட்டு வாணிகம், வெளிநாட்டு வாணிகம் பண்டமாற்று முறையில் அமைந்திருந்ததையும், பரதவர்கள் விளக்கு காட்டுதல் பற்றிய செய்திகள் நம் பண்பாட்டு வளர்ச்சிக்கு சிறந்த அடித்தளமாக அமைந்துள்ளதை காணமுடிகிறது.

செல்வ வளம் மிக்க வணிகர்களின் இல்லங்களில் வாழும் பல்வேறு அணிகலன்களை அணிந்த மகளிர் நிலா முற்றங்களிலிருந்து விழாவினைக் காணுதலும் காட்டப்பட்டுள்ளது.

செல்வம் நிறைந்த வணிகர்களை கூறியது போலவே வறுமை நிலையில் உள்ள வணிகர்களைப் பற்றியச் செய்தியையும் மதுரைக்காஞ்சி எடுத்துரைக்கிறது. பணியாரம், பூ, வெற்றிலைப்பாக்கு, சுண்ணாம்பு, பூமாலை மற்றும் பல்வேறு பண்டங்களையும் கைகளில் ஏந்தித் திரிந்து விற்பனை செய்பவர்களைப் பற்றியும் கூறுகிறது.

காதலர்கள் விரும்பி உண்ணும் பண்டங்களோடு வீடுகள் தோறும் ஏந்திச் சென்று அலைந்து திரிந்து பூவை விற்கும் வறுமையான முதுபெண்டிரின் வணிகமும் மதுரைக்காஞ்சியில் விளக்கப்பட்டுள்ளது.

மேலும் பா.இறையரசன் அவர்கள் கப்பல் கட்டுவதில் தமிழர்கள் சிறந்தவர்கள் என்பதை,

“மேலை நாடுகளுடன் தமிழர்கள் கொண்டிருந்த வணிகத் தொடர்பை சங்க இலக்கியங்கள் காட்டும். துறைமுகங்களில் கலங்கரை விளக்கம் அமைத்திருந்தனர். காற்றுத் திசை அறிந்து காலத்தைச் செலுத்தினர். மிதவை, புனை, பரிசில், தோணி, ஓடம் முதலிய சிறிய கலங்களும், திமில், படகு, அம்பி முதலிய சிறிது பெரிய கலங்களும், வங்கம், நாவாய், கலம், கப்பல் முதலிய பெரிய கலன்களும் கட்டும் திறன் மிகுந்தவர்கள் தமிழர்கள்” என்பதன் மூலம் உணரலாம்.

### 3.2.1. உள்நாட்டு வாணிகம்:

உள்நாட்டு வாணிகம் தரை வழியாக நடைபெற்றது. தமிழ்நாட்டின் கடலோரப் பகுதிகளில் இருந்த ஊர்களுக்கு தோணி, அம்பி, பஃறி என்று அழைக்கப்படும் படகுகள் மூலம் எடுத்துச் செல்லப்பட்டன. ஒரு நிலத்தில் விளைந்த பொருள்களை மற்றொரு நிலத்தில் கொடுத்து அங்குள்ளதைப் பெற்று வருதலே ஆகும். நிலத்தில் விளைந்த பொருட்களை ஏற்றிச் செல்ல மாட்டு வண்டிகளையும், கழுதைகளையும் பயன்படுத்தினர்.

உள்நாட்டு வணிகத்தில் நெல் முக்கியமான தானியமாக விளங்கியது. உப்பின் மதிப்பு நெல்லிற்கு ஈடாக இருந்தது. மருதநில மக்கள் நெல்லைக் கொடுத்து உமணர்களிடமிருந்து உப்பை வாங்கினர். உப்பு விலையின் அடிப்படையில் நெல்லின் விலை நிர்ணயிக்கப்பட்டது என்பதை நற்றிணையில்,

“உமணர் தந்த உப்பு நொடை நெல்”(நற்.254-6)

என்றும்,

"நம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து
பிறநாட்டு உப்பின் கொள்ள சாற்றி
நெடுநெறி ஒழுகை நிலவுமணல் நீந்தி
அவன் உறை முனிந்த ஒக்கவொரு புலம் பெயர்ந்து" (நற்.183:1-4)

என்ற அடிகள் மருத நிலத்திலுள்ள உப்பு வணிகர்கள் நம் நாட்டில் விளைந்த நெல்லை நெய்தல் நிலத்தில் கொடுத்து அங்குள்ள உப்பைப் பெற்று வண்டிகளில் ஏற்றி வந்த காட்சியை விளக்குகிறது. அகநானூற்றில்,

"நெல்லின் நேரே வெண்நெல் உப்பு எனச்
சேரி விலைமாறு கூறலின்" (அக.நா.140)

நெல்லுக்கு நிகராக உள்ள வெண்ணிற கல் உப்பினைச் சேரிப் பகுதியில் வணிகர்கள் விலை கூற விற்றதை இவ்வடிகள் உணர்த்துகிறது.

"குறிஞ்சி நிலப்பொருளான தேனும், கிழங்கும் மீனோடு பண்ட மாற்றாக ஏற்கப்பட்டன. வேடர்கள் மான் இறைச்சியையும் மதுவையும் கரும்பு அவலோடு மாற்றிக் கொண்டனர். இடைச்சியர் தயிரைக் கொடுத்து நெல்லை வாங்கிச் சென்றனர். பாணர் வாரல்மீன்களை வெண்ணெல்லுக்குப் பண்டமாற்றாகக் கொடுத்தனர். இன்று போலவே அன்று தெருக்களில் உணவுப் பொருள்களையும் காய்கறிகளையும் தலைச்சுமையாக சுமந்துக் கொண்டு வந்து கூவி விற்கும் முறை இருந்தது என இக்குறிப்புகளிலிருந்து அறியலாம்"

உற்பத்தி செய்யப்பட்ட இடங்களிலேயே சில பொருள்களை விற்றும் வாங்கியும் உள்ளனர். உப்பும், மீனும் கடற்கரையிலே விற்கப்பட்டன. தொலைவில் உள்ள இடங்களுக்கு கழுதைகள் வண்டிகள் மூலமாக விற்பனை செய்த இவர்கள் கோவேறு கழுதை மீது மலையில் விளைந்த மிளகை ஏற்றிச் சென்றுள்ளனர்.

பேரூர்களில் சந்தைகளும் அங்காடிகளும் இருந்தன. அவ்அங்காடிகளுக்கு பொருள் உற்பத்தியான இடங்களிலிருந்து வந்தன. மதுரை அங்காடிகளில் பல்வேறு பொருட்கள் விற்கப்பட்டன. மதுரைக் கடைத் தெருக்களில் அவ்வக் கடைகளில் விற்கப்பட்ட பொருள்களைக் காட்டுவதற்காகக் கொடிகள் பறக்க விடப்பட்டிருந்தன".

இவ்வாறு வணிகம் செய்யும் வணிகர்களுக்கு வீரர்கள் பாதுகாப்பாக இருந்துள்ளனர். கள்வர்களுக்கு அஞ்சி குழுக்களாகச் சென்றுள்ளனர் என்பதையும் உணரமுடிகிறது. இது அன்றிலிருந்து இன்று வரை மாறாத நிலையாக இருப்பதை உணரமுடிகிறது.

### 3.2.2. வெளிநாட்டு வாணிகம்:

சங்க காலத் தமிழக மக்கள் பிறநாடுகளோடு கடல்வழியாக வாணிகம் செய்து வந்தனர். தமிழ்நாட்டில் நெய்யப்பட்ட ஆடைகளும், சங்கும், சந்தனமும், பவளமும், முத்தும், மிளகும் கடல் கடந்த நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. மேலை நாடுகளோடு தமிழர்கள் நடத்திய கடல் வாணிகம் குறித்து மேலை நாட்டார்கள் எழுதி வைத்துள்ள குறிப்புகள் தமிழ் இலக்கியங்களில் உள்ள செய்திகளோடு வியக்கத்தகுந்த அளவில் ஒன்றுபடுகின்றன.

கி.பி.70 ஆம் ஆண்டில் எழுதப்பட்டதாகக் கருதப்படும் பெரிப்ளஸ் என்னும் நூலும் கி.பி.140 ஆம் ஆண்டில் எழுதப்பட்ட தாலமியின் நூலும் ஸ்டராபோ என்பார் எழுதிய நூலும் உரோம் நாட்டார் தமிழகத்தோடு நடத்திய கடல் வாணிகம் குறித்தும், தமிழ்நாட்டின் துறைமுகங்கள் குறித்தும் அரிய பல தகவல்களைக் கூறுகின்றன. அரிக்கமேடு, அழகன்குளம், கருவூர், பொருந்தல், காவரிப்பூம்பட்டிணம், மதுரை போன்ற இடங்களில் நடத்தப்பட்ட அகழாய்வுகளில் கண்டெடுக்கப்பட்ட உரோமானியர்களின் நாணயங்களை இறக்குமதிச் செய்யப்பட்ட மதுச்சாழத் துண்டுகளும் இவ்வாணிகத்தை உறுதிப்படுத்துகின்றன.(13)

தொழில் திறமைமிக்க யவணர்கள் கப்பலில் பொன்னைக் கொண்டு வந்து தமிழ்நாட்டில் விளைந்த மிளகை வாங்கிச் சென்றனர் என்ற செய்தி அகநானூற்றுப் பாடலொன்றில் காணப்படுகிறது.

“யவணர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளகெழு முசிறி ஆர்ப்புஎழ வளைஇ”(அக.நா.149:9-11)

ஏற்றுமதிக்காகக் கொண்டு வரப்பட்ட பண்டங்கள் யாவும் பண்டக சாலைகளில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்தன. ஏற்றுமதிப் பொருள்களின் மீது சுங்கவரி விதிக்கப்பட்டது. அவ்வரி வசூலித்த அரசு அலுவலர்கள் துறைமுகப் பகுதியில் இரவும் பகலும் பணியாற்றிக் கொண்டிருந்தனர்.

பெருங்கடலில் செல்லும் கப்பல் ‘நாவாய்’ எனப்பட்டது. வெளிநாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்யும் கப்பல்கள் ‘வங்கம்’ எனப்பட்டது. சங்க இலக்கியங்களில் வங்கம் பற்றியக் குறிப்புகள் பல உள்ளன.

“உலகுகிளர்ந் தன்ன உருக்கெழு வங்கம்”(அக.நா.255:1)

பொருள் ஈட்டும் பொருட்டு தலைவனானவன் தலைவியை விட்டுப் பிரிந்து உலகமே கிளர்ந்து எழுந்தாற் போன்ற வங்கத்தில் சென்றான்.

தலைவனைப் பிரிந்த தலைவி மெலிந்திருப்பதைக் கண்ட தோழி, காட்டின் கண் சென்ற தலைவன் இன்னும் வரவில்லையே என்று நீ வருந்தாதே, கங்கை ஆற்றின் கண் ஓடுகின்ற மரக்கலத்தில் ஏறி எங்காவது சென்றிருப்பார் எனக் கருதுகின்றோம். அவர் வேறு எங்கும் செல்லமாட்டார், வந்துவிடுவார் நீ வருந்தாதே என்றாள்,

“கங்கை வங்கம் போகுவர் கொல்லோ”(நற்.189:5)

பொருள் தேடப் பிரிந்துச் சென்ற தலைவன் மீண்டும் வந்தவுடன் அது குறித்து தோழியிடம் கூறுகிறாள்.

“கோடு புலம் கொட்ப கலம் எழுந்து முழங்க
பாடு இமிழ் பனித்துறை ஒடுகலம் உகைக்கும்” (ஐங். 192:1-2)

தோழியே, சங்குகள் கடற்கரைக்குள் வந்து உலவ, கடலில் அலைகள் எழுந்து ஆரவாரிக்க ஒலி மிகுந்த குளிர்ச்சியான துறையின் கண் கலங்கள் ஓடுமாறு செலுத்தும் துறை கெழு நாடனாகிய தலைவன் பிரிந்த பொழுதே நெகிழ்ந்து ஓடிய என் வளையல்கள் இப்பொழுது மீண்டும் செறிவுற்றன என்று கூறினாள். இதையெல்லாம் பார்க்கும் பொழுது மரக்கலம் என்னும் சொல்லோடு கப்பலைக் குறிக்கும் ‘கலம்’ என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

மேற்கூறிய செய்திகளின் மூலம் சங்க காலத் தமிழ் மக்களின் வாணிகச் சிறப்பை அறிய முடிகிறது. முப்புறமும் கடலால் சூழப்பட்ட நாட்டில் வாழ்ந்த தமிழ் மக்கள் சிறந்த கடலோடிகளாக இருந்ததில் வியப்பில்லை. வாணிகம் செய்வதற்காகக் கடல்கடந்து செல்வோர் தம் மனைவியரை அழைத்துச் செல்வதில்லை என்று தொல்காப்பியர் கூறி இருப்பதிலிருந்து கடல் வாணிகத்தில் ஆண்கள் மட்டுமே ஈடுபட்டனர் என்பதை அறியமுடிகிறது.

கோடைக் காலத்தில் தமிழக எல்லைகளைக் கடந்தும் பொருள் தேடச் சென்றவர்கள் பற்றிய பல குறிப்புகள் உள்ளன.

மு.வ.அவர்கள் “இவர்களை வணிகர் என்றே கருதுகிறார். இங்ஙனம் சென்றோர் இன்றைய மைசூர்ப் பகுதிக்குச் சென்று பொன்னை கொணர்ந்திருக்க இடமுண்டு என்று கா.சிவத்தம்பி கூறியுள்ளார். வெளிநாட்டு வாணிகத்தால் பொருளீட்டிய வணிகர்கள் புகார், காஞ்சி முதலான நகரங்களில் வாழ்ந்தனர். கூல

வாணிகர், பொன் வாணிகர், பண்ட வாணிகர், அறுவை வாணிகர் முதலான பல வணிகர்கள் வாழ்ந்துள்ளனர்.

“எகிப்து, பாலஸ்தீனம், மெசபடோமியா பாபிலோனியா ஆகிய நாடுகளுடன் பண்டையத் தமிழர்கள் வாணிபத் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தனர். தமிழகத்துப் பண்டங்களான ஏலம், இலவங்கம், இஞ்சி, மிளகு ஆகியவற்றுக்கு மேற்காசிய நாடுகளில் பண்டைய நாள்களிலேயே வேட்கையுண்டு. மேலைநாடுகளுடன் தமிழ் மக்கள் மிகவும் விரிவான கடல் வாணிகத்தில் ஈடுபட்டிருந்தனர். அயல்நாட்டு வாணிகம் கி.மு.7ஆம் நூற்றாண்டிலிருந்து தான் தொடர்ந்து நடைபெற்று வந்தது. தமிழகத்து ஏற்றுமதிச் சரக்குகளை அராபியரும் பின்ஜியரும், எகிப்தியரும் தத்தம் மரக்கலங்களை ஏற்றிக்கொண்டுச் சென்றனர்”[(14)], என்று கே.கே. பிள்ளை அவர்கள் குறிப்பிடும் செய்தியானது பழந்தமிழரின் அயல்நாட்டு வாணிகத்தை எடுத்துரைக்கிறது.

**கொற்கைத் துறைமுகம்:**

தென்பாண்டி நாட்டிலுள்ள புகழ் வாய்ந்த கொற்கை பழைய துறைமுகப் பட்டிணமாகும். தமிழகம் மேலை நாடுகளுடன் வணிகத் தொடர்பு வைத்துப் பெற்ற பெயரும் பொருட்களில் மிகப்பெரும் பகுதி முத்தினால் கிடைத்தது எனலாம். கொற்கை முத்துக்களால் புகழ்பெற்று விளங்கியதைச் சங்க இலக்கியங்கள் எடுத்து இயம்புகின்றன. இத்துறைமுகம் பற்றி 1800 ஆம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் என்ற நூலில், “பரதவ நாட்டிலுள்ள முக்கிய நகரமான கொற்கை முத்துக் குளிப்புத் தொழிலுக்கு உரிய ஒரு இடமாகும். இந்நகர மக்களில் பெரும்பாலோர் முத்துக்குளிப்போராகவும் சங்கறுப் போராகவுமே இருந்தனர். முத்துக்குளித்தல் பாண்டிய நாட்டின் அரசியல் வருவாயில் ஒரு பெரும் பகுதியாக இருந்தது. கடற்கரையில் இருந்த இந்நகரம் இப்பொழுது ஐந்து கல் தொலைவில் உள்நாட்டில் உள்ளது. கடல் கொற்கையிலிருந்து பின்வாங்கி பின்பு கடற்கரையில் காயல் என்ற

ஒரு புதிய வாணிகக் களம் உண்டாயிற்று. இதுவே பன்னிரெண்டாம் நூற்றாண்டில் மார்க்கோபோலோ வருகையின்போது வளமான கடல் துறைமுகமாய் இருந்தன. சில நாட்களில் கயலும் கடலிலிருந்து அதிக தொலைவாகி விட்டது''[(15)] என்று வி.கனகசபை அவர்கள் குறிப்பிடுகின்றார். பிற நாட்டு அறிஞர்கள் கொற்கையை ''கோரகே'' என்று குறிப்பிட்டுள்ளனர்.

''முத்துப்படு பரப்பின் கொற்றை முன்றுறை''(நற்.23:5)

என்னும் பாடல் வரி பண்டைக் காலத்தில் கொற்கைத் தலைநகரம் முழுவதும் முத்துகள் விளைந்து சிறப்புற்றிருந்தமை தெளிவாகிறது.

### 3.3. தொழிலும் தொழிற்பிரிவுகளும்:

பழங்காலத்தில் நிலவாரியாகத் தொழில்கள் நடந்திருப்பினும் வேறு சில தொழில்களையும் மக்கள் செய்து வந்திருந்தமை சங்கப் பாடல்களில் காணமுடிகிறது.

#### 3.3.1. தச்சர்:

மரத்தினை அறுத்து அதன் மூலம் பல பொருள்களைச் செய்வோர் தச்சர் என அழைக்கப்பட்டனர்.உழுவதற்குத் தேவையான கலப்பை இவர்களால் செய்யப்பட்டது. பண்டங்களை ஏற்றிக்கொண்டு அதில் பயணம் செய்வதற்கு தேவையான வண்டிகளைத் தச்சர்கள் செய்தனர்.

தச்சனால் செய்யப்பட்ட சிறிய தேரினைக் குதிரைகள் பூட்டியபடி இழுத்துச் செல்லுமாம். குதிரைகள் கட்டி இழுத்துச் செல்லாத நிலையில் இருக்கும் தேரின் மீது ஏறி சிறுவர்கள் விளையாடுவர் எனக் குறுந்தொகை குறிப்பிடுவதன் மூலம் தச்சுத் தொழில் செய்யக் கூடிய தச்சர் என்ற பிரிவினர் வாழ்ந்தமை புலனாகிறது.

நுண்ணிய வேலைப்பாடு அமைந்த தச்சுத் தொழில் செய்வோர் அதற்கான நுணக்க நூல்களைக் கற்றறிந்து செய்துள்ளனர்.

### 3.3.2. கொல்லர்:

கொல்லர்கள் இரும்புக் கொல்லர், பொற் கொல்லர் என இருபிரிவுகளில் இருந்துள்ளனர். ஒன்றினை அழித்து அதனைக் கொண்டு பொருள் செய்வதினால் கொல்லுதல் என வந்திருந்து பிறகு கொல்லன் கொல்லர் என வந்திருக்கலாம்.

### இரும்புக்கொல்லர்:

இரும்பினைக் கொண்டு தீயினில் வடித்து பொருளாகச் செய்பவர் கொல்லர். கொல்லன் உலை, கொல்லன் பட்டறை என்றும் இவர்கள் தொழில் செய்யும் இடத்தைக் கூறுவதுண்டு. சங்ககால மக்கள் இரும்பினைக் கொண்டு கருவிகள் செய்து பயன்படுத்தியுள்ளமை புலனாகிறது. இரும்பினை உருக்குவதற்கு ‘‘துருத்தி’’யைப் பயன்படுத்தி உள்ளனர்.

### பொற்கொல்லர்:

பொன் அணிகலன்களைச் செய்பவர்கள் பொற்கொல்லர் என்றழைக்கப்பட்டனர். மனிதர்களுக்கு அழகூட்டுவது அணிகலன்கள். அத்தகைய அணிகலன்களை பொன்னால் பலவிதமாகச் செய்பவர்கள் பொன்னினைத் தீயில் உருக்கி பலவிதமான பொருட்களாக வடிவங்களாக செய்து தருபவர்கள். பொன்னின் தரத்தைக் கல்லில் உரசி அறிந்தனர் அக்கல் ‘கட்டளைக்கல்’ எனப்பட்டது.

‘‘பொன் செய் கொல்லனின் இனிய தெளிர்ப்ப
மெய்ம்மணி ஆர்க்கும் இழை கிளர் நெடுந்தேர்”(கலித்.130-1-4)

கோங்க மரத்தின் கிளைகளில் இருந்து உதிர்ந்த பூக்கள் அவ்விடத்து இருந்த இலவம் பூக்களின் மீது உதிர்ந்து கிடக்கும். அவை,

‘‘பவளச் செப்பில் பொன் சொரிந்தன்ன’’(அகநா.25-11)

பொன்னை விற்பவர்கள் பவளச் செப்பிலே பொன்னைச் சேர்த்து வைத்திருப்பர் என்று அகநானூறு கூறுகின்றது.

‘‘பொன்னுரை கட்டளை கடுப்ப காண்வர்’’ (அகநா.340-15)

பொற்கொல்லன் பொன்னினை உண்மையானது தானா என்று அறிவதற்கு தான் வைத்திருக்கும் ஓர் கல்லில் உரைத்துப் பார்ப்பது வழக்கம். உரைகல்லில் உரைத்து அதன் நிறத்தை வைத்து தங்கத்தின் தரத்தை அறிவர். உரைத்து உரைத்துப் பார்ப்பதால் அந்தக் கல் பொன்னிறமாகக் காட்சி தரும் என்ற செய்தியை இப்பாடல் தருவதாக அமைகிறது.

### 3.3.3. குயவர்:

மண்ணினைக் கொண்டு பொருள் செய்வோனைக் குயவர் என்று அழைப்பர். குயவர் ‘‘கலம் செய் மாக்கள்’’ எனப்பட்டனர். மட்கலம் சுடும் சூளையின் புகைக்கு வெள்ளிய மேகங்கள் உவமையாக கூறப்படுவதுண்டு. இம்மக்களின் தொழில் முழுக்க முழுக்க மண்ணை நம்பியே இருந்தது.

‘‘புதுக் கலத்தன்ன கனிய ஆலம்’’ (அகநா.382:1-2)

ஆலம் பழத்தைப் போன்று உருண்டை வடிவாக பார்த்துப் பார்த்து செய்த குயவன் எனக் கூறுவதால் இத்தொழிலைச் செய்யும் மக்கள் இருந்துள்ளமை தெளிவாகிறது.

மண்ணால் சுடப்பட்ட தாழில் என்னும் பானையினில் தயிர் ஊற்றிக் கடையும் போது பானை உடைந்து விட்ட செய்தியை இப்பாடல் உணர்ந்துகிறது.

‘‘யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்
சாறு என நுவலும் முதுவாய்க் குயவ’’(நற்.200: 2-4)

ஊரில் நடக்கும் விழாவிற்கு அனைவரையும் வருக வருக என வரவேற்பவர்கள் குயவர்கள். அரும்புகள் கட்டிய கதிர் போன்ற ஒளி பொருந்திய பூங்கொத்தினைக் கொண்ட நொச்சி மாலையைச் சூடி ஆறு கிடந்தாற் போன்ற அகன்ற தெருவின் கண் விழா நடப்பதற்கு குயவர்கள் வரவேற்பார்கள்.

‘‘மணிக் குரல் நொச்சித் தெரியல் சூடி
பலிக்கள் ஆர் கைப்பார் முது குயவன்’’ (நற்.93:1-2)

குயவர்கள் மண் வேலை செய்யும் முன்னர் பலியிடுதலை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள். பழங்காலத்தில் மண்ணைக் கொண்டு குயவர்கள் தொழில் செய்தமைக்கு மேற்கண்ட பாடல்கள் சான்றாக அமைகின்றன.

பழங்கால மக்கள் தண்ணீர் ஊற்றி வைக்கவும், உணவு சமைக்கவும் உணவுக்கான பொருட்களைச் சேமித்து வைப்பதற்கும் உணவு உண்பதற்கும் மண்பாண்டங்களைப் பயன்படுத்தினர்.

‘‘சுடுமண் தசும்பின் மத்தம் தின்ற
பிறவா வெண்ணெய் உருப்பு இடந்தன்ன’’ (நற்.84: 607)

குயவர்கள் செய்த மண் பானையில் தயிர் வைத்து அதில் மத்திட்டு கடைந்தமையை நற்றிணைப் பாடல் உணர்த்துகிறது.

குயவர்கள் ஊரில் நிகழும் விழா நிகழ்ச்சிகளை மக்களுக்கு அறிவித்துச் சொல்லும் பொறுப்புடையவர்களாக இருந்துள்ளமை தெரியவருகிறது.

தமிழர்கள் அன்று முதல் இன்று வரை மட்கலங்களைப் பயன்படுத்தி உள்ளமையை உணரமுடிகிறது.

### 3.3.4. ஆடை வெளுப்போர்:

ஆடைகளை வெளுக்கக் கூடிய சலவைத் தொழிலாளர்களை இன்றைக்கு வண்ணான் வண்ணாத்தியர் என்று அழைக்கின்றோம். பழங்காலத்தில் இவர்களை புலத்தியர், ஆடை வெளுப்பவர் என்று அழைத்துள்ளனர். துணிகளைத் துவைத்தல் இவர்களுடையத் தொழிலாகக் கருதப்படுகிறது.

‘‘பசைவிரல் புலைத்தி நெடிது யிரைந்து ஊட்டிய
பூந்துகில் இமைக்கும் பொலன் காழ் அல்குல்’’(குறுந்-6:3-4)

துணிகளைத் துவைப்பதற்காக உவர் மண்ணை சுமந்ததால் தேய்ந்து போன தலையை உடையவள் புலத்தி என்றும் அவள் கூர்மையான நகத்தினையும், நீண்ட விரல்களையும் கொண்டு துணியைக் கஞ்சிப் போட்டு நீண்ட நேரம் ஊற வைப்பாள். அதன் பிறகு துவைக்கப்பட்ட அந்த ஆடையானது உடுத்துபவருக்கு அழகினை உடையதாக அமையும். பழங்காலத்தில் துணிகளை வெளுப்பதற்கு சோப்பு கிடையாது. அதனால் அழுக்கைப் போக்குவதற்கு உவர் மண்ணை பயன்படுத்தி இருந்தமையையும், ஆடைகள் விரைப்பாக இருப்பதற்கு கஞ்சிப் போட்டு வெளுத்து துவைக்கும் வழக்கமும் இருந்துள்ளமை தெரிய வருகிறது.

‘‘ஊழுறு விளைநெற்று உதிர, காழியர்
கவ்வைப் பரப்பின் வெவ் உவர்ப்பு ஒழிய’’(அகநா.89: 7-8)

வண்ணார்கள் எடுத்த உவர் மண் பற்றிய செய்தியை இப்பாடல் வரி உணர்த்துகிறது.

‘‘வறன்இல் புலத்தி எல்லித் தோய்த்த’’(நற்.90-3)

புலத்தி பற்றியும்

‘‘ஆடை கொண்டு ஒலிக்கும் நின் புலைத்தி காட்டு என்றாளோ’’(கலி:72-14)

ஊரில் உள்ள மக்களின் ஆடையை வெளுக்கும் வண்ணாத்தியர்கள்

‘‘நலத்தகைப் புலத்தி பசைதோய்த்து எடுத்துத்
தலைப்புடைப் போக்கிற் தண் கயத்து இட்ட’’(குறுந்-330:1-2)

ஆடையை வெளுப்பவர்கள் கஞ்சியில் தோய்த்து நீரில் அலசி எடுத்தல் பற்றி குறுந்தொகைப் பாடல் வரி கூறுவதன் மூலம் ஆடைகளை வெளுக்கக் கூடிய தொழிலைச் செய்யும் மக்கள் இருந்துள்ளமை புலனாகிறது.

**ஆடைகளுக்கு நிறமூட்டல்:**

நெசவாளர்கள் தாங்கள் நெய்த ஆடைகளுக்கு வண்ணம் சேர்த்தல் நிறமூட்டல் எனப்படும்.

‘‘தமிழகத்தில் அரிக்கமேடு என்ற இடத்தில் நடந்த அகழாய்வின் மூலம் மஸ்லின் துணிகளுக்குச் சாயம் தோய்க்கப்பட்ட செங்கற்களால் ஆன இரண்டு தொட்டிகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றின் காலம் கி.பி.முதல் நூற்றாண்டு எனக் கணக்கிடப்பட்டுள்ளது’’[16]

‘‘நிறைபெயல் அறியாக் குறைத்தூண் அல்லில்
துவர்செய் ஆடையைச் செந்தொடை மறவர்’’(நற்.33:5-6)

மழை பொழிவதை அறியாத கள்வர்கள் பழுப்பு நிற வண்ணம் கொண்ட ஆடை அணிந்திருந்தமையை இப்பாடல் உணர்த்துகிறது.

‘‘இணைபட நிவந்த நீலமென் சேர்க்கையுள்’’(கலித்.72-1)

இரண்டாகச் சேர்த்துச் செய்த மெல்லிய படுக்கை தலையணை இவற்றில் நீல நிறமுடைய துண்டு அணியப்பட்டிருந்ததன் மூலம் துணிகளுக்கு நிறமூட்டியிருந்தமையை அறிய முடிகிறது.

‘‘பண்டைக் காலத்தில் வண்ணம் தயாரிக்கக் காடுகளில் முளைத்திருக்கும் செடிகளின் தழைகளும், மரப்பட்டைகளும் அவுரிச்செடிகளும் பயன்படுத்தப்பட்டிருக்கலாம். அவுரிச் செடிகள் நம் நாட்டிலிருந்து மேலை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன’’[17] என்ற செய்தியை ஆய்வுக்கொத்தின் வழி அறிய முடிகிறது.

### 3.3.5. சாணைப் பிடிப்போர்:

கூர்மை மழுங்கிப் போன கருவிகளை மீண்டும் கூர்மைப்படுத்தித் தருவோர் சாணைப் பிடிப்போர் என அழைக்கப்பட்டனர். தோல் என்னும் சிறுதொழில் செய்பவன் சானைக் கல்லில் சிறிது அரக்கினைக் சேர்த்து அதனோடு தேய்த்தல், மழுங்கிப் போன கருவிகள் கூர்மை பெறும் என்ற செய்தியை அறிய முடிகிறது.

### 3.3.6. பூ விற்றல்:

சங்க இலக்கியங்களில் பூவைப் பறித்து தெருவெங்கும் விற்ற செய்தியினைக் காண முடிகிறது. வெண்மையான பூக்களை ஆடுகளும், ஆட்டுக்குட்டிகளும் தின்றது போக மீதியுள்ள பூக்களைப் பறித்து தன்னுடைய கூடையில் போட்டுக் கொண்டு, பாதிரியின் வெண்மையான இதழுடைய புதிய மலர்களை வண்டுகள் மொய்க்கும்படி சுமந்து தெருத்தோறும் விலை கூறிச் செல்வாள் பூவிற்கும் பெண்.

‘‘துகலினை அன்ன, துய்த் தலைப் பாதிரி
வால் இதழ் அலரி வண்டு பட ஏந்தி
புதுமலர் தெருவுதொறு நுவலும் நெஞ்சே
நொது மலாட்டிக்கு நோம் என்’’ (நற்.118:8-11)

பூவிற்கும் பெண் பற்றிய செய்தியை இப்பாடல் கூறுகிறது.

**கம்மியர்:**

அழகிய அணிகலன்களைச் செய்பவர்கள் கம்மியர் என அழைக்கப்பட்டனர். கைவினையில் வல்ல கம்மியர்கள் பல வண்ணக் கற்களைக் கொண்டு செய்த பொன்னாலாகிய சுரிதகம் என்னும் அணிகலனைத் தலைவி அணிந்தாள் செம்பினால் செய்த பானைப் பற்றி

''மண் திணி ஞாலம் விளங்க, கம்மியர்
செம்பு சொரி பானையின் மின்னி'' (நற்.153:2-3)

அறுத்துச் செய்யப்பட்ட வளையல்கள் பற்றிய செய்திகளைப் பற்றி தெரிந்து கொள்ள முடிகிறது.

### 3.3.7. கிணறு வெட்டுதல்:

கிணறு வெட்டி தண்ணீரைத் தேக்கி அதனைக் குடிக்கவும் மற்றும் வயல்களுக்கும் பயன்படுத்தியுள்ளனர். வலிமை பொருந்திய கையினை உடைய ஆடவர்கள் தோளிலே சோற்று முடிச்சு தொங்க கிணறு வெட்டும் தொழிலுக்குச் செல்வார்கள். தீப்பொறி பறக்க பாறைகளை வெட்டி மிக்க உவரையுடைய கிணற்றைத் தோண்டுவர்.

"கடற்று அடை மருங்கின் கணிச்சியின் குழித்த
உடைக்கண் நீடுஅமை ஊறல் உண்ட
பாடுஇள் தெண்மணி, பயம் கெழு பெருநகர"(அகநா.399:6-8)

குந்தாழியால் குழிதோண்டும் செய்தியை இப்பாடல் உணர்த்துகிறது.

### 3.3.8. பொம்மை செய்தல்:

குழந்தைகள் வைத்து விளையாடும் பொருட்களை பொம்மைகள் என்பர், விளையாட்டுப் பொருட்கள் குழந்தைகளுக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கும். இப்பொருட்கள் குழந்தைகளின் வயதுக்கேற்ப மாறுபடுகின்றன. குழந்தைகள்

வளர்ந்ததும் மண்ணால் வீடுகள் அமைத்தும் தெரிந்த பொருட்களின் வடிவங்களை உருவாக்கியும் மண்ணால் பொம்மை செய்தும் விளையாடினர்.

"நேரிழை மகளிர் வாமணல் இழைத்த
வண்டற் பாவை" (நற்.191: 2-3)

பெண்கள் வண்டல் மண்ணால் பாவை செய்து விளையாடியமை இப்பாடலால் தெரியவருகிறது. இவை மட்டுமின்றி எண்ணெய் ஆட்டக்கூடிய செக்கர்களும் கயிற்றின் மேல் நடக்கும் கழைக்கூத்தாடிகளும் இருந்துள்ளமையை நற்றிணையில் காண முடிகிறது.

### 3.3.9. நெசவுத் தொழில்:

மனிதனின் இன்றியமையாத் தேவைகளுள் ஒன்று ஆடை, உடலை மறைப்பதற்கு ஆடையினை அணிந்து மனிதன் மானத்துடன் வாழ்வது சிறப்பியல்பாகும். நாகரீகம் இல்லாக் காலத்தில் இலை, தழைகள், மரப்பட்டைகள் முதலியவற்றை ஆடையாக அணிந்துக்கொண்டனர். நாளடைவில் அந்நிலை மாறி அறிவுத்திறத்தால் மனிதன் பருத்திப் பஞ்சினை நூலாக நூற்று ஆடைய செய்து அணியத் தொடங்கினர். இவ்வாறு ஆடை நெய்வோர் நெசவாளர் என அழைக்கப்பட்டனர். அத்தொழில் நெசவுத்தொழில் என போற்றப்பட்டது.

"இது வீட்டுத் தொழில்களில் முக்கியமானது பண்டைத் தொழில்களுள் ஒன்றாகும். விவசாயத்திற்கு அடுத்தது. மக்கள் நாகரீகம் அடையத் தொடங்கியதும் கையாண்ட முதல் கைத்தொழில்"[(18)] எனக் குறிப்பிடுகிறது கலைக்களஞ்சியம்".

"வழிதுளி பொழிந்த இன்குரல் எழிலி
எ∴குறு பஞ்சிற் றாகி" (நற்.247:3-4)

நெசவுத்தொழிலுக்கு மிக முக்கியமான மூலப்பொருள் பருத்தியாகும். "பருத்தியே அன்றி இலவமரம், கோங்கு மரம் முதலிய மரங்களிலிருந்து வேண்டியப

ஞ்சினை எடுத்து நெசவுத்தொழிலுக்குப் பயன்படுத்தினர்”[19] என்பதை அ.அப்துல் மஜீத் எழுதிய ஆய்வுக்கொத்து விளக்கி உள்ளது.

பருத்திப் பஞ்சை அதன் கொட்டையிலிருந்து பிரித்தெடுக்க வில்லினைப் பயன்படுத்தியமை இப்பாடல் வழி தெரிய வருகிறது.

“ஆனில் பெண்டில் தானில் செய்த
நுணங்கி நுண் பனுவல்” (நற்.103:1-2)

பெண்கள் பருத்திப் பஞ்சினை செப்பம் செய்து நுண்ணிய நூலாக நூற்பதில் கைதேர்ந்தவர்களாக விளங்கினர். இப்பெண்களைப் பருத்திப் பெண்டிர் என அழைத்தனர்.

“பருத்திப் பெண்டிர் சிறுதீ விளக்கத்து” (அக.நா.320:5)

பெண்கள் நூல் நூற்று இழைத்து தந்த நூலைப் பாவாகத் தறியில் விரித்து ஆடையாக நெய்துக் கொடுக்கின்ற கடமை ஆடவர்களின் தொழிலாய் இருந்தமை தெள்ளத் தெளிவாகிறது.

“பன்பூங் கலிங்கம்” (நற்.64:2)

### 3.3.10. பாய் பின்னல்:

அன்றாடத் தேவைகளுக்காக பண்டைத் தமிழர்கள் பனை, தென்னை, மர ஓலைகளைக் கொண்டு தேவைக்கான பொருட்களைச் செய்து பயன்படுத்தினர். ஓரிடத்தில் இருந்து வேறொரு இடத்திற்கு பொருட்களை எடுத்துச் செல்லக் கூடிய வகையில் கூடை வகைகள் பாய்கள், பனை ஓலைகள் முதலியவற்றை கைகளால் புனைந்தனர்.

“பறிபுறத்து இட்ட பால்நொடை இடையன்”(நற்.142:4)

பனை ஓலையால் பின்னப்பட்ட பாயினை இடையன், தன் முதுகில் கட்டிக் கொண்டு சென்ற செய்தியை இப்பாடல் உணர்த்துகிறது.

**தொகுப்புரை:**

மனிதன் வறுமையின்றி வாழ ஆதாரமாக அமைவது தொழில் நலனே. தொழில் வளமே ஒரு நாட்டின் உயர்வுக்குக் காரணமாக அமைவது. மனிதன் தனக்கு வேண்டிய உணவினை எப்பொழுது அவனே தேடி உண்ணத் தலைப்பட்டானோ அன்றே தொழில் என்பது தொடக்கம் பெற ஆரம்பித்து விட்டது. நம் முன்னோர்கள் பெரும் செல்வவளம் உடையவராக இருப்பினும் அச்செல்வத்தினை முதலீடாகக் கொண்டு ஏதேனும் ஒரு தொழிலைச் செய்து பொருளீட்டினர். ஆண்மகனுக்கு அழகாக மதிப்புடைய செயலாகக் கருதப்பட்டது தொழில் என்பதை உணரமுடிகிறது.

எந்த ஒரு இனமும் தோன்றிய போதே பண்பாட்டோடும் நாகரீகத்தோடும் தோன்றியிருக்க முடியாது. பல்வேறு இன்னல்களையும் பேராட்டங்களையும் சந்தித்த பின்னரே சிறந்த நிலையினைப் பெற்றிருக்கலாம். மக்கள் ஓரிடத்தில் தங்கி வாழத் தலைப்பட்ட சமுதாயமாக மாறியதைத்தான் திணைப் பாகுபாடுகளாக பகுத்துக் கூறினர் பண்டைத் தமிழர்கள்.

மலையும், மலை சார்ந்த குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் திணை விதைத்தல், காவல் காத்தல், தேன் எடுத்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களைச் செய்து சிறப்புற்றிருந்தமை விளக்கப்பட்டுள்ளன.

காடும் காடு சார்ந்த பகுதியில் வாழ்ந்த முல்லை நில மக்கள் ஆநிரை மேய்த்தல், ஆநிரை மூலம் பெறப்படும் பால், தயிர், நெய், வெண்ணெய் போன்றவற்றை விற்று அதன் மூலம் கிடைக்கும் வருவாய் மூலம் வாழ்க்கை வாழ்ந்தமையை உணரமுடிகிறது.

வயலும், வயல் சார்ந்த பகுதியான மருத நிலத்தில் நாட்டினுடைய வளர்ச்சிக்கு அடிப்படையாக அமைந்த உழவுத்தொழில் மிக முக்கியமான தொழிலாகும். உழவு செய்யும் முறை, எருவிடுதல், நீர்பாய்ச்சல், அறுவடைச் செய்தல் ஆகியன பற்றியச் செய்திகள் சங்கப்பாடல்கள் வழி அறிய முடிகிறது.

கடலும், கடல் சார்ந்த பகுதியான நெய்தல் நிலத்தில் வாழும் மக்கள் மீன்பிடித்தல், அவற்றை விற்றல், உப்பு விளைவித்தல், உப்பை விற்றல் ஆகிய தொழில்களைச் செய்து பொருளீட்டி வந்தமை புலனாகிறது.

மணலும், மணல் சார்ந்த இடமான பாலை நிலத்தில் வாழும் மக்கள் இச்சுரத்தின் வழியாகச் செல்வோரை அச்சுறுத்தி அவர்கள் கொண்டு செல்லக்கூடிய பொருட்களைக் கவர்ந்து அவர்களை கொலை செய்யும் கொடுந்தொழில் செய்துள்ளமை பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

மக்கள் தங்கள் நிலத்தில் விளைந்த பொருட்களை வேற்று நிலத்தில் வாழக்கூடிய மக்களிடம் கொடுத்து விட்டு அதற்கு ஈடாக அங்கு உற்பத்தியாகும் பொருட்களை தங்கள் நிலத்திற்கு கொண்டு பயன்படுத்திய பண்டமாற்று முறை பழந்தமிழர்களிடம் இருந்துள்ளமை உணர முடிகிறது. பண்டமாற்று முறையில் வாணிகம் நடைபெற்றது. வாணிகம் உள்நாட்டு வாணிகம், வெளிநாட்டு வாணிகம் என்ற நிலையில் நடைபெற்றுள்ளமை சங்கப் பாடல்களின் வழி புலனாகிறது.

திணை அடிப்படையில் பல தொழில்களை மக்கள் செய்திருப்பினும் வேறு சில தொழில்களான தச்சர், கொல்லர், குயவர், ஆடை வெளுப்போர், சாணைப்பிடிப்போர், பூ விற்போர், கம்மியர், கிணறு வெட்டுவோர், நெசவுத்தொழில் செய்வோர், பாய் பின்னுவோர் பற்றிய செய்திகள் சங்கப்பாடல்களில் காணக்கிடைப்பதன் மூலம் தொழில் நிலையில் அவர்களின் பண்பாட்டுச் சிந்தனைகளை அறியமுடிகிறது.

**சான்றெண் விளக்கம்:**


1. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி-8) தமிழ் வளர்ச்சிக் கழகம், ப.43
2. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம், ப.4
3. என்.ஸ்ரீதரன், இந்தியச் சமுதாயம், ப.1
4. பா.இறையரசன், தமிழர் நாகரீக வரலாறு, ப.192
5. தொல்காப்பியர், பொருள், அகத்.நூ.18
6. மேலது நூ.5
7. மேலது நூ.21
8. திருவள்ளுவர், திருக்குறள்.1031
9. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரீகமும் பண்பாடும், ப.54
10. அபிதான சிந்தாமணி
11. திருவள்ளுவர், திருக்குறள்.1038
12. அபிதான சிந்தாமணி, ப.365
13. டாக்டர். கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், ப.54
14. மேலது ப.50
15. பி.கனகசபை, 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், ப.68
16. விசி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப.60
17. அ.அப்துல்மஜீத், ஆய்வுக்கொத்து, ப.44
18. கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப.215
19. அ.அப்துல்மஜீத், ஆய்வுக்கொத்து, ப.140

# இயல் - 4



## கலைகள் வெளிப்படுத்தும் நிலையில் பண்பாட்டுச் சிந்தனைகள்

# இயல் -4

## கலைகள் வெளிப்படுத்தும் பண்பாட்டுச் சிந்தனைகள்

தொன்மைச் சிறப்பு மிக்க நம் தமிழினமானது தனக்கே உரிய சிறப்பான கலை மரபுகளைப் போற்றி வளர்த்துள்ளது. கலை என்பது மனிதனால் போற்றி உருவாக்கப்பட்டது. தான் படித்து அறிந்த அறிவாலோ கண்களால் கண்ட காட்சியினைக் கொண்டோ அல்லது உள்ளத்தில் ஏற்படும் உணர்வினாலோ மனிதனால் உருவாக்கப்படுவது தான் கலை. இக்கலையினை அழகின் அம்சம் என்பர். அழகு நிறைந்துள்ள இடம் எல்லாம் கலையம்சம் நிறைந்து காணப்படும். எனவே தான் கலைகளை அழகுக்கலைகள் என்றனர். மனிதன் காட்டில் வாழ்ந்த காலத்திலேயே கலைப்பண்பாடு தொடங்கிவிட்டது எனலாம். அதனால் தான் அவன் இலை தழைகளை ஆடையாக உடுத்திக் கொண்டான். பின் தனது பொழுது போக்கிற்காகவும் விளையாட்டிற்காகவும் வேலைச்சுமை தன்னை துன்பப்படுத்தாது இருப்பதற்காகவும் பாடலைப் பாடினான். பாடலோடு கைகளைத் தட்டி ஒலி எழுப்பி இசையை உண்டாக்கிப்பின் தான் மட்டுமின்றி பிறரும் ஆடுமாறு ஆடல்கலைகளைத் தோற்றுவித்தான். குறிப்புகளைத் தெரிவிக்க ஓவியத்தையும் தான் வாழும் வீட்டினை அழகுபடுத்த கட்டடங்களை அமைத்து கட்டடக்கலையையும் உருவாக்கினான். இப்படி மனிதனின் ஒவ்வொரு சிறு சிறு தேவைகளின் அடிப்படையில் தான் கலைகள் தோன்றி வளர்ச்சி அடைந்திருக்கிறது. அவ்வகையில் கலைகள் வெளிப்படுத்தும் பண்பாட்டுச் சிந்தனைகளை விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

கலைகளைப் பற்றி தா.ஏ. ஞானமூர்த்தி அவர்கள் குறிப்பிடும் போது, "கலை என்பது விரும்பிய விளைவை உண்டாக்கித் தருவது என்கிறார்"[(1)]. "கலைகள் இயங்கு கலைகள், இயங்கா கலைகள் என இருவகைப்படும். இசை, நடனம்

போன்றவை இயங்கு கலைகள். உணர்ச்சிகளை குரலொலி வாயிலாக வெளிப்படுத்துவதற்காக இயல்பாக ஏற்படும் விருப்பத்தினால் தோன்றும் கலை இசையாகும்"(2).

சங்ககால மக்கள் கலைக்கு முக்கியத்துவம் அளித்து கலையினைச் சிறப்பாகப் போற்றி வந்துள்ளனர். கலைகளை வாழ்க்கையின் அங்கமாகக் கொண்டும் வாழ்ந்து இருக்கின்றனர். மக்களின் உணர்ச்சிகளே கலைக்கு அடிப்படையாக அமைந்துள்ளன. இக்கலைகள் தான் நமது அழிந்துப்போன பண்பாட்டினையும் நாகரீகத்தையும் மீட்டெடுத்து உணர்த்துகின்ற கருவியாக உள்ளது. "அக்கால மக்களின் எண்ணங்களையும் நாகரீகத்தையும் வெளிப்படுத்துவனவாக இந்திய நாட்டுக் கலைகள் உள்ளன. இதனால் இந்திய மக்களின் உள்ளீடான அறிந்தாலன்றி அவர்களின் கலைப்படைப்புகளை நன்கு விளக்க இயலாது" (3).

நம் நாட்டில் கலைகள் பலவாகப் பெருகிச் சிறந்தன.

"ஆயகலைகள் அறுபத்து நான்கினையும்
ஏன உணர்விக்கும் என்னம்மை
தூய உருப்பளிங்கு போல்வாள்"(4)

என்பதன் மூலம் கலைகள் அறுபத்து நான்கு என்பதையும் கலைகளுக்கு எல்லாம் கலைமகள் தெய்வமாக இருக்கிறாள் என்ற கருத்தையும் காணலாம். கலைகளை அறுபத்து நான்காக எண்ணும் மரபு இந்தியா முழுவதும் நிலவியிருக்கிறது. கலைகளை அறுபத்து நான்காக எண்ணுதல் ஓர் அறிவியல் நெறியிலான திட்ட வரையறைக்குட்பட்டதில்லை. "அறுபத்து நான்கு முத்திரைகள், அறுபத்து நான்கு மாயைகள், அறுபத்து நான்கு யோகினிகள் என்பதைப் போலவே கலைகளும் அறுபத்து நான்கு என எண்ணப்பட்டன என்பது பொருந்தும் என்பர்"(5).

ஆய கலைகள் அறுபத்து நான்கு என்று முதன் முதலில் கூறிய நூல் சிலப்பதிகாரம். இக்கலைகளில் ஒரு சில அழிந்து விட்டாலும் சில கலைகள் இன்றும் வாழந்து வளர்ந்து கொண்டு தான் வருகிறது. எடுத்துக்காட்டாக இசை, நடனம், ஓவியம், சிற்பம், கட்டிடம் போன்ற கலைகள் வாழும் கலையாக உள்ளன.

சங்க இலக்கியங்களில் காணப்படக் கூடிய பலவகையான கலைகளைப் பற்றி இங்கு காணலாம். கலைகள் என்பது பார்ப்பவர் கண்ணோட்டத்தில் தான் உள்ளது. மேலும் கலைகளை சங்க இலக்கியங்களில், "பௌத்த, சமண நூல்களில் கலைகளாக வாணிகம், உழவு, கால்நடைப் பாதுகாப்பு ஓரிடத்தில் மறைந்து மற்றோரிடத்தில் வெளிப்படுதல், வேடிக்கைச் செய்தல், ஒருவன் பலரைப் போல நடித்துக் காட்டுதல், கனவுக்குப் பொருள் கூறுதல், மெழுகுவேலை,துணிகளுக்குச் சாயம் தோய்த்தல், அரசியல், பொருளாதாரம், ஊர்களை அமைப்பது கலப்பட பொருள்களில் கலப்பைக் கண்டுபிடித்தல், எண்ணிய வேலையாட்களை இன்புறுத்தி வேலை வாங்குதல், மக்களின் உள்ளத்தைக் கவருவது. உயர்ந்தோரிடம் பணி செய்யும் திறமை, வீட்டு மரியாதைகள், ஒழுக்கங்கள் அறிதல், நீரோட்டமுள்ள இடங்களைக் கண்டறிதல், உலக இயல்பை அறிதல்[(6)] என்பனவும் இவை போல்வன பிறவும் கலைகள் என சுட்டப்பட்டுள்ளன.

கலைகள் பற்றிய செய்திகளைப் பின்வருமாறு பகுத்துக் காணலாம்.



### 4.1.1.இசைக்கலை:

மனிதன் என்று தன் நாவில் இருந்தும், கைகளைத் தட்டியும் ஒலி எழுப்பினானோ அன்றே இசைக்கலை தோன்றியது. பண்டைத் தமிழர்களின் பாடல்களுடன் இசை இணைந்து சிறப்புற்று விளங்கியது. பறவைகள் எழுப்பக் கூடிய ஒலி, ஆறுகளில் ஓடும் நீரால் ஏற்படும் சலசலப்பு, இடி, மின்னலின் போது ஏற்படும் சப்தங்களும், ஏர் உழுது கொண்டிருக்கும் போது கலப்பையானது கல்லில் இடிபடும் போது “டங்” என்று ஒலி வருவதும் இசைதான். இப்படியாக மனிதனுடைய வாழ்க்கையில் ஒட்டிப் பிறந்தது தான் இசைக்கலை.

இசைக்கலையானது ஆடல், பாடல், கொட்டு எனப் பெறும்.

**ஆடல்:**

இது பதினோறு வகைப்படும். இவற்றுள் நின்றாடுதல் ஆறும், வீழ்ந்து ஆடுதல் ஐந்தும் ஆகும். இவற்றை

“அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல்லுடன் நின்றாடலாறு”

“துடி, கடையம், பேடு, மரக்காலே,

பாவை வடிவுடன் வீழ்ந்தாட லைந்து”

என்பவற்றால் அறியலாம்.

**பாடல்:**

பாட்டு என்பது அகநாடகங்களுக்கும் புற நாடகங்களுக்கும் உரியதாகும். அக நாடகங்களுக்குரிய உரு, ‘கந்தம்’ முதல் ‘பிரபந்தம்’ ஈறாக உள்ளவை 28 புற நாடகங்களுக்குரிய உரு, தேவபாணி முதலாக ‘அரங்கொழிச் செய்யுள்’ ஈறாகச் செந்துறை விகற்பங்கள் அனைத்துமாகும். கந்தம் என்பது அடிவரையறையுள்ளது. ஒரு தாளத்தாற் புணர்ப்பது. ‘பிரபந்தம்’ என்பது அடிவரையறை இல்லாதது. பல தாளத்தாற் புணர்ப்பது.

**கொட்டு:**

கொட்டு என்பது கொட்டப்படுகின்ற இசைக்கருவி. இவை பாட்டுக்குரியன, நாட்டியத்திற்குரியன. இவ்விரண்டிற்கும் உரியன என மூவகைப்படும். பாட்டிற்குரியன 'கீதாங்கம்' என்றும், 'நிருந்தாங்கம்' என்றும் அழைக்கப்படுகின்றது. நாட்டியத்திற்குரியவை புறக்கூத்து இரண்டிற்கும் உரியதாக கருதப்படுகிறது.

இசையில்லாமல் பண் அமையவில்லை. இசையும், நாடகமும் ஒன்றோடு ஒன்று இணைந்திருந்தன. கவிதைகளும், காவியங்களும் இசையுடனே பாடப்பட்டன. இவற்றை "இசைத்தமிழ்" என்றே அழைத்தனர்.

"பண்ணென்றது நரம்படைவால் நிறந்தோன்றப்
பண்ணப்படா நின்ற பண்ணும் பண்ணியற்றிறமும்
திறமும் திறத் திறமும்"(7)

என்று அடியார்க்கு நல்லார் உரைக்கின்றார்.

தமிழர்கள் இசைக்குக் கொடுத்திருந்த உயர்வினையும் சிறப்பினையும் தொல்காப்பியர் வழி நின்றும் அறிய முடிகிறது.

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்
உரியதாகும் என்மனார் புலவர்"(8)

இசை மற்றும் நாடகக் கலைகளை அக்கால மக்கள் மதித்துப் போற்றியிருந்தனர். பாடல் என்பது பரந்துப்பட்ட பல ஓசைகளை உடையது. பாடலுக்கு உரிய பண்ணினை இராகம் என்பர். பண்ணுக்குரிய அடிப்படையைச் சுரம் என்றும், கோவை என்றும் கூறுவர்.

சுரங்கள் ச, ரி, க, ம, ப, த, நி என்று ஏழாகும். இந்த ஏழு சுரங்களின் பெயர்கள் பழங்காலத்தில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனப்பட்டன. இன்று இப்பெயர்கள் சட்ஜமம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்ற வடமொழிப் பெயர்களாக வழங்குகின்றன. பருந்தும் அதன் நிழலும் போலப் பாட்டும் பண்ணும் இயைந்து செல்ல வேண்டுமென்பர்.

### 4.1.இயங்கு கலைகள்:

எந்த ஒரு சமுதாயத்துக்கும் இலக்கியம் மற்றும் இயங்கு கலைகள் என்று கூறப்படும் இயல், இசை, நாடகம் தான் மிக மிக முக்கியமான இரு கண்கள். மக்களின் வாழ்க்கையில் என்றென்றும் மகிழ்வை தரக்கூடிய ஒரு கலை இயங்கு கலையாகும். ஏனென்றால் இயங்கு கலையில் இசை முக்கியத்துவம் பெறுகிறது. சங்க கால மக்கள் இசைக்கு மிக முக்கியத்துவம் கொடுத்துள்ளனர். அதைப் பின்பற்றியே நாமும் இன்றும் கூட எந்த ஒரு விழாவினைத் தொடங்குவதாக இருந்தாலும் முதலில் இசைக்கே முக்கியத்துவம் கொடுக்கின்றோம். இசைக்கலைஞர்களும், இசைக்கருவிகளும் இசை சிறப்புறுவதற்கு காரணமாக இருக்கின்றார்கள். எனவே, இவற்றை ஒவ்வொரு சந்ததியினரும் பாதுகாத்து அடுத்த சந்ததியினரும் பயன்படுத்தும் வகையில் கொண்டு செல்வது மிக அவசியம்.

### தொல்காப்பியத்தில் இசை:

மக்களின் வாழ்க்கையில் இரண்டறக் கலந்த இசையைப் பற்றித் தொல்காப்பியர் தன்னுடைய நூலில்,

“ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற் றென்ப பாவகை விரியே”[(9)]

என ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா என்று பாடல்களுக்கு ஓசை நிறையுமாறு பாவகைகளை கூறியுள்ளது இசையின் வளர்ச்சியைக் காட்டுவதற்கே

ஆகும். நால்வகைப் பாக்களுக்கும் உரிய ஓசை வேறுபாடுகளைக் கூறுவதோடு தொல்காப்பியர் பல்வேறு வண்ணங்களையும் கூறியுள்ளார்.

மேலும், தொல்காப்பியர் காலத்தில் இசையையும் கூத்தையும் துணையாகக் கொண்டு வாழ்வு நடத்திய கலைத்துறையினர் இருந்தனர் என்பதை,

"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅரக்கு அறிவுறீஇச்
சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்"[10]

உணர்த்துகின்றார்.

"மன்னர்கள் வாயிலில் நின்று துயிலெடைப் பாடும் பாணர்கள் இருந்தனர். இதனை இடைக்காலத்தில் திருப்பள்ளியெழுச்சி என்றனர். அரசன் முன் அமர்தேத்தும் பாணர்கள் சூதர், மாகதர் எனப்பட்டனர்"[11].

**சங்க காலத்தில் இசை:**

சங்க காலத்தில் இசை மட்டுமின்றி இசையோடு கூடிய பண்களும் இருந்துள்ளன. நிலங்களை ஐந்து வகைகளாகப் பிரித்து ஒவ்வொரு நிலத்திற்கும் ஒரு பண்ணைக் குறிப்பிட்டுள்ளார்கள். குறிஞ்சிக்கு குறிஞ்சிப்பண்ணும், முல்லைக்கு சாதாரிப் பண்ணும், மருதத்திற்கு மருதப்பண்ணும், நெய்தலுக்கு இரங்கல் பண்ணும், பாலைக்குப் பஞ்சுரப்பண்ணும் வகுத்திருந்ததை அறியமுடிகிறது.

"இசை என்பது வாயினால் பாடுவது மட்டும் அன்று கருவியினால் இசைப்பதும் இசையாகும் பன்னெடுங்காலமாகக் குழல், யாழ், முழவு எனும் மூவகை இசைக்கருவிகள் பெருஞ்சிறப்பினையுடையனவாகத் தமிழகத்தில் போற்றப்பட்டு வருகின்றன" எனக் க.த. திருநாவுக்கரசு கூறுவதிலிருந்து இசையின் பழமையை அறியலாம்.

மலைப்பக்கத்தே இருக்கும் திணைப் புனத்தைக் காக்க, நாடனுடைய மனைவி கொடிச்சியானவள் மயிர்ச்சாந்து தடவப்பெற்ற பரந்த கரிய கூந்தலை மெதுவாக அசைந்து வருகிறாள். அப்போது யானையானது திணையை உண்ண வருகின்றது. கொடிச்சியானவள் அவ்யானையை ஓட்டுவதற்குக் குறிஞ்சிப் பண்ணைப் பாடியபடி நின்றிருந்தாளாம். கொடிச்சியின் பாடலைக் கேட்டு மயங்கியபடி அவ்விடத்தை விட்டு யானை நகராமல் நின்றிருந்தது என ஆசிரியர் கூறுகின்றார். சங்க காலத்திலேயே பெண்களும் இசையோடு பாடியிருக்கிறார்கள் என்பதை அறிய முடிகிறது. இசைக்கலையில் தேர்ந்தவர்களான ஆசிரியர்களும், இசையைக் கற்றுக் கொடுக்க இருந்திருக்கின்றனர். யாழினை இசைக்கும் திறன் படைத்தவர்களாகத் திகழ்ந்தனர் என்பதை,

“ஒண் தொடி மகளிர் பண்டை யாழ்பட” (அகநா.186-10)

வளையணிந்த மகளிர் பழமை வாய்ந்த யாழினை இசைத்தனர் என்றும் இதுபோன்று பெண்கள் கலைகளின் வளர்ச்சிக்கு முன்னோடிகளாக இருந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

**இசைக் கருவிகள்:**

மக்களின் மனதிற்கு அமைதியையும் ஆனந்தத்தையும் தருவது இசையாகும். அவ்விசையை இசைப்பதற்கு ஏற்றதாய் உள்ள கருவிகளை இசைக்கருவிகள் என்கிறோம். சங்க காலத்தில் இசை கருவிகளாக யாழ், பறை, முழவு, முரசு, பதலை, தொண்டகம், ஆகுளி, தட்டை, எல்லரி, தடாரி, குழல், பயிர், பாண்டில், சங்கு, பண், மருதம், செவ்வழி, பாலை, குறிஞ்சி போன்றவை பயன்பாட்டில் இருந்தவைகளாகும். இவ்வாறான கருவிகள் ஒவ்வொன்றும் தனிப்பட்ட மக்களிடமும், சாதி வாரியாகப் பிரிக்கப்பட்ட மக்களிடமும் இருந்தன.

**யாழ்:**

யாழ் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியத்தில் நிறையக் காணப்படுகின்றன. “பெரிதும் சிறிதுமாகவுள்ள தீவுகள் ஒன்பது உள்ளன. வார்த்து முறுக்கிக் கட்டின நரம்புகள் சிறிதும் கொடி முறுக்கு இன்றி ஓசையை ஓர்ந்து இனிமையாக அமைக்கப்பட்டவை. நேர்மையான அழகிய வரகின் கதிரில் வரகுகள் வரிசையாக ஒழுங்குபட்டு அமைந்திருப்பது போல யாழின் நீளத்தில் நெருங்கிய வரிசையாகச் சிறிய துளைகளை அமைத்து, அவற்றில் கள்ளாணிகள் இறுகத் தைக்கப்பட்டுள்ளன. யாழின் பந்தலின் குறுக்கே யானைக் கொம்பினாற் புதிதாகச் செய்யப்பட்ட “யாப்பு” செருகப்பட்டுள்ளது. அப்பத்தல் பிசினோடு கூட்டி இணைத்த பொன்னிறமான தோற் “போர்வை” யாற் போர்க்கப்பட்டுள்ளது. அழகிய பெண்ணின் அடிவயிற்றில் இருந்து மேனோக்கி வளர்ந்து படிந்த மயிரின் ஒழுங்கு எவ்வாறு அமைந்திருக்குமோ, அவ்வாறே யாழைப் போர்த்துள்ள தோலினை இணைத்துத் தைத்த தையலின் ஒழுங்கு அமைந்துள்ளது” என சு.வித்யானந்தன் யாழின் அமைப்புகள் பற்றிக் குறிப்பிடுகிறார். மேலும் யாழின் உறுப்புகளாக “பத்தல், தோற்பாவை, ஆணி, வறுவாய், மருப்பு, திவவு, நரம்பு” போன்றவையை சு.வித்யானந்தன் கூறுவதிலிருந்து அறியமுடிகிறது.

விரல்களால் மீட்டி ஒலிக்கக் கூடிய யாழில், ஏழு நரம்புகளைக் கட்டி வாசித்துள்ளார்கள். அற்றுப்போகும் யாழும் காட்டில் நிலைபேறு இல்லாத பொருள்களும் இங்கு உவமையாகச் சுட்டப்பட்டுள்ளது. எனவே இசை பற்றிய செய்தியும் விரலால் மீட்கப்படும் யாழ் ஏழு நரம்புகளைக் கொண்டது எனவும் இதனால் அறிய முடிகிறது.

தலைவன் பரத்தையிடம் இருந்து பிரிந்து வந்தவுடன் தலைவியிடம் ஊடல் தீர்க்க பாணனை அனுப்புகிறான். அப்பொழுது தலைவியானவள் இசை எழுப்பி

பாடுவதில் வல்லவன் ஆயினும் அதனைக் கேட்கும் மனநிலையில் நான் இல்லை. ஆகவே இவ்விடத்தை விட்டு எழுந்து செல்க என்று தலைவியானவள் பாணனிடம் கூறினாள் என்ற செய்தியால் நற்றிணைப் பாடலில் யாழ் பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. யாழினை, சீறியாழ், பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என யாழினை வகைப்படுத்தியுள்ளனர். பாணர்கள் யாழின் நரம்பில் தோற்றுவிக்கும் இசையானது மிகுந்த இனிமையுடையதாக இருக்கும் என ஐங்குநுறூற்றுப் பாடலில் கூறப்பட்டுள்ளது.

பாணர்கள் முல்லை நிலத்திற்குரிய முல்லைப் பண்ணை யாழ் மூலம் வாசித்தார்களாம். மாலைப் பொழுதில் வாசிக்கப்படுவது முல்லையாகிய சாதாரிப் பண் ஆகும். பெரும்பாலான பாக்களில் செவ்வழிப்பண் பாடுவதாகவே கூறப்படுகிறது. நன்கு தளிர்த்திருந்த மாமரத்தின் கிளைகளில் அமர்ந்து குயிலானது தன் இனிமையான குரலினால் கூவும். தெளிந்த நீர்நிலையை அடுத்துள்ள பூஞ்சோலையில் காணப்படக்கூடிய பெரிய மரங்களின் கிளைகளில் உள்ள முதிர்ந்த இலைகள் அனைத்தும் உதிரும். அக்கிளைகளில் மலர்ந்து கிடக்கும் மலர்களில் உள்ள வண்டுகள் இசைக்கும் ஒலியானது யாழில் வல்லவன் இசைக்கும் பாலைப் பண்ணின் இசையை ஒத்து இருப்பதை அகநானூற்றுப் பாடல் வழி அறிய முடிகிறது.

“வல்லோன் தைவரும் வள்உயிர்ப் பாலை
நரம்பு ஆர்த் தன்ன வண்டினம் முரலும்” (அகநா.335:4-5)

அந்த அளவிற்கு யாழிசையானது ரீங்காரத்துடன் இனிமையாக அமையும் என ஆசிரியர் வண்டிற்கு உவமையாகச் சுட்டியுள்ளார். மேலும் கலித்தொகைப் பாடலொன்றில் யாழினை நன்கு மீட்டத்தெரிந்தவரின் கையிலிருந்து இசை வருவது போல புதர்களில் வண்டுகள் ஆரவாரித்துக் கொண்டு இருந்தன.

“வல்லவர் யாழ்போல வண்டு ஆர்க்கும் புதலொடும்”(கலி.32:9)

**குளிர்:**

சங்ககால மக்கள் குளிர் என்று சொல்லக் கூடிய ஒருவகைக் கருவியைப் பயன்படுத்தி வந்திருக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது. காடுகளை அழித்து உண்டாக்கிய கொல்லைகளில் செழித்து வளர்ந்துள்ள திணையை உண்ண வரும் கிளிகள், தம்மை விரட்ட வரும் கொடிச்சி இசைக்கும் இசையில் மயங்கி, பறந்து போகாமல் அத்திணைக் கதிர்களிலே அமர்ந்து இருக்கும். கிளிகளை விரட்ட வரும் கொடிச்சியின் கையில் "குளிர்" என்னும் கிளியோட்டும் கருவி இருந்ததாகக் குறுந்தொகைப் பாடல் குறிக்கின்றது.

"கடுபுன மருங்கில் கலித்த ஏனற்
படுகிளி கடியம் கொடிச்சி கைக்குளிரே
இசையின் இசையா இன்பாணித்தே"
பிடிக்கை அன்ன பெருங்குரல் ஏனல்
உண்கிளி கடியும் கொடிச்சியைக் குளிரே"(குறுந்.297:1-3)

**தட்டை:**

தட்டப்படுதலிற் தட்டை என்றும் மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளதாக நறுக்கி பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதோர் கருவி தட்டை என்றும் இக்கருவியைப் பற்றி நச்சினார்க்கினியர் குறிப்பிடுகிறார். மேலும் கரடியின் கனைப்பை ஒத்திருந்தமையால் கரடிகை எனவும் இவ்வோசையை சு.வித்யானந்தன் குறிப்பிடுகிறார்.

மகளிர் திணைப்புனத்தில் கிளிகளை ஓட்டுவதற்கே இத்தட்டைக் கருவியை பயன்படுத்தி உள்ளனர். இதனால் மகளிர் கிளிகளை ஓட்டுவதற்குப் பயன்படுத்திய குளிர் என்னும் கருவியும், தட்டை என்னும் கருவியும் ஒன்று என்பதை அறிய முடிகிறது.

தோழியானவள், ஒரு நாள் இரவில் சிறைப்புறமாகத் தலைவன் வந்து நின்றதை பார்த்த உடன் மேகத்திற்குச் சொல்வது போல தலைவன் காதில் விழும்படி சத்தமாகக் கூறினாள். வேங்கை பூக்களால் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்து கொண்டு, பொலிவுடன் விளங்கும் தோழியர் கூட்டத்துடன் காட்சி உண்டாக நடந்து சென்று தழிலினைச் சுற்றியும், தட்டையினை அடித்தும் அசோகின் அழகிய தழையாலான ஆடையினை உடுத்திக் கொண்டு குறமகளாகிய நம் தலைவி காக்கும் திணைப்புனத்தில் மழையைப் பொழிவாயோ! மேகமே நீ வாழ்வாயாக என்றும் கூறும்பொழுது தட்டை என்ற கருவியைப் பயன்படுத்தியதை அறிய முடிகிறது.

“தழலை வாங்கியும் தட்டை ஓப்பியும்
அழல்ஏர் செயலை அம்தழை அசைஇயும்
குறமகள் காக்கும் ஏனல்” (அகநா.188:11-13)

மேலும் மற்றொரு நற்றிணைப் பாடலில் தோழியானவள், தலைவியிடம் தட்டை என்னும் கிளியோட்டும் கருவியை வைத்திருக்கக் கூடிய நீ “வீட்டிற்குச் செல்வாயாக என்று கூறினாள்.

“தந்தை வித்திய மென் தினை பையச்
சிறுகிளி கடிதல் பிறக்கு யாவணதோ
குளிர்படு கையள் கொடிச்சி செல்க” (நற்.306:1-3)

ஆகவே சங்ககால மக்கள் குளிர், தட்டை என்ற இரு கருவிகளையும் கிளி ஓட்டுவதற்குப் பயன்படுத்தி இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ள முடிந்தது.

**தண்ணும்மை:**

தண்ணும்மை கருவியானது சங்ககால மக்களிடம் பயன்பாட்டில் இருந்ததை அறிய முடிகிறது. இது தட்டை என்றும் அழைக்கப்படுகிறது. தலைவன்

தன்னைவிட்டுப் பிரிந்து சென்றதும் அப்பிரிவைத் தாங்க முடியாது தலைவி தன் தோழியிடம் குதிரைகள் பூட்டப்பட்டத் தேரில் விடியற்காலைப் பொழுதில், தோலை மடித்துப் போர்த்தப்பட்ட வாயையுடைய தண்ணும்மை என்ற கருவியானது ஒலித்துக் கொண்டிருந்த பொழுது தலைவனானவன் வெளியில் சென்றான் என்று கூறுகிறாள்.

"வடு இன்று நிறைந்த மான் தேர்த் தெண் கண்
மடிவாய்த் தண்ணும்மை நடுவண் -ஆர்ப்ப" (நற்.130:1-2)

மேலும் மற்றொருப் பாடலில் அருவியின் ஓசைக்கு இணையாக தண்ணும்மை பற்றி கூறப்பட்டுள்ளது. புலையன் அகன்ற வாயையுடைய தண்ணும்மையின் கண் ஓங்கி அடிப்பது போன்று அருவின் ஓசை இருந்தது என்று கூறுவதிலிருந்து சங்ககால மக்களிடையே தட்டை என்னும் தண்ணும்மை கருவி பயன்பாட்டில் இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது.

**பறை:**

பறைகள் பற்றியச் செய்தி சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது. பறையின் இசைக்கு ஏற்ப மக்கள் ஆடினார்கள். இசை விழாக்களிலும், ஆடல் நிகழ்ச்சிகளிலும் பறைக்கருவி சிறப்பிடம் பெற்றிருந்தது. பெரும் பறையாக முரசு என்னும் கருவி கருதப்படுகிறது. அனைத்து வகை இசைக்கருவிகளையும் காட்டிலும் இதற்கு தனி இடம் உண்டு பறையின் ஓசையைக் கேட்டால் ஆடாத மக்களும் ஆடக்கூடிய இனிமை உடையதாக இருந்தது.

அகநானூற்றுப் பாடலொன்றில் வயல்களில் விளைந்திருக்கின்ற நெற்கதிரை உண்பதற்காக பறவைகள் வரும் அப்பொழுது நெற்கதிரை அறுத்துக்கொண்டிருக்கும் உழவர்கள் தோல் மடங்கிய வாயினையுடைய கிணைப்பறையினை அடித்துப் பறவைகளை ஓட்டுவர் என்ற செய்தி இடம் பெற்றுள்ளது. பல மலர்களையுடைய

பொய்கையில் தங்கியிருக்கின்ற பறவைகளானது இவ்வொலியைக் கேட்டவுடன் பறந்து சென்றுவிடும்.

“வெண்ணெல் அரிநர் மடிவாய்த் தண்ணும்மை”(அகநா.204:10)

குறுந்தொகைப் பாடலொன்றில் தன் உறவினர்களை விட்டுத் தலைவனுடன் சென்ற தலைவியை நினைத்து செவிலித்தாய் வருத்தப்பட்டபோது தோழியானவள் தலைவனின் நிலையைப் பற்றி இவ்வாறு கூறுகிறாள் பறையும், சங்கும் மங்கலநாளில் முழங்குவன, பலர் ஒன்றுகூடி நிற்பதற்கு ஏற்ற பெரிய ஆலமரங்கள் இருந்தன. அந்த ஆலமரத்தின் அடியில் பொது மக்கள் கூடும் மன்றங்கள் இருந்தன. மணநாளில் பலரும் விருந்துண்டு செல்வதற்கேற்ற வளமையுடையவனாகத் தான் தலைவன் இருக்கிறான் என்று கூறும்பொழுதே அங்கும் பறை என்ற கருவி இசைக்கப்பட்டதை அறிய முடிகிறது.

“பறைபடப் பணிலம் ஆர்ப்ப, இறை கொள்பு” (குறுந்.15-1)

மலைப்பக்கத்தே செழித்து வளர்ந்துள்ள கருமையான நிறத்தை உடைய திணைக் கொல்லையில் உண்ணும் பொருட்டுத் தன் துணையை விட்டுப் பிரிந்த கொடிய ஆண்யானை வந்து புகுந்துவிட்டது. அதைக் கண்ட அக்குடியில் உள்ள குறவர்கள் அம்பினையும், கிணைப் பறையையும் எடுத்துக்கொண்டு விரட்டச் சென்றனர் என்ற செய்தியில் இருந்து கிணைப்பறையை பயன்படுத்திய செய்தியை அறியமுடிகிறது.

மிகுந்த துணிச்சல் மிக்க குறவர் குலச் சிறுவர்கள் மலைப்பகுதியின் பெரும் பாறையின் மீது ஏறித் தத்தம் கையில் இருக்கும் சிறிய தொண்டகப் பறையை முழக்குவர். இவர்கள் முழக்கும் ஒலியானது அங்கே திணையினை உண்ண வரும்

கிளிக் கூட்டத்தை பயந்து ஓடச் செய்யும், என்ற செய்தியை நற்றிணைப் பாடல் வழி அறிய முடிகிறது.

"குறக் குறுமாக்கள் புகற்சியின் எறிந்த

தொண்டகச் சிறுபறைப் பாணி அயலது" (நற்.104 : 4-5)

**புல்லாங்குழல்:**

ஒரு வகை புல்லினமான மூங்கிலின் தண்டிலிருந்து உருவாக்கப் பெறுவதால் இது புல்லாங்குழாயிற்று. ஓட்டைகளின் வழி காற்றைச் செலுத்தி அடைத்து முறையாக வெளியிடுவதன் வழி பல்வேறு ஒலி அமைப்பினை இக்குழல் வெளியிடுகிறது.

**பதலை:**

ஒரு புறம் மட்டும் இசைக்கப்படும் கருவி பதலை எனப்படும். மன்னரிடம் பரிசில் பெற வருவோர் பதலையை இசைத்துக் கொண்டு வருவர்.

**முரசு:**

பழங்கால இசைக்கருவிகளுள் ஒன்று முரசு பழங்காலத்தில் மக்களுக்குச் செய்திகளை அறிவிக்கும் முன்பு முரசு அறையப்பட்டுத்தான் தெரிவிக்கப்படும். தோற்கருவிகளுள் வன்மையான கருவி முரசாகும். அதே வழக்கம் இன்றும் சில ஊர்களிலும் கிராமங்களிலும் "தண்டோரா" என்ற பெயரில் ஒருவன் "தப்பினை" மாட்டிக் கொண்டு அடித்து ஒலியெழுப்பி செய்தியைச் சொல்லிச் செல்வதைக் காண்கிறோம்.

**இசைக்கலைஞர்கள்:**

தமிழர்களின் வாழ்வில் இரண்டறக் கலந்த இசையினை இசைக்க கூடியவர்களை இசைக்கலைஞர்கள் என்று அழைக்கிறோம். அவர்களை பாணன்,

பாடினி, அகவலர், கிணைஞர், பொருநர், கோடியர், வயிரியர், கண்ணுள் என்று இசைக்கலைஞர்களை அழைக்கிறோம்.

**பாணர்:**

இசைக்கலைக்குரிய நூல்களைக் கற்றவரே பாணர், பாடினியர் எனப்பட்டனர்.

1. "பிறரை வாழ்த்திப் பாடுவதில் வல்லவர்கள் பாணர்கள். இவர்கள் சீறியாழ், பேரியாழ் என்ற இரண்டையும் பயன்படுத்தி உள்ளனர். பேரியாழையாண்டோர் பெரும்பாணர் என்றும் சிறியயாழை யாண்டோர் சிறுபாணர் என்றும் அழைக்கப்பட்டனர். பெருமையும், சிறுமையும் குறித்த அடைகள் யாழைத் தழுவுமேயன்றிப் பாணனைத் தழுவாது என்று உணர்தல் வேண்டும் என்பர்".[(12)]

2. "இசையும், கூத்தும் முழுதுறத் தழுவி வாழந்த ஒரு பழங்குடியினர் பாணர் ஆவர். இவர்கள் பாடுவார் என்ற அளவில் பொருள் சொல்லக்கூடிய சுருங்கிய கலை வல்லார் அல்லர். பாடுவாரும், ஆடுவாரும் கருவி செய்வாரும் அவர் தம் பெண்டிரும் கூடிய ஒரு பெரும் தொகுதியினர் ஆவார்"[(13)] என்பர் இரா.இளங்குமரன். "தமிழ் இலக்கிய கலைச் சொல் அகராதி பாணன் என்பதற்குப் பாடல் வல்ல ஒரு சாதி"[(14)] என்று குறிப்பிடுகிறது.

பாணர்கள் தலைவன் தலைவிக்கு ஊடல் தீர்க்கும் வாயில்களாகவும் செயல்பட்டுள்ளனர். ஐங்குநுறூற்றுப் பாடலொன்றில் தலைவனானவன் மாலைப்பொழுதில் வீட்டின் முற்றத்தில் உயரம் குறைந்த கட்டிலில் தன் மனைவி மற்றும் மகனுடன் அமர்ந்திருந்தான். அப்பொழுது தலைவனின் மேல் அவனது மகன் ஊர்ந்து விளையாடினான். அவ்வாறு விளையடியது போது ஏற்பட்ட இன்பமானது பாணனது யாழிசைக்கு ஒத்திருந்தது என ஆசிரியர் காட்டுகின்றார்.

“மாலை முன்றில் குறுங்காற் கட்டில்
மனையோள் துணைவி ஆக, புதல்வன்
மார்பின் ஊரும் மகிழ்நகை இன்பப்
பொழுதிற்கு ஒத்தன்று மன்னே
மென் பிணித்து அம்ம –பாணனது யாழே” (ஐங்.410:1-5)

**பாடினி:**

பாடினி என்பவளும் பாணனைப் போலவே பாடல் பாடுவதில் திறம்மிக்கவளாக இருந்துள்ளாள். கிணை என்னும் பறையைக் கொட்டிப் பாடுதலின் கிணைமகள் என்றும் பாடினி அழைக்கப்படுகிறாள்.

**அகவலர்:**

அகவலர் என்பவர் குறிப்பிட்ட ஒரு வகை இசைக் கலைஞர்கள் தங்கள் கைகளில் யாழ் நரம்புடைய ஒரு குச்சியை வைத்துக்கொண்டு பாடும் இயல்புடையவர்கள்.

**கிணைஞர்:**

கிணை என்னும் தோற்கருவியை இசைக்கும் கலைஞர் கிணைஞர் என்று அழைக்கப்படுகிறார். கிணை என்பது ஒருவகைப் பறவையாகும். சங்க கால மக்களின் இசைவாழ்வில் முக்கிய இடம் பெற்றுத் திகழ்ந்துள்ளனர் இக்கிணைஞர்.

**பொருநர்:**

பறையினை இயக்க கூடிய கலைஞர்களை பொருநர் என அழைப்பர். பொருநர் யாழிசைத்துப் பாடுவதுடன் கண் அகன்ற தடாரியையும் கொட்டி விடியற்காலையில் பாடியுள்ளனர். ஆறலைக் கள்வரையும் மனம் திருந்தச் செய்யும் ஆற்றலுடையவர்களாக பொருநர்கள் விளங்கினர்.

**கோடியர்:**

சங்கு ஊதி இசையெழுப்புவோரைக் கோடியர் என்பர். கோடு என்பது சங்கு, திருவிழாக்காலங்களில் இசைக்கும் ஆண் கலைஞர்கள் கோடியர் எனப்பட்டனர். கோடியர்கள் குறிப்பிட்ட கருவி ஒன்றை இசைக்கும் பழக்கத்திலிருந்து வளர்ந்து பல்வகை இசைக்கருவிகளை இசைக்கும் நிலைக்கு உயர்ந்தவர்கள்.

“சுரம் செல் கோடியர் கதுமென இசைக்கும்
நரம்பொடு கொள்ளும் அத்தத்து ஆங்கண்” (நற்.212:3-4)

என்ற அடிகள் கோடியரை நரம்புக் கருவியுடன் தொடர்புப்படுத்துகிறது. சுரம் செல் கோடியர் என்று குறிப்பதால் இவர்கள் ஓரிடத்தில் தங்காது ஊர் ஊராகச் சென்று கலை நிகழ்ச்சிகள் நடத்தி வாழ்க்கையை நடத்திய கலைஞர்கள் என்பதை அறியலாம்.

பாலை நிலத்தில் தங்கியிருந்த கோடியர்கள் முழக்கிய வாத்திய ஒலி பெரிய மலையிடத்து எதிரொலிக்கும் தன்மை உடையதாய் இருந்தது. இதனை

“அருஞ்சுரக் கவலை அசைஇய கோடியர்
பெருங்கல் மீமிசை இயம்எழுந் தாங்கு”(அகநா.359:8-9)

என்னும் அடிகள் விளக்கும்.

**நாடகக் கலையும் கூத்துக் கலையும்:**

பண்டைக் காலத்தில் நாடகக்கலையும் போட்டியின் மூலம் வளர்க்கப்பட்டது. ஒவ்வொரு கலைஞருமே தங்களைச் சிறந்தவர்கள் என்று காட்டிக் கொள்வது இயற்கை. நடனமாடுவோர், பாடல் பாடுவோர், நாடகமாடுவோர் முதலியோர் தங்கள் திறமையைக் காட்ட மற்றவர்களுடன் போட்டியிடுவார்கள். இவர்கள்

போட்டியிடுவதற்கென்றே மன்றங்கள் இருந்தன. இம்மன்றங்களை குறிப்பிட்டுக் காட்டுவதற்கென்றே கொடிகளை கட்டியிருப்பர்.

"ஆடல் நவின்றோர் அவர் போர் செறுப்பவும்
பாடல் பயின்றோரைப் பாணர் செறுப்பவும்
வல்லாரை வல்லார் செறுப்பவும்
அல்லாரை அல்லார் செறுப்பவும், ஓர் சொல்லாய்ச்
செம்மைப் புதுப்புனல்
தடாகம் ஏற்ற தன்சுனைப் பாங்கர்ப்
படாஅகை நின்றன்று" (பரி.9 :72-78)

என்று பரிபாடல் கூறுகிறது. ஆடல் கற்றவர்கள் போட்டியிட்டு வெல்லவும் பாடல் கற்றவர்களைப் பாடல் கற்ற பாணர்கள் வெல்லவும் மற்றும் ஏனைய கலைகளிலே வல்லவர்களுடன் விவாதித்து வெல்லவும் கொடி கட்டப்பட்டிருந்தது.

இச்செய்திகளின் மூலமாக சங்ககால் மக்களின் வாழ்வியில் பண்பாட்டில் கூத்துக்கலை முக்கியத்துவம் பெற்றிருந்ததை அறிய முடிகிறது.

"கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று"[(15)]

கூத்தாடும் அவையில் மக்கள் கூடுவதைப் போன்றதே செல்வம் வருவதும் போவதும் உள்ளது என்கிறார்.

உடம்பை பல வகையில் வளைக்கின்ற அளவிலும் உணர்ச்சிகளுக்கு ஏற்ப மெய்ப்பாடு தோன்றும்படி நடிக்கின்ற அளவிலும் இக்கூத்துக்கள் இருந்தன. இடைக்காலத்தில் அபிநயத்தோடு பாட்டொலியும் கூடிற்று, சில உரையாடல்களும் சேர்ந்துக் கொண்டன. ஆனால் இந்த உரையாடல்கள் இடத்திற்கு ஏற்றவாறு நடிக்கின்றவர்களாலேயே சேர்த்துக் கொள்ளப்பட்டன.

இவ்வாறு நடைபெற்ற கூத்துக்களில் குரவைக் கூத்தும், துணங்கை கூத்தும் சிறப்பிடம் பெற்றிருந்தன.

**குரவைக் கூத்து:**

காதலையோ, போர் வெற்றியையோ பொருளாகக் கொண்ட குரவைச் செய்யுட்களைப் பாடிக் கொண்டு எழுவரோ அல்லது ஒன்பதின்மரோ வட்டமாக நின்று கைகோர்த்துக் கொண்டு ஆடுவது குரவைக் கூத்தாகும். இதனைக் கலைக்களஞ்சியம் "கைகோத்தாடல்" என்கிறது. பொதுவாக அமைந்த இவ்விளக்கங்களால் குரவை என்பது பாட்டொடு கூடியதென்றும், இருபாலருக்கும் உரியதென்றும் அறிய இயலும். இதனை,

"மான்றோர் சிறுபறை கறங்கக் கல்லென
வான்றோய் மீமிசை யயருங்-குரவை" (மலை.படு.321:322)

என்று கூத்தராற்றுப்படை விளக்கும்.

குரவைக் கூத்தினை வெறும் பொழுது போக்குத் தன்மை மட்டும் கொண்டதாகக் கருதிவிட முடியாது. இதன் மூலம் சமுதாயத்திலும் பல நன்மைகள் நிகழ்ந்தன. ஒரு நிலத்தைச் சேர்ந்த மக்கள் பிறிதொரு நிலத்தில் சென்று குரவைக் கூத்தினை நிகழ்த்தினர். இதனால் சமுதாய ஒற்றுமை மேலோங்கியது. ஊசல் அலவனாட்டு, பொய்கையாடல் முதலிய மகளிர் விளையாட்டுகளைப் போலவே குரவைக் கூத்து சிறந்த பொழுது போக்காக விளங்கியது.

இக்குரவைக் கூத்தானது பழந்தமிழரின் இசைக்கலை வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியது. சிறுபறை, தொண்டகப் பறை, ஆம்பற் குழல், தண்ணுமை என்று பலவித இசைக்கருவிகள் குரவையால் பயன்பட்டன. குரவைப்பாடலானது சிறந்த பாடலியற்றும் புலமைத்திறத்தை நன்கு வளரச் செய்தது.

குரவைக் கூத்து என்பது தலைவி தம் தோழியர்களுடன் முருகனைப் பாடுதலாகும். அம்முருகனிடம் தான் விரும்பியத் தலைவனையே திருமணம் செய்துகொள்ள வேண்டும் என வேண்டுவர். சங்க இலக்கியங்களில் இக்குரவைக் கூத்தானது மிகுதியான இடங்களில் இடம் பெற்றுள்ளது.

தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவியிடம் தோழியானவள், பரந்த ஓசையினால் எழும் பெரிய வாயாகிய வட்டத்தையுடைய ஊதுகொம்பினிடத்துப் பிறந்த தெளிந்த இசை ஒலிக்க வண்டல் விளையாட்டுக்குரிய பாவையை நீர் உண்ணும் துறையில் கொண்டு வந்து வைத்து, அழகிய நெற்றியையுடைய பெண்கள் குரவைக் கூத்தாடுகின்ற கடற்கரைச் சோலை சூழ்ந்த ஊரனாகிய நம் தலைவன் விரைந்து வருவார். வருந்தாதே என தலைவியைத் தேற்றுகிறாள்.

“பாடுஊர்பு எழுதரும் பகுவாய் மண்டிலத்து
வயிர்இடைப் பட்ட தெள்விளி இயம்ப
வண்டற்பாறை உண்துறைத் தரீஇ
திருநுதல் மகளிர் குரவை அயரும்”(அகநா.269: 17-20)

மேலும் மற்றொரு அகநானூற்றுப் பாடலில் தலைவியின் உடல் மாற்றத்தை அறிந்த தாய் தன் மகளின் நோய்க்கு என்ன மருந்தைக் கொடுப்பது எனத் தெரியாமல் இது ஏதோ தெய்வக் குற்றத்தால் ஏற்பட்டது என நினைத்து தன் காவல் தெய்வமான முருகனை அழைத்து வேண்டுகிறாள்.

“மன்ற வேங்கை மணநாட் பூத்த
மணிஏர் அரும்பின் பொன்வீ தாஅய்
வியல்அறை வரிக்கும் முன்றில், குயவர்
மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்
ஆர்கலி விழவுக் களம்கடுப்ப, நாளும்
விரவுப்பூம் பலியொடு விரைஇ, அன்னை

கடியுடை வியல்நகர்க் காவல் கண்ணி
‘முருகு’ என வேலற் தரூஉம்
பருவமாகப் பயந்தன்றால், நமக்கே” (அகநா.232:7-15)

மன்றத்திலுள்ள வேங்கை மரமானது மணநாளை அறிவிப்பது போல பூத்துக் குலுங்கி நின்றது. அவ்வேங்கை மரத்தில் இருந்த அரும்புகள் மலர்ந்து பொன்னிறமாகி அகன்ற காறைகளால் ஆன முற்றத்தினை அழகு செய்யும். அம்முற்றத்தில் குறவர்கள் தம் வீட்டில் உள்ள ஆடுதலில் கைதேர்ந்த மகளிரோடு குரவைக் கூத்து ஆடுவர். அங்ஙனம் ஆடக்கூடிய ஆரவாரம் மிக்க விழாக்களத்தைப் போன்று நம் அன்னையானவள், காவல் அமைந்த நம் இல்லத்திற்கு தீங்கு ஏற்படாத வண்ணம், வெறியாடல் நடத்த வேலனை அழைத்து வரச் சென்று விட்டாள். இக்குரவைக் கூத்தானது சில நேரங்களில் குடும்பங்களில் குழப்பங்கள் தோன்றுவதற்கும் வழிகோலியது என தோழியானவள் தலைவியிடம் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**துணங்கைக் கூத்து:**

துணங்கை என்பது ஆடவர் மகளிர் ஆகிய இருபாலருக்குமான சங்ககால விளையாட்டாகும். “முடக்கிய இரு கைகளையும் விலாப் புடைகளில் ஒற்றியடித்துக் கொண்டு அசைந்தாடும் ஒருவகைக் கூத்து என்று தமிழ்ப பேரகராதி விளக்கம் தருகிறது. இக்கூத்தைச் சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார் சிங்கிக் கூத்து என்பர். விழாவில் துணங்கை ஆடுதலை,

“முழவு இமிழும் அகலாங்கண்
விழவு நின்ற வியன் மறுகிற்
றுணங்கையந் தழூஉவின் மனங்கமழ்சேரி”(மதுரைக்.327-329)

என்ற மதுரைக்காஞ்சி பாடல் வரிகள் குறிப்பிடுகிறது.

மேலும் அகநானூற்றுப் பாடலிலும்

"தாமும் பிறரும் உளர்போல் சேறல்
முழவுஇமிழ் துணங்கை தூங்கும் விழவின்"(அகநா.336:15-16)

என்று பெண்களோடு மற்றவர்களும் சேர்ந்து சிறப்புடைய முழவு ஒலிக்கும் துணங்கைக் கூத்தாடி விழாவினை மகிழ்ச்சியாக கொண்டாடினார்கள் என்று அறியமுடிகிறது.

பரத்தையர்களும் துணங்கை கூத்துப் பாடியதை கலித்தொகை எடுத்துரைக்கிறது.

"தமர் பாடும் துணங்கையுள் அரவம் வந்து எடுப்புமே"(கலி.70:14)

மற்றொரு குறுந்தொகைப் பாடலில் துணங்கைக் கூத்தைப் பற்றிக் கூறும் பொழுது,

"மள்ளர் குழீஇய விழவினானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டும் காணேன் மாண் தக்கோனை
யானும் ஓர் ஆடுகள மகளே, என்கைக்
கோடு ஈர் இலங்கு வளை நெகிழ்த்த
பீடுகெழு குரிசிலும், ஓர் ஆடுகள மகனே"(குறுந்.31:1-6)

பெருமையும் என்னை மணக்கும் தகுதியும் உள்ளவன் என் காதலன். அவனை வீரர்கள் கூடி நடத்துகின்ற விழாவிலும் காணவில்லை. மகளிர் ஒருவரோரொடருவர் தழுவிக்கொண்டு ஆடுகின்ற துணங்கைக் கூத்து நடைபெறும் இடங்களிலும் காணவில்லை. நானும் துணங்கைக் கூத்தாடும் இடத்திற்குச் சென்றேன். சங்கைப் பிளந்து செய்த வளையல்கள் கழன்று விழும்படிச் செய்த அந்தப் பெருமையுள்ள தலைவனும் ஓர் ஆண் மகன் தான் என்று தலைவி

கூறுவதிலிருந்து துணங்கைக் கூத்து சங்ககால மக்களின் பண்பாட்டில் இருந்துள்ளதை அறியமுடிகிறது.

**கூத்துக்கலை:**

**கூத்தர்:**

குதித்து ஆடுவது கூத்தாகும். இக்கூத்தை ஆடுபவர்களே கூத்தர்கள் ஆவர். கூத்தருக்கு ஆடுகளமகன் என்ற பெயரும் வழக்கில் உள்ளது. கூத்தர்கள் தம் குழுவினருடன் ஊர் ஊராகச் சென்று ஆடல்கலையை வளர்த்து வந்துள்ளனர்.

தொல்காப்பியத்தில் ஊடல் தீர்க்கும் வாயில்களில் ஒருவராகக் கூத்தர் குறிக்கப்பட்டுள்ளனர். கூத்தர் கூற்று நிகழுமிடங்களாக முன்புள்ளோர் வரலாறுகளைக் கூறுதலும், மனைவாழ்க்கை நுகர்ச்சியைப் புகழ்தலும், தலைவன் தலைவியர் ஊடலைத் தணித்தலும், வாழ்க்கை உறுதிகளைக் காட்டலும், கேட்போர் அறிவினை மெய்ம்மையில் நிறுத்தலும், காரண காரியங்களோடு உணர்த்தலும் உறுதிப்படுத்தலும், அழகுநிலை உணர்த்தலும் போன்றவற்றை எடுத்துரைப்பார் தொல்காப்பியர்.

தம் இடம் பெயர்ந்து தலைவன் இருக்கும் இடம் சென்று கூறுதலும், அவ்விடம், அவளது நிலை உரைத்தல் ஆகிய இரண்டும் கூத்தர்குரியவையாகும். இதனால் தொல்காப்பியர் கூத்தரை தலைவன், தலைவியரது அகவாழ்வில் பங்குபெறும் மாந்தராகப் படைத்துள்ளமை புலனாகும்.

கூத்துக்கலை என்பது மிகப்பழங்காலந்தொட்டு இன்றளவும் செயல்பட்டு வருகின்ற ஒரு அரியக்கலையாகும். கூத்துக்கலையை மக்கள் இரவு நேரங்களில் ஓய்வுக்காகவும், பொழுது போக்கிற்காகவும் ஊர்மத்தியிலோ அல்லது பொதுவிடங்களிலோ நிகழ்த்தினர். தற்பொழுது வளர்ந்து விட்ட மேடை நாடகங்கள்,

சினிமா போன்ற அறிவியல் வளர்ச்சியால் கிராமத்து மக்களும் மனதைப் பறிகொடுத்துள்ளதால் இக்கலையானது நலியத் தொடங்கியுள்ளது.

வேடம் புனைந்து கொண்ட நடிகர்கள் சிலரால் தெருக்களிலும், களத்து மேடுகளிலும் கிராமப் பொது வழிகளிலும், கோயில் வளாகங்களிலும் இரவுத் தொடங்கி விடியும் வரை கதை தழுவி ஆடப்படும் நாடகமே கூத்து எனப்படும். கூத்தின் தன்மை நமது மக்களின் அன்றாட வாழ்க்கை நிலையைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது. இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழும் ஒருங்கே பெற்றது கூத்தாகும்.

குதித்து ஆடுவதே கூத்து என்று அழைக்கப்பட்டது. சங்க கால மக்கள் பாடலைக் கேட்டும் நாடகத்தை ரசித்தும் பார்த்தனர். கோயிலில் நடத்தப்படும் கூத்தில் நாடகம், நடனம் இருவகையுண்டு. பாட்டுக்கு அபிநயம் பிடிப்பது நடனம். கதை தழுவியது நாடகம் ஆகும்.

இசையும், கூத்தும் சங்ககால மக்களின் பொழுதுபோக்கு அம்சமாக இருந்துள்ளன. அனைவராலும் இதனை நிகழ்த்த முடியாது இதற்கென்று ஒரு சில பிரிவினர் நிகழ்த்தினர். அவற்றை எல்லா மக்களும் கேட்டு மகிழ்ச்சியடைவர் என்பதை சங்க இலக்கியங்கள் மூலம் அறிய முடிகிறது.

பழந்தமிழ் இலக்கியங்களுக்கெல்லாம் இலக்கணமாக அமைந்த தொல்காப்பியத்தில் ஆடற்கலைப்பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே, தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே ஆடற்கலையும் அக்கலையில் தேர்ச்சி பெற்றவர்களும் இருந்துள்ளனர் என்பதை நாம் அறிய முடிகிறது.

"நடமே நாடகம் கண்ணுள நாட்டம்
படிகம் ஆடல் தாண்டவம் பரதம்
அகனுதர் வாணி குரவை

இலயம் நிலையம் நிருத்தம் கூத்தே
நடனம் தூக்கு நாட்டியம் நட்டணம்
நடையும் அதற்கே நவிலலுமாகும்”[16]

என கூத்திற்குரிய பல பெயர்கள் அக்காலத்தில் இருந்ததை சேந்தன் திவாகரம் எடுத்துரைக்கிறது.

சிலம்பில் அடியார்க்கு நல்லார் கதை தழுவியும் தழுவாதும் அமைவது கூத்து என்கிறார். கதை தழுவி வருவதை நாடகம் என்று குறிப்பிடுகிறார். கூத்துக்களைப் பொதுவாக அகக்கூத்து, புறக்கூத்து என்று இருவகையாகப் பிரிப்பர். ஆனால் அவை குரவைக்கூத்து, துணங்கைக் கூத்து அல்லிப்பாவைக் கூத்து எனப் பிரித்து கூத்து நடைபெற்றதை அறியமுடிகிறது.

“கூத்துக்களில் பலவகையுண்டு மன்னவருக்கும், மக்களுக்குமானது ஒன்று. புகழ்ந்தும் இகழ்ந்தும் ஆடுவது மற்றொன்று மூன்றாவது தமிழ்க் கூத்தும், ஆரியக் கூத்தும். நான்காவது தேசியக் கூத்துக்கள். பொதுவாக கூத்துக்களில் பதியோரு வகையுண்டு. அவை முறையே கடையம், மரக்கால், குடை,துடி, அல்லியம், மல், குடம், பேடு, பாவை, கொடுகட்டி பாண்டரங்கம் என்பன”.[17]

**வெறியாட்டு:**

வெறியாட்டு என்பது பெண்களுக்காக நடத்தப்படுவதாக இலக்கியங்களில் எடுத்துரைக்கின்றன. தலைவிக்குப் பேய் பிடித்து விட்டதாக நற்றாய் நினைத்துக்கொண்டு வேலனை அழைத்து வெறியாட்டு நடத்தினாள். தலைவனை நினைத்து தலைவியானவள் உணவு உண்ணாமலும் பிறருடன் பேசாமலும் உடல் மெலிந்து காணப்படுகிறாள். எப்பொருளைப் பார்த்தாலும் தலைவனின் முகமே தெரிகின்றது. இவ்வாறு காதல் நோயால் வாடும் தலைவியின் நிலை தவறாக

நற்றாயினாலும் செவிலியினாலும் புரிந்து கொள்ளப்பட்டு இது பேய் பிடித்ததின் விளைவு என்று எண்ணி வெறியாட்டிற்கு ஏற்பாடு செய்கின்றனர்.

பாவை ஒன்றில் பொறி இணைத்து விட்டால் அது எவ்வாறு தானே இயங்கி ஆடுமோ அவ்வாறு வெறியாட்டு ஆடினார்கள் என்று அகநானூறு கூறுகின்றது.

நற்றிணைப் பாடலில் தலைவியானவள் தோழியிடம் கூறும்பொழுது குறிபார்க்கும் வேலனை அன்னையானவள் வீட்டிற்கு அழைத்து வந்தாள். அச்சம் தரக்கூடிய அகன்ற இடத்தில் அமைந்த சுனையின் நீர் பெருகுமாறு மேகம் மழையைப் பெய்த மிக்க நெடியகுன்றம். அக்குன்றத்தில், கரிய காம்பையுடைய வன்மையில்லாத மெல்லிய குறிஞ்சிப் பூ மலர்ந்து விளங்கும். மலையிடங்களில் ஓவியன் எழுதி வைத்தது போல வேட்டுவரில்லங்கள் திகழும். அவ்வில்லங்களில் தேனீக்களால் இழைக்கப்பட்ட தேனடைக்கு வேண்டிய அளவு தேன் குறிஞ்சிப்பூக்களில் ஊறி நிற்கும். இத்தகைய மலைக்குரிய நாடனுக்கு நாம் காதலைச் செய்த போதும் அவன் நம்மிடம் காதலில்லாது அயலானைப் போல இருப்பதற்கு என்ன காரணம் என்பதை வேலனிடம் கேட்போமாக என்று கூறுகிறாள்.

அகத்திணைப் பாடலொன்றில் தலைவன் தலைவியை மணந்து கொள்வதில் நாட்களைக் கடத்திக் கொண்டே செல்வதால் தலைவியானவள் அவளுடைய தந்தையால் இற்செறிக்கப்பட்டு அருங்கடிப்படுவாள் என்பதை குறிப்பால் புலப்படுத்தி தலைவனுக்கு கேட்குமாறு தலைவியிடம் கூறுகிறாள். வண்டு மொய்க்கும் கொன்றை மாலையுடன் நெய்தல் மாலை கிடந்தசைய அந்திப் பொழுதில் கடல் தெய்வம் கரையின் கண் நின்றார் போல நீ இக்கடற்கரைச் சோலையில் தனிமையில் நிற்க, வெறியாடும் மகள் போன்று பொலிவுற்ற என் அழகினைத் துறந்து அவ்வாடுகளமகள் தனித்து மீண்டு சென்றார் போல நான் உன்னை விட்டு பிரிந்து தனித்துச் செல்ல மாட்டேன் என்று உரைக்கின்றாள்.

குறுந்தொகைப் பாடலொன்றில் வேலனால் வெறியாட்டு நடத்தப்படக்கூடிய இடங்களானது செந்நெல்லின் வெள்ளிய பொரியைச் சிந்தினாற் போன்ற தோற்றத்தைத் தரக்கூடியதாக இருக்கும் என்று கூறப்பட்டுள்ளது. மற்றொருப் பாடலில் தலைவியின் வேறுபாடு கண்டு, தாய் வேலனை அழைத்து வெறியாட்டெடுக்க விழைந்தனள். வேலனும் தலைவியின் உண்மை நிலை அறியாது அவளின் மெலிவானது தெய்வத்தால் வந்தது என்று நினைத்தான். தலைவன் இரவில் வருவானாயின் அவனைப் பார்த்த உடன் தன்னுடைய நோய் தணியும். ஆனால் தன் தாயானவள் அதனை வெறியாடலால் விளைந்த நன்மை எனத் தவறாக உணர்வாள். இவை போன்ற செய்திகளின் மூலம் வெறியாட்டு என்ற நிகழ்வு நடைபெற்றதை தெரிந்துகொள்ள முடிகிறது.

ஐங்குறுநூற்றுப் பாடலொன்றில் ஊரின் கண் வாழும் வயது முதிர்ந்த வேலனைக் கொண்டு தலைவியின் தாயானவள் வெறியாட்டை தடுக்கத் துணிந்தாள் என்பதனையும், அப்பொழுது அவ்வேலன் வழக்கப்படியே உரிய சடங்குகளைச் செய்து வெறியாடி இவள் நோய்க்கு முருகனுடைய அணங்குதலே காரணம் என்று பொய் சொல்வான் என்பதையும். சிறைப்புறத்தே நிற்கும் தலைவன் உணர்ந்து வரைவுக்கு ஆகுவன செய்ய வேண்டும் என்பது தோழியின் குறிப்பாக காட்டப்பட்டுள்ளது. மற்றொருப் பாடலில் தலைவனின் பிரிவால் தலைவியானவள் உடல் மெலிந்து காணப்பட்டாள். ஆனால் வேலனிடம் அவளுடைய தாய் காரணம் வினவ அதற்கு வேலனோ, தலைவியின் மெலிவிற்கு முருகணங்கே காரணம் என்றாள். வெறியாட்டு நிகழ்த்தப்படும் இடமானது மணலாலும் மலர் மாலைகளாலும் பிறவற்றாலும் அழகுப்படுத்தப்பட்டது என்பதையும் அறிந்துகொள்ள முடிந்தது. மேற்கண்ட பல செய்திகளின் மூலம் வெறியாட்டு என்பது நோய்தீர்த்தற் பொருட்டு மட்டுமே நிகழ்த்தப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

### 4.1.2. நாட்டியக்கலை:

ஆயகலைகள் அறுபத்து நான்கினில் ஒரு வகை கலையான நடனக்கலையை விரும்பாத மக்கள் யாரும் இல்லை. நடனம் ஒரு பொழுது போக்கு நிகழ்வாக இருப்பினும் பார்ப்பவர்களை ஈர்க்க கூடிய ஒரு கலையாகும்.

சங்க இலக்கியங்கள் அக்காலத் தமிழர் தம் வாழ்க்கை முறைகளை அறியப் பெரிதும் உதவுகின்றன. பல்வேறு சூழல்களில் மக்கள் தமக்குள் ஆடிப்பாடிக் களித்திருந்த காட்சிகளைக் காட்டும் இலக்கியங்கள் தொழில் முறைக் கலைஞர்களாக பாணர், பாடினியர், கோடியர், வயிரியர், கண்ணுளர், விறலியர் போன்றோரையும் காட்டத் தவறவில்லை. சங்ககால மக்கள் தமக்குள் மகிழ்ந்தாடிய ஆடல் வகைகள் பெரும்பாலும் குழு ஆடல்களாகவே அமைந்தன.

யாழொலி, மிடற்றுப் பாடல் குழலொலிகளுடன் முழவு ஆர்ப்ப அரங்கேறிய தலைக்கோல் மகளிரும், பிறரும் ஆடல் தொடங்கினர். இதனைப் பின்வரும் பாடல்களின் வாயிலாக அறிய முடிகின்றது.

பிறிதொருப் பாடலில் ஆடல் பயின்றாரை ஆடல் பயின்றோரே வென்றதாக குறிப்பு காணப்படுகிறது.

ஆடுவோரின் ஆடல், அதற்குப் பொருந்திய சீருடன் கூடிய தாளத்துடன் பொருந்தியதைப் பரிபாடல் விளக்கும்.

விறலியரின் ஆடல்கள் வியந்து பேசப்படுவதால் அவர்தம் ஆடல்கள் முறைப்படி பயின்று, முறைப்படி நிகழ்த்தப்பட்டன என்பது புலனாகும்.

"முழவு முகம் புலர்ந்து முறையின் ஆடிய
விழவு ஒளி களத்த பாவை போல……..” (நற்.360: 1-2)

**விளையாட்டுகள்:**

விளையாட்டு என்பதே பொழுது போக்கின் அம்சமாகும். விளையாட்டினால் உடலும், உள்ளமும் வலிமை பெறும். ஒவ்வொருவரும் தங்களுக்கு விருப்பமான செயல்களில் ஈடுபடுவதே விளையாட்டாகும். வாழ்க்கையின் பயிற்சிகளமாகவும் விளையாட்டை எடுத்துக்கொள்ளலாம். சங்க கால மக்கள் தனது பாதுகாப்பிற்கு ஏற்படுத்திக்கொண்ட கலைகளுள் ஒன்று விளையாட்டு. சங்க கால மக்களில் ஆடவரும் மகளிரும் விளையாட்டில் மிகுதியான ஆர்வம் கொண்டிருந்தனர்.

சங்ககால மக்களின் பண்பாட்டில் விளையாட்டு குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளது. இயற்கையான சூழலில் விளையாடி, சுத்தமான காற்றை சுவாசித்து உடல் வலிமைப் பெற்றனர். சங்க கால மகளிரும் இவ்விளையாட்டுக்களால் உடல் வளத்தைப் பெற்று சிந்தனைப்பெறுகின்றனர்.

சங்க காலத்தில் ஆடவர் விளையாட்டு, மகளிர் விளையாட்டு, சிறுவர், சிறுமியர் விளையாட்டு என பல்வேறு வகையான விளையாட்டுக்கள் இருந்துள்ளன. ஒத்த வயதுடைய விளையாடும் மகளிர் தொகுதியினை “ஆயம்” என்றும் “விளையாட்டு ஆயம்” என்றும் அழைக்கின்றனர்.

**மணல் விளையாட்டுக்கள்:**

சங்க கால மகளிர் மணல்மேட்டில் விளையாடும் விருப்பம் கொண்டவர்கள். அம்மணலில் தனக்குப் பிடித்தமான உருவங்களைக் கொண்டு விளையாடி மகிழ்வர். சிறிய மண் வீடு போன்று உருவாக்கி, அதில் சோறு சமைத்து விளையாடும் முறையைக் கொண்டிருந்தனர் என்பதை,

“………………..கானற்
றோடலை ஆயமொடு கடலுடனாடியுஞ்
சிற்றிழைத்துஞ் சிறு சோறு குவைஇயும்” (அக.நா.110:5-7)

என்ற அகநானூற்றுப் பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவியானவள் தன் தோழியர் கூட்டத்துடன் கடலில் நீராடியும் பின்பு கடற்கரைச் சோலையில் மணலைக் கொண்டு சிற்றிலமைத்தும் சிறுசேறாக்கியும் விளையாண்டு மகிழ்ந்தனர் என்பதை வெளிப்படுத்துகிறது.

"கடலுடன் ஆடியும் கானல் அல்கியும்" (குறுந்.294:1)

என்ற குறுந்தொகைப் பாடல் அடியால் மகளிர் கடலில் நீராடி விளையாடும் விருப்பம் உள்ளவர்கள் என்பதை உணர முடிகின்றது. சிறுமியர் தன் ஒத்த வயது சிறுமியருடன் சேர்ந்து ஆற்று மணல் பரப்பில் சிறுவீடுகட்டி சிறு சோறாக்கி விளையாடும் விளையாட்டினை சிற்றில் என்பர். இவ்வாறு அவர்கள் கட்டிய சிறய மணல் வீட்டினைக் கொண்டு விளையாடும் பொழுது அங்கு வந்த சிறுவர்கள் தன் காலால் அளித்து விளையாடுவர்.

நெய்தல் நிலத்தில் வாழும் மகளிர் பல்வேறு விளையாட்டினை விளையாடி மகிழ்வர் அவற்றுள்,

"பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோனதியள்
திணிமணல் அடைகரை அலவன் ஆட்டி
அசையினள் இருந்த ஆய்த்தொடிக் குறுமகள்" (அக.நா.280:2-4)

என்று கூறுவது, செருந்திப் பூக்களோடு பல மலர்களைச் சூடி பெண்ணானவள், தனது கடற்கரையில் வாழ்ந்து வரும் நண்டினை ஒட்டி விளையாடி களைப்புற்று காணப்படுகிறாள் என்பது கூறப்படுகிறது. மகளிர் தன் விளையாட்டுக்களில் கொண்டிருந்த ஆர்வத்தால் தனித்து தன் சுற்றத்துடன் விளையாடியவர்கள் தன் நிலத்தில் வாழும் ஊர்வன உயிர்களிடம் விளையாடியுள்ளனர் என்பதை

குறிப்பிடமுடிகிறது. இதுவே அவர்களின் விளையாட்டு ஆர்வத்தை வெளிப்படுத்துகிறது எனலாம்.

**ஊசல்:**

ஊசல் என்பதனை ஊஞ்சல் என்றும் கூறுவர். இவ்விளையாட்டு மகளிர் விளையாட்டாகக் கருதப்படும். மரங்களிலும் வீட்டு மேற்சுவர்ப் பிடிப்புகளிலும், கயிறு, இரும்புச் சங்கிலி இவற்றால் ஊஞ்சல் அமைத்து ஊசலாடுவதை வழக்கமாக கொண்டிருந்தனர். இவ்விளையாட்டில் தலைவியானவள் அமர்ந்து தோழியரால் ஊஞ்சல் தள்ளப்பட்டு விளையாடி மகிழ்ந்தனர்.

பெண்பாற் பிள்ளைத்தமிழில் ஊசல் என்ற விளையாட்டு இடம் பெற்றுள்ளது என்பதில் இருந்து இவ்விளையாட்டு பெண்களுக்குரிய விளையாட்டு என அறியமுடிகிறது.

“தோடுவளர் பைந்தினை நீடுகுரல் காக்கும்
ஒண்டொடி மகளிர்க் கூசலாக
வாடுசினை யொழித்த கோடினர் கஞலிய
குறும்பொறை அயலது நெடுந்தாள் வேங்கை” (அக.நா.368:3-6)

என்ற பாடல் ஊசல் விளையாட்டைக் குறிக்கின்றது. தலைவி தன் தோழியர் கூட்டத்துடன் திணைப் பயிர்களைக் காவல் காக்கின்றாள். அவ்வேளையில் அருகில் உள்ள பருத்த அடியை உடைய வேங்கை மரத்தில் கிளைகளை வெட்டி கயிற்றைக் கொண்டு ஊஞ்சலாக ஆடி மகிழ்ந்தனர்.

வீட்டுத் திண்ணை, முற்றம் போன்ற இடங்களில் மட்டுமல்லாமல் தினைக் காக்கும் காடுகளிலும் ஊசல் விளையாடப்பட்டது என்பதை உணர முடிகிறது. சான்றாக,

“நல்கூர் பெண்டின் சில்வளைக்குறு மகள்

ஊசல் உறுதொழில் பூசல் கூட்டா………” (நற்.90:10-11)

என்ற நற்றிணைப் பாடலடிகள் தலைவியை ஊஞ்சலில் அமர் வைத்து தோழியர் ஊஞ்சல் ஆட்டுகின்றனர் என்று எடுத்துரைக்கின்றன. இவ்வாறு ஊசல் விளையாட்டு சங்க இலக்கியப் பாடல்களில் மிகுதியும் இடம் பெற்றுள்ளன.

**கழங்காடுதல்:**

சங்க கால மகளிரால் ஆடப்பெற்ற விளையாட்டுக்களுள் ஒன்று கழங்கு, பெண்கள் தங்கள் கைக்குள் அடங்கக் கூடிய அளிவிலுள்ள குறிப்பிட்ட எண்ணிக்கைய்ுளள கழங்குக் காய்களை தேர்ந்தெடுப்பர். பின்பு அக்காய்களை நிலத்தில் எறிந்தும், எடுத்தும், உயரத்தில் தூக்கிப் போட்டு, கீழே வருவதற்கு முன்பே அதனை எடுத்தும் பிடித்தும் ஆடும் விளையாட்டு கழங்காடுதல் எனப்படும். இவ்விளையாட்டைப் பாட்டுப் பாடிக் கொண்டே ஆடியும் வருவர்.

இதனை தட்டாங்கல், கல்லாங்காய் என்றும் அழைப்பதை வழக்கமாய் கொண்டுள்ளனர் எனலாம்.

சங்ககால மகளிர் கழற்சிக் காய்களைக் கொண்டு கழங்கு என்ற விளையாட்டை விளையாடி மகிழ்ந்தனர்.

“வணங்கிறை மகளிர் அமர்ந்தனர் ஆடுங்
கழங்குறழ் ஆலியொடு கதழ்உறை சிதறி”(அகநா.334:7-8)

என்ற அடிகளானது வளைந்த முன்கையுடைய மகளிர் விரும்பி கழங்காடினர் என்பதைக் குறிப்பிடுகிறது.

**பாவை விளையாட்டு:**

பாவை என்றால் பொம்மை என்று பொருள்படும். பாவை விளையாட்டை விளையாட விரும்பும் மகளிர், அம்மணலில் மனித உருவங்கள், பறவைகள், விலங்குகள் போல உருவங்களைச் செய்து மகிழ்ந்து விளையாடுவர். இவ்விளையாட்டினை மகளிர் விளையாட்டுகளுள் ஒன்றாகக் குறிப்பிடுவர். பாவை விளையாட்டினை மகளிர் திண்ணையிலும் விளையாடினர்.

நெய்தல் நிலத்தில் உள்ள கழியில் பூத்துள்ளப் பூக்களைப் பறித்தும், கடற்கரைச் சோலையில் நீண்ட நேரம் தங்கியிருந்தும், வரிப்பட்ட மணலில் வண்டற்பாவை செய்து விளையாடி, மகிழ்ந்து களைப்புற்றாள் தலைவி என்று குறிப்பிடப்படுகிறது. எனவே, தலைவியானவள் வண்டற் மணலில் பாவை செய்து விளையாடி களைப்புற்றாள் என்றும் இவ்விளையாட்டு மகளிர் விளையாட்டு என்றும் உணரலாம்.

தலைவியானவள் தன் தோழியருடன் சேர்ந்து நெய்தல் நில மணலில் வண்டற் பாவை அமைத்து விளையாடுகிறாள். அப்பொழுது அவ்வழியே சென்ற தோழியானவள் தலைவனிடம் அன்று எங்களுடன் எம் தலைவி வண்டற் பாவை செய்து விளையாடி மகிழ்ந்து நின்றாள். அச்சமயம் அவ்வழியே நீ நெடுஞ்கயிற்றினைக் கொண்ட நீண்டத் தேரினைச் செலுத்தி அவள் விளையாடிய வண்டற் பாவையைச் சிதைத்தாய். பின்பு அவளின் தோள் நலத்தினை நுகர்ந்த நாளில் பிரியமாட்டேன் என்று கூறிய சூளும் பொய்யோ என்று கேட்கின்றாள். இங்கு, தலைவனை வரைதல் கூறுமிடத்து விளையாடிய விளையாட்டினை முதன்மையாகக் கொண்டு கூறுவதைக் காணமுடிகின்றது.

மகள் ஒருவனுடன் உடன் போக்குச் சென்றுவிட்டாள். இதனை அறிந்த தாயானவள் வருந்துகிறாள், புலம்புகிறாள், மகள் சென்ற காட்டிடத்தே சென்று

அவ்வழியே வரும் வழிப்போக்கரிடம் என் மகளிரைக் காண்டிரோ என்று கேட்டதை கயமனார் தன் பாடலில் கூறியுள்ளார்.

எதிரே வரும் வழிப்போக்கரை நோக்கி, ஐயா,எதிரே என் மகளைக் கண்டீரோ? அவள் சென்ற காட்டின் வழியே என் மகள் சிறிய செம்மையான விரலால் சிற்றிலையும், அதில் சிறுசோறாக்கி விளையாடிய வண்டலையும் கண்டீரோ? என தாயானவள் வினவுகிறாள். எனவே, தலைவியானவள் திருமணம் செய்யும் வயதையும், பக்குவத்தையும் பெற்றிருந்தாலும் விளையாடும் ஆர்வம் கொண்டிருந்தனர் என்பதையும், தாயானவள் தன் பெண்ணை சிறு பிள்ளையாகவே எண்ணியிருந்தாள் என்பதனையும் அறியமுடிகின்றது.

**பந்து விளையாட்டு:**

இன்று ஆண், பெண் இருபாலராலும் விளையாடப் படுகின்ற விளையாட்டு பந்து விளையாட்டாகும். இவ்விளையாட்டு அன்று மகளிர் மட்டும் விளையாடக் கூடியதாக இருந்துள்ளது. செல்வம் மிகுந்த மகளிர் மட்டும் இவ்விளையாட்டினை ஆடியுள்ளனர். இன்று மைதானத்தில் விளையாடப்படும் பந்து விளையாட்டு, சங்க காலத்தில் வீட்டிற்கு வெளியிலும், மணற்பரப்பிலும், முற்றத்திலும் விளையாடப்பட்டுள்ளது எனலாம். அக்காலத்தில் பந்து எறியும் களம் பந்தடிக்கும் மேடை ஆகியன இருந்துள்ளன. பூவினாலும், நாரினாலும் நூலினாலும் வரிந்து கட்டப்பட்ட பந்துகளைக் கொண்டு விளையாடியுள்ளனர்.

ஓவியம் வரையப்பட்ட அழகிய பந்தைக் கொண்டு பந்தாடுதலை மகளிர் ஆடியுள்ளனர் என்பதை,

"வரி அணி பந்தும் வாடிய வயலையும்" (நற்.305:1)

என்ற நற்றிணைப் பாடல் அடி பந்தின் அமைப்பினையும் சிறப்பினையும் உணர்த்துகிறது.

“ஓங்கு நிலைத் தாழி மல்கச் சார்த்திக்
குடையிடை நீரின் மடையினள் எடுத்த
பந்தர் வயலைப் பந்தெறிந்தாடி”(அகநா.275:1-3)

என்ற அகநானூற்று அடிகளில் ஓங்கி உயர்ந்த நிலையை உடைய சாடியில் நிறையச் சேர்த்து பனங்குடையால் முகந்த நீரினைச் சொரிந்து வளர்த்த வயலைக் கொடிப் படர்ந்த பந்தலில் பந்தினை எறிந்து விளையாடும் இளமைத் தன்மையுடைய மகளிர், மணற் பரப்பில் வீட்டு முற்றத்திலும் மட்டுமல்ல, வயலைக் கொடி படர்ந்த பந்தரிலும் பந்தினை எறிந்து ஆடும் திறம் படைத்தவர்கள் பெண்கள் என்று குறிப்பிடப்படுகிறது.

தந்தையின் தேர் இயங்குகின்ற நிலவு போன்ற வெண்மணல் பரப்பிய முற்றத்தில் தலைவி தன் தோழியரோடு மகிழுமாறு பந்தாடினாள் என்று குறிப்பிடுகிறது. ஆதலால் பழங்கால மகளிர் மனையகத்தே பந்தாடினர் என்பது எடுத்துரைக்கப்படுகிறது.

“கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள்”(அக.நா.49:1)

என்பது பெண்கள் கிளியோடு விளையாடுதல், பந்தாடுதல், கழங்காடுதல் ஆகிய விளையாட்டினை விரும்பியிருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

பெற்ற தாயானவள் தன் மகனுக்கு சோறு ஊட்ட நிலாவைக் காட்டி அதனை விளையாட வருமாறு சொல்லி, சோறு ஊட்டுவது வழக்கம். இவ்விளையாட்டு இன்று மட்டுமல்ல. அந்தக் காலத்திலே இருந்துள்ளது.

“முகில் நிலாத் திகழ்தரு மூவாத் திங்கட்
பொன்னுடைத் தாலியென் மக னேற்றி
வருகுவை யாயிற் றருகுவென் பாலென”(அக.நா.54:17-19)

என்ற அடிகளில் மாலைக்காலத்தில் தாயானவள், தன் புதல்வனை வைத்துக் கொண்டு நிலாவைப் பார்த்து, நிலவே! பொன் தாலியணிந்த என் மகனை நினைந்து அவனுடன் விளையாட நீ வருக, அவ்வாறு நீ வந்தால் உனக்குப் பால் தருவேன் என்று நிலவை தன் மகனுடன் விளையாட அழைக்கின்றாள். இவ்வாறு சங்ககால மக்கள் விளையாட்டிற்கு எல்லை இல்லை. விளையாடும் பொருளாக எதை வேண்டுமானாலும் எடுத்துக்கொண்டார்கள் என்பதிலிருந்து அவர்களின் விளையாட்டு ஆர்வம் வெளிப்படுத்தப்படுகிறது.

பகற்குறி வந்த தலைமகனுக்குத் தோழியானவள், சிறைப்புறமாகக் கூறுகிறாள். இனி தலைவனுடன் தலைவியும் சேர்ந்து சோலையில் விரும்பி விளையாடுதல் இயலாமல் போகுமோ? என்ற அச்சத்தில் வரைதல் வேண்டிக் கூறுகிறாள். இங்கு தலைவனும் தலைவி ஆடிய விளையாட்டினை,

“நல்வரை நாடொனாருவி யாடியும்
பல்லிதழ் நீலம் படுகனைக் குற்றும்
நறுவீ வேங்கை யின வண்டார்க்கும்
வெறிகமழ் சோலை நயந்து விளையாடலும்
அரிய போலும் காதலுந் தோழி” (அகநா.302:4-8)

என்ற அடிகளில் காணலாம். நல்ல நாட்டையுடைய தலைவனுடன் அருவி ஆடியும், அழகிய சுனையில் பல இதழ்களையுடைய நீல நிற பூக்களைப் பறித்தும், மணம் கமழும் பூக்களையுடைய வேங்கை மரத்தில் வண்டுகள் ஒலிக்கும் சோலையில் விரும்பி விளையாடுகின்ற செயல் இனி இயலாது போகுமோ? என்று தலைவி தோழிக்கு கூறுவது போல தலைவனுக்கு கூறுகிறாள். ஆதலால் தலைவி தன் தோழியர் கூட்டத்துடன் மட்டுமல்ல, தலைவனுடனும் அருவியாடுதல், பூக்கள் நிறைந்த சோலையில் விளையாடுதல் போன்ற செயல்களால் தன் மன் இன்புற்றாள் என்பதை காண முடிகின்றது. இதனை

"செல்வம் புலனே புணர்வு விளையாட்டு என்று
அல்லல் நீத்த உவகை நான்கே"[18]

என்று தொல்காப்பியமும் நன்கு விளக்கும்.

"வையேர் வாலேயிற் றொண்ணுதன் மகளிர்
கைமாண் டோளி கடுப்ப பையென"(அகநா.344:4-5)

என்பது அழகிய வெளிய பற்களையும், ஒளிபடைத்த நெற்றியையும் உடைய மகளிர் ஒழுங்குடைய மாட்சிமைப்பட்ட "தோளி" என்னும் விளையாட்டை விளையாண்டு மகிழ்ந்துள்ளனர் என்பதைக் குறிப்பிடுகிறது.

**வருணனை:**

கலையுணர்வை வெளிப்படுத்துவதில் வருணனையும் முக்கிய இடம் பெற்றுள்ளது. மனிதனிடம் கலையுணர்வு என்று வளரத்தொடங்கியதோ அன்றே கற்பனையும் வளர்ந்தது. அதன் வெளிப்பாடு தான் வருணனை. சங்ககால மக்கள் இயற்கையோடு இயைந்து வாழத் தொடங்கியவர்கள். இயற்கையை தெய்வமாக நினைத்து வழிபட்டப்பின் வருணிக்கவும் தொடங்கினர். சங்க இலக்கியங்கள் அவர்களின் வாழ்வு நிலையினைக் கூறும்போது காலம், இடம், பொருள் போன்றவற்றை இயற்கைச் சார்ந்த நிகழ்வாகக் காட்டுகின்றன.

"இலக்கியத்தில் இயற்கையைத் தரும் நிலைகள் பல உள. அவை இயற்கையை அவ்வாறே காட்டுதல், இயற்கையைச் செயற்கையுடன் கலந்து தருதல், இயற்கையை அழகுறப் புனைதல், இயற்கையில் சில பல கூறுகளைத் தேர்ந்து ஒருங்கமைத்து அளித்தல் போன்றன கூறும் முறையிலும் பலவிதங்கள் அமையலாம். சிறு தொடராகத் தருதல் அல்லது நீண்ட பகுதியாக அமைத்தல், நுட்பமாகக் காட்சிப்படுத்தல் அல்லது மேற்போக்காகத் தருதல், செயற்பாடு அல்லது ஓவியம் போலத் தருதல் அல்லது இயக்கங்கள் புலப்பட அமைத்தல் என

இயற்கையை அணுகும் முறையிலும் வேறுபாடுகள் அமைய வாய்ப்பு உண்டு. மூன்றாமிடத்தினதாக இயற்கையை எடுத்து மொழிதல் அல்லது முன்னிலைப்படுத்தி அதனுடன் நேரடியாக அழைத்துப் பேசுதல் அல்லது இயற்கைப் பொருளே தன்னைப் பற்றிக் கூறுவதாக அமைத்தல் என்பன போன்றன. இன்னும் கவிஞன் இயற்கையைப் படைக்கும் பாங்கில் ஐம்புலன் உணர்வுக்கும் முதன்மை கொடுத்துப் படைத்தல், ஒரு புலனுக்கு முக்கியத்துவம் அளித்தல், புலனுணர்வுக்கு மிகுந்த முக்கியத்துவம் அளிக்காமை எனப் பல நிலைகள் அமையலாம்.

இறைவனால் இவ்வுலகில் படைக்கப்பட்ட அனைத்தும் இயற்கையே ஆகும். மனிதனால் இயற்கையை வெல்ல முடியாது. இரசிக்க மட்டுமே முடியும்.

அகநானூற்றுப் பாடல்களில் இயற்கை வருணனைகள் சிறப்பாக அமைந்துள்ளன. சான்றாக தலைவியானவள் தான் தலைவனுடன் கொண்ட உள்ளத்துக் காதலையும், களவொழுக்கத்தையும் தன் தோழிக்கு அறத்தொடு நிற்றலாக வெளிப்படுத்துகிறாள். இப்பாடலில் இயற்கை உவமையோடு வருணிக்கப்படுகிறது.

“ஆடமைக் குயின்ற வவிர்துளை மருங்கிற்
கோடை யவ்வளி குழலிசை யாகப்
பாடின் னருவிப் பணிநீர் இன்னிசைத்
தோடமை முழவின் றுதை குரலாகக்
கணக்கலை யிருக்குங் கடுங்குரற் றூம்பொடு
…………..
ஆரிருட் கங்குலணையோடு பொருந்தி” (அகநா.82:1-16)

என்ற அகநானூற்றுப் பாடலில் தோழி, வாழி! அசைகின்ற அமை என்னும் மூங்கிலில் தானே அமைந்த துளையில் கோடைக் காற்றானது நுழைந்து செல்லும் ஓசை குழலோசையாகவும், அருவியின் விழுகின்ற ஓசை முழவோசை போன்றும்

உள்ளது. கூட்டமான கலைமான்கள் ஏற்படுத்துகின்ற குரலின் ஓசையானது பெருவங்கியம் என்னும் வாத்திய ஓசை போன்று ஒலிக்க, இத்தகைய பல இனிய ஓசைகளைக் கேட்டுக் களிப்பு மிகுந்த மந்திக் கூட்டங்கள் மருண்டு பார்க்க, மூங்கில் வளர்ந்த மலைப்பாறையில் அசைந்து அசைந்து ஆடும் மயில் ஆடுகளத்தில் நுழைந்து ஆடும் ஆடுமகள் போலத் தோன்றும் நாட்டினையுடைய தலைவன் அழகிய வில்லைப் பற்றிக் கொண்டு தினைப்புனத்தின் ஒரு பக்கத்தே மாலையணிந்த மார்பனாக நின்றான். அவனைக் கண்டோர் பலர். ஆனால் அவர்களுள் நான் மட்டும் அரிய நள்ளிரவில் அணையொடு கூடி நீர்வழியும் கண்களுடன் நினைந்து வாழ்கிறேன் என்று தலைவி தோழியுடன் கூறும் பாடலில் இயற்கைக் காட்சிகளையும் அவற்றோடு உவமை நலன்களையும் காண முடிகின்றது. தலைவியின் உள்ளத்துக் காதலைச் சொல்லுமிடத்து இயற்கை வருணனைக்கும் உவமைச் சிறப்புக்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருப்பதை உணரமுடிகின்றது.

மருங்கூர்ப் பாகைச் சாத்தன் பூதனார் என்பவர் தனது பாலை பாடல் ஒன்றில், பாலை நிலத்தின் தன்மையினையும் வெம்மையினையும் இயற்கையோடு கூறியதை,

"……………….வெம்மே கனைகதிர்
ராவி யவ்வரி நீரென நசைஇ
……………………
மைந்நிற வுருவின் மணிக்கட் காக்கை
பைந்நிணங் கவரும் படுபிணக் கவலை"(அகநா.327:8-16)

என்ற அகப்பாடல் உணர்த்துகிறது.

ஞாயிற்றின் கதிரால் தோன்றுகின்ற ஆவியான அலைகளை (பேய்த்தேர்) நீர் என்று எண்ணி அதனைப் பருக நினைத்து விலங்குகள் மிக ஓடி அலையும் பாலை நிலத்தில் செங்குத்தான உயர்ந்த மலைகளிலிருந்து கொழித்து வரும் அருவி நீர்

போல பாம்பின் அழகிய வரிகளையுடைய உரிக்கப் பெற்ற தோல்கள் பொருந்தும் பாறை இடங்களையும், உடைய புற்றுக்கள் அடிமரத்தில் கட்டப் பெற்றுள்ள காய்ந்த கிளைகளையுடைய மரத்திடத்தில் பெய்யும் மேகத்தின் நிறம் போன்ற உருவத்தையும் நீலமணி போன்ற கண்களையும் உடைய காக்கைகள் பசிய கொழுப்பினைக் கவர்ந்துண்ணும் இடமாகிய பிணங்கள் நிறைந்த பாலை நிலம் என்கிறார். இங்கு பாம்பினால் உரிக்கப் பெற்ற தோலினை அருவியாகவும், காக்கையின் கரிய நிறத்தினை கரிய மேகமாகவும் உவமைப் படுத்தப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

மழை இல்லாததால் நிலம் வறண்டு போனது. வாகை மரமானது வற்றிப் போனது. வற்றிய வாகை மரத்தில் விளைந்து முதிர்ந்து போன நெற்கொத்துக்கள் காற்றில் அசைந்து ஒலிக்கின்றன. அவ்வொலியானது கூத்தர் கயிற்றில் ஏறி ஆடும்போது கொட்டுகின்ற பறையின் ஒலி போல இடையுறாது ஒலிக்கின்றன. கோடை மிகுந்து வெப்பம் வருத்துகின்ற வேளையில் குன்றுகளில் வாழ்கின்ற புலிகள், வறண்ட நிலத்தில் நீர் இல்லாமல் தாகம் தீர்க்க அலைபாயும் யானைகளைக் கொன்று தின்னுகின்றன.

இவ்வாறு ஆள் இல்லாத பாலை நிலத்தின் தன்மையை,

“வாடல் உழுஞ்சில் விளைநெற்று அந்தணர்
ஆடுகளப் பறையின் அரிப்பன ஒலிப்ப
கோடை நீடிய அகன் பெருங் குன்றத்து
நீர்இல் ஆர்அற்று நிவப்பன களிறு அட்டு
ஆள்இல் அத்தத்து உழுவை உகளும்
காடு இறந்தனரே காதலர்”(அகநா.45:1-6)

என்ற வெள்ளி வீதியாரின் பாடல் எடுத்துரைப்பதைக் காணமுடிகின்றது.

## 4.2.இயங்கா கலைகள்:

மக்களின் வாழ்வில் என்றென்றும் நிலைத்திருக்கக் கூடிய கலைகள் இயங்கா கலைகள் எனப்படும். கலைஞர்களின் கைவண்ணத்தில் உருவாகக் கூடிய கட்டிடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை போன்றவைகளை இயங்கா கலைகள் என்கிறோம். எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன்னால் கட்டப்பட்ட தாஜ்மஹால் இன்றும் மக்களின் மனதில் நீங்கா இடம்பிடித்திருக்கிறது. அதே போன்று மாமல்லபுரச் சிற்பங்கள் சித்தன்னவாசல் ஓவியங்கள் சிறப்புப்பொருந்திய நிலையில் காணப்படுகின்றன. இவற்றை எல்லாம் பார்க்கும் பொழுது பண்டைத்தமிழர்களின் கலை உணர்வை அறிந்துகொள்ள முடிகிறது. அக்காலக் கட்டிடங்களில் முட்டை, கருப்பட்டி, சுண்ணாம்பு, கடுக்காய் போன்றவற்றை சேர்த்துக் கட்டிய கட்டிடங்கள் எத்தனையோ நூற்றாண்டுகள் தாண்டியும் இன்றும் அதன் சிறப்பு குறையாயமல் காணப்படுகின்றன.

### 4.2.1. கட்டடக்கலை:

ஒரு நாட்டின் நாகரிகத்தின் அடையாளம் கட்டடக்கலை. கட்டடங்களின் அமைப்பும், சிறப்பும் அந்நாட்டு கட்டடக் கலைஞர்களின் அறிவினையும் முயற்சியையும் வெளிப்படுத்தக்கூடியது எனலாம். சங்ககாலத் தமிழர்கள் பெரிய நகரங்களையும், மாட மாளிகைகளையும், கோபுரங்களையும், அதனைச் சுற்றி மதில், அகழி போன்ற பாதுகாப்பான அரண்களையும் அமைத்திருந்தனர். இக்கட்டடக்கலை அகநானூற்றிலும் சிறப்பு பெற்றிருந்தது எனலாம்.

“வைகு சுடர் விளங்கும் வான் தோய் வியல் நகர்” (அகநா.87:13)

என்பது விளக்குகள் எரிந்து கொண்டிருக்கும் வானைத் தொடுகின்றளவிற்கு அரண்மனைக் கட்டிடங்களைக் கொண்டுள்ள சிறந்த நகர் என்பதாகும். விண்ணைத்

தொடுகின்ற கட்டிடங்கள் அக்கால மக்களின் கட்டடக் கலைக்குச் சிறந்த உதாரணமாகத் திகழ்கின்றன.

வானத்துடன் போர் செய்வது போல உயர்ந்திருக்கின்ற கூரையறற மாடிக்கட்டடங்கள் அமைக்கப்பட்டுள்ளன என்பதாகும். இவையே தமிழர்களின் கட் டக் கலையின் சிறப்பிற்கு எடுத்துக்காட்டாய் அமைந்துள்ளன எனலாம். இசைக்கலை, ஆடற்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, கட்டடக்கலை போன்றவற்றில் சிறந்து விளங்கிய பழந்தமிழ் கலைஞர்களையும் அவர்களின் சிறப்பினையும், உயர்வினையும் அகநானூறு எடுத்துரைக்கும் போது, தமிழர்களின் கலைகள்வழிப்பண்பாடு நன்கு வெளிப்படுகிறது.

### 4.2.2. சிற்பக் கலை:

கல்லிலும், உலோகத்திலும் கருவிகள் செய்த மனிதன் அவற்றில் சிற்பமென்னும் நுண்கலையை வடிக்கத் தொடங்கினான். உயிரற்ற கல்லிலும் உலோகத்திலும் செதுக்கி தமிழர் தம் மன உணர்வுகளையும் நிகழ்வுகளையும் செதுக்கி வைத்த சிற்பங்கள் இன்றும் தமிழர் பண்பாட்டின் வாயில்களாகத் திகழ்கின்றன. தமிழர் அழகியலின் வெளிப்பாடு தான் நாம் காணும் சிற்பங்கள் தமிழ்ச் சிற்பிகள் கல்லில் வடித்த கவிதைகளே சிற்பங்களாகும்.

கல் உலோகம், செங்கல், மரம், முதலியவற்றைக் கொண்டு கண்ணையும், கருத்தையும் கவரும் வகையில் உருவங்கள் அமைக்கும் கலையே சிற்பக்கலை எனலாம்.

“கல்லும் உலோகமும் செங்கல்லும் மரமும்
மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும்
கண்ட சருக்கரையும் மெழுகும் என்றிவை
பத்தே சிற்பத் தொழிற்குப் உறுப்பாவன”

என்று திவாகர நிகண்டு குறிப்பிடுகிறது.

தெய்வ உருவங்கள், இயற்கை உருவங்கள், கற்பனை உருவங்கள், முழுவடிவ உருவங்கள் என நான்கு நிலைகளில் உலோகத்தினாலும், கல்லினாலும் சிற்பங்கள் அமைக்கப்படுகின்றன. சிற்ப இலக்கண மரபை பின்பற்றி கலை நயத்துடனும், மிகுந்த தேர்ச்சியுடனும் சிற்பிகள் சிற்பங்களை வடிவமைக்கின்றனர். அதனால் அவர்களைக் கற்கவிஞர்கள் என்கிறோம்.

பண்டையத் தமிழர்கள் சிற்பக்கலையிலும் திறன் பெற்று விளங்கினர். சிற்பங்களை மரத்திலும், மண்ணிலும், கல்லிலும் வெளிப்படுத்தினர்.

“பண்டைத் தமிழரின் சிற்பக் கலைத்திறனை உணர்த்தும் வகையில் மண்சிற்பம், கற்சிற்பம், சுதைச் சிற்பம், மரச் சிற்பம், தந்தச் சிற்பம் என ஐவகைச் சிற்பங்களும் சங்கத் தொகை நூல்களில் அமைந்துள்ளன”.[19]

**அகநானூற்றில் சிற்பக்கலை:**

சிற்பங்களில் அழகு வாய்ந்தது கற்சிற்பம். இக் கற்சிற்பம் சிற்பங்களில் முதன்மையானது சங்க காலத் தமிழர்கள் நடுகல் நடும் வழக்கம் கொண்டிருந்தனர். நடுகல்லினைத் தேர்ந்தெடுத்து அதில் வீரனின் உருவத்தையும், பெயரினையும், புகழினையும் கல்லில் செதுக்கி, நீராட்டி அக்கல்லினை நட்டு “நடுகல்” என்று வழிபடுவார் இதனை,

அகநானூற்றுப் பாடலில் வலிய பாறையில் நடுகல்லில் இடம்பெற்ற கண்ணி வாடப் பெற்றதும், நீராட்டப் பெறாததும் ஆகிய இடத்தில் கூரிய உளியால் செய்யப்பெற்ற கீற்றுகள் மறைந்த எழுத்துக்கள் அவ்வழியே செல்லும் குதிரை வண்டியால் தேய்ந்து மறைந்து அவ்வழியே செல்லும் பதியோர்க்கு வேறு பொருள் தருவதாய் விளங்குகின்றன என்கிறார்.

"புன்றலை சிதைந்த வன்றலை நடுகற்
கண்ணி வாடிய மண்ணா மருங்குற்
கூருளி குயின்ற கோடுமாய யெழுத்த" (அகநா.343:5-7)

பழந்தமிழர்களிடம் சிற்பக்கலை சிறந்து விளங்கியது என்பதை காணமுடிகின்றது.

சிற்பங்களுக்கு அடுத்த நிலையில் ஓவியக்கலை சிறப்பு பெற்றிருந்தது. ஏனெனில்,

"ஏதிலன் பொய்ம்மொழி நம்பி, ஏர்வினை
வளம்கெழு திருநகர் புலம்பிப் போகி" (அகநா.117:3-4)

என்பது சித்திரத் தொழிலமைந்த வளமிக்க அழகிய மாளிகையுடைய திருநகர் என்று போற்றப்படுவதை உயர்த்துகின்றது. சித்திர வேலைப்பாடுடைய மாளிகைகள் அக்காலத்தில் இருந்தது என்பதும் ஓவியக்கலை மக்களிடம் சிறந்து காணப்பட்டது என்பதையும் அறிய முடிகின்றது. மேலும்,

"ஓவத் தன்ன வினைபுனை நல்லிற்"(அகநா.98:11)

என்பது சித்திரத்தை யொத்த கைத்தொழிலாற் புனையப்பட்ட நல்ல வீட்டினையுடையவர் என்பதாகும். ஓவியக் கலை அழகான வீட்டிற்கு உவமையாகக் கூறியதன் மூலம் சங்க காலத்தில் ஓவியக்கலை பெருஞ்சிறப்பு பெற்றிருந்ததைச் சுட்டுகிறது.

**பிறகலைகள்:**

சங்ககால மக்கள் தாங்கள் வெளிப்படுத்திய ஒவ்வொரு செயலிலுமே கலைகளை வெளிப்படுத்தினர்.

**சோதிடக்கலை:**

சோதிடம் என்பது நாள், கோள் நிலைகளை அடிப்படையாகக் கொண்டு அவற்றால் ஏற்படக்கூடிய இன்ப துன்பங்களை முற்படக் கணித்து கூறுவதாகும். இது ஒரு கலையாகப் பழங்காலந் தொட்டு வளர்ந்து வந்திருக்கின்றது. சோதிடத்தை பண்டைத் தமிழர் 'கணியம்' என்று அழைத்தனர். சோதிடக் கலை புரிந்தோரைக் கணியன் என்று குறிப்பிட்டுள்ளனர். கணியன் என்றால் நாள், கோள் நிலையைக் கொண்டு வருங்கால நன்மை, தீமைகளைக் கணிப்பவன் என்று பொருள்.

ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் திருமணம் ஒரு முக்கியமான நிகழ்வாகும். மணநாளுக்கு ஏற்ற முகூர்த்தம் குறிப்பதற்குக் கணியனை (சோதிடன்) முன்னிட்டுச் சான்றோர்களுடன் கூடி மணமகள் இல்லத்திற்கு வருகின்றனர். இச்செய்தியை,

"நெறி அறி செறி குறி புரிதிரிபு அறியா அறிவனை முந்துறீஇ
தகை மிகு தொகை வகை அறியும் சான்றவர் இனமாக"(கலி.39:46,47)

என்று தோழி தலைவன் மணநாள் குறிக்க வந்தமையை தலைவிக்கு கூறுகிறாள்.

**மருத்துவக்கலை:**

உலகில் என்று உயிர்கள் தோற்றம் பெற ஆரம்பித்ததோ அன்றே நோய்களும் பெருகிவிட்டன. பல கலைகளிலும் தேர்ச்சிப்பெற்று விளங்கிய பண்டைத் தமிழர்கள் மருத்துவக் கலையிலும் சிறப்பிடம் பெற்று விளங்கினர். மருத்துவக் கலையை உடைய மருத்துவர் நல்லச்சுதனார், மருத்துவர் தாமோதரனார் போன்ற புலவர்களும் அக்காலத்தில் இருந்தனர். உணவு முறையால் அமைந்த மருத்துவம் போன்றே மூலிகைகள், பூக்கள் மரப்பட்டைகள், இலைகள், வேர்கள்,

கிழங்குகள் துணையாக இயற்கை வழியாக அமைந்த மருத்துவமுறையும் நிலவியது.

“மரம்சா மருந்தும் கொள்ளார் மாந்தர்” (நற்.226)

**கல்விக் கலை:**

ஒரு தனிமனிதனை சமுதாயத்தில் தனித்துவப்படுத்திக் காட்டுவது கல்வியே ஆகும். இக்கல்விக் கலையின் இன்றியமையாமையைப் பண்டைத் தமிழா் நன்கு உணா்ந்திருந்தனா். சங்க காலத்தில் ஏறத்தாழ ஐநூறு புலவா்கள் வாழ்ந்துள்ளனா். இவா்களில் அரசரும், பெண்டிரும் பலரும் அடங்குவா். குறவா் குடிப்பிறந்த குறயெயினியும், இளவெயினியும், குயவா் குடிப்பிறந்த வெண்ணிக் குயத்தியும் சிறந்த புலவா்களாக விளங்கியுள்ளனா். கவிபாடும் திறம் உடைய கல்வி வல்ல நன்மக்கள் அன்று மிகுதியாக இருந்திருக்க வேண்டும். “புகழேந்திப் புலவா் காலமான 14-ம் நூற்றாண்டில் உழவன், கொல்லன், தட்டான், தச்சன், மஞ்சிகன் (முடித்திருத்துபவன்) முதலிய பல்வகைத் தொழிலாளரும் சிறந்த செய்யுள் செய்யும் ஆற்றல் பெற்றிருந்தமையால் பண்டைக் கால கல்விப் பரப்பு அறியப்படும். ஆறலைக் கள்வா் கூட அக்காலத்திற் கற்றுவல்ல பாவலராயிருந்திருக்கின்றனா்.

கற்பிப்பவருக்கு அவ்வப்போது உதவிகள் செய்தும் பொருள் கொடுத்தும் கற்க வேண்டும் என்ற பண்பு பண்டைத் தமிழரிடத்தே காணமுடிகின்றது. தன் ஆசிரியருக்குத் துன்பம் ஏற்படும் பொழுது, அதைத் தீா்ப்பதற்காக ஓடிவந்து உதவி செய்தும் மிகுந்த பொருளைக் கொடுத்தும் அவரைக் காப்பாற்றுவா்.

**சமையல் கலை:**

இவ்வுலகில் வாழும் மனிதா்கள் நிலைத்த புகழைப் பெறுவதற்கு கட்டாயம் அறச்செயல்கள் செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் இம்மைக்கு மட்டுமின்றி

மறுமைக்கும் புண்ணியம் உண்டாகும். எனவே, புகழையும், புண்ணியத்தையும் பெறுவதற்கு ஒரே எளிய நல்வழி விருந்தோம்புதலேயாகும்.

பழந்தமிழர்களில் அரசன் முதல் ஆண்டி வரை விருந்தோம்பும் பண்பில் சிறந்து விளங்கினர். அவரவர் வசதி வாய்ப்பிற்கு ஏற்ப விருந்து படைத்தனர். செல்வர்களும், வள்ளல்களும், மன்னர்களும்இன்சுவை உணவினைக் குறையாது வழங்கினர். பழங்காலத்தில் தமிழ்நாட்டு நகரங்களில் சமையற்சாலைகளின் நிலை எப்படி இருந்தது என்பதை அறிய பட்டினப்பாலை என்னும் நூல் உதவுகிறது. அட்டிற் சாலை அகலமானது பாதுகாப்பாக வலிய மதில் சூழ்ந்தது. மதிற்சுவரில் திருமகளுருவம் எழுதியிருக்கும். அதன் வாயில் இரட்டைக் கதவுகளால் ஆனது. சோழநாட்டு காவிரிப்பூம்பட்டிணத்திலுள்ள அக்கதவுகளில் சோழன் ஆட்சி அடையாளமாகப் புலியுருவம் பொறிக்கப்பட்டிருக்கும். பேரளவாக விருந்தோம்புகின்ற வகையினால் நிரம்ப அளவில் சோறு வடிக்க நேர்ந்தது. அதனால் ஒழுகிய கொழுங் கஞ்சி நீர் ஆறுபோலத் தெருவிற் பரந்து செல்லும். அக்கஞ்சி நீரைப் பருகுவதற்கு எருதுகள் ஒன்றை ஒன்று தள்ளிக் கொண்டு வந்து தம்முள் சண்டை இட்டுக்கொள்ளுதலும் உண்டு. அதனால் அந்நீர் சேறாகி உலர்ந்துவிடும். பின்னர் அவ்வழியே தேர்கள் செல்லும் பொழுது புழுதி உண்டாகி நாலாபக்கமும் பரந்து சித்திரங்கள் தீட்டப்பெற்ற வெண்ணிற மாளிகைகளிற் படிந்து அவற்றை அழுக்காக்கிவிடும். அப்போது அம்மாளிகையின் தோற்றம் புழுதியைப் பூசிக்கொண்ட யானைகளைப் போல் காணப்படும். இதனை

“புலிப் பொறிப் போர்க்கதவின்
……………………
நீறு ஆடிய களிறு போல
வேறுபட்ட வினை ஓவத்து
வெண் கோயில் மாசு ஊட்டும்”(பட்டி.40-50)

என்ற பட்டினப்பாலை அடிகளால் உணரமுடிகின்றது. உயிர்வாழ்க்கைக்கு ஆதாரமாக இருப்பது சமையற்கலை. அக்காலத்தில் ஆட்டிற்கலை எனப்பட்டது.

**சலவை கலை:**

சங்க கால மக்கள் தூய்மையான ஆடையை உடுத்தினர். அவர்கள் அணிந்த ஆடைகள் மாசில் தூஉடை எனச் சிறப்பித்துச் சொல்லப்பட்டது. ஆடைகள் நன்றாக வெளுத்து உடுத்தப்பட்டது. ஆடை வெளுக்கும் வேலை செய்வோர் காழியர் எனப்பட்டனர். இவர்கள் ஆடையை வெளுக்க உவர் மண்ணைப் பயன்படுத்தினர்.

ஆடைவெளுக்கும் கலையில் பெண்களும் சிறந்து விளங்கினர். இப்பெண்கள் புலைத்தியர் எனப்பட்டனர். நாள் தோறும் களர் நிலத்தில் உண்டாக்கிய கிணற்றைத் தோண்டி ஆடைகளை துவைத்து வெளுக்க வைப்பர். களர் நிலத்தில் ஊறும் உவர்நீர் ஆடையிலுள்ள அழுக்குகளைப் போக்கும் இயல்புடையது. ஆதலால் புலைத்தியர் அன்றாடம் உவர்நீர் கிடைக்கும் கிணற்றிலிருந்து நீரெடுத்து துணிகளைத் துவைத்து சலவை செய்தனர்.

"உடைஓர் பான்மையின் பெருங்கை தூவா
வறனில் புலைத்தி எல்லித் தோய்த்த
புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு"(நற்.90:2-4)

"நலந்தகைப் புலத்தி பசைதோய்ந் தெடுத்துத்
தலைப்புடைப் போக்கித் தண்கயத் திட்ட
நீரிற் பிரியாப் பரூஉத்திரி கடுக்கும்"(குறுந். 330:1-3)

இவற்றால் பண்டைய தமிழ் மக்கள் சலவைக் கலையை நன்கு அறிந்திருந்தனர் என்பது புலனாகிறது.

**கைவினைக் கலை:**

பண்டைத் தமிழர் பனை, தென்னை மர ஓலைகளைக் கொண்டு அன்றாட தேவைக்குரிய பலவிதமான பொருட்களைச் செய்தனர். ஓரிடத்தில் இருந்து மற்றோரிடத்திற்குப் பொருட்களைக் கொண்டு செல்லப் பயன்படும் கூடை வகைகள், படுத்துக்கொள்ளப் பயன்படும் பாய்கள், வெயில், மழை இவற்றினின்றும் பாதுகாப்புத் தரும் வகையில் பனங்குடைகள் போன்றவற்றைச் செய்ததற்கான சான்றுகள் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன.

**குடை:**

குடைகள் பனையோலை அல்லது தென்னை ஓலை கொண்டு செய்யப்பட்டன. அகநானூற்றுப் பாடலொன்று, “கோடுடைத் தலைக்குடை சூடிய வினைஞர்” என்று கூறுகிறது. இதைத் தலையில் அணியும் ஓலைத் தொப்பியமாகவும் கருதலாம்.

**கூடை:**

ஓலைகளைப் பயன்படுத்தி அக்காலத்தில் பலவிதமான கூடைகள் செய்தனர். அவை வட்டி புட்டில், குடை எனப்பட்டன. ஓலை கொண்டு செய்யப்பட்ட இக்கூடைகள் சாதாரணமனவை. விறை குறைந்தவை என்றாலும் அவையும் கலைத்திறனோடு செய்யப்பட்டன.

‘‘வராஅல் சொரிந்த வட்டி’’ (ஐங். 48:2)

‘‘போழின் புனைந்த வரிப்புட்டில்’’ (கலித்.117:8)

‘‘சோறு பொதி வெண்குடை’’ (அக.நா.121:12)

**வேட்டையாடுதல்:**

ஆதிகால மனிதன் விலங்கோடு விலங்காக வாழ்ந்த காலத்திலே வேட்டையாட ஆரம்பித்திருக்க வேண்டும். அன்றே தொடங்கிய வேட்டையாடும் கலை

காலந்தோறும் வளர்ந்து சிறந்து விளங்குகின்றது. வேட்டையாடச் செல்லும் போது தேவையான கருவிகளுடன் செல்வர். காட்டின் எல்லாத் திசைகளிலும் அலைந்து வேட்டை யாடுவதற்குரிய விலங்குகள் உள்ள இடத்தை அறிதலும், சரியான இடமறிந்து வலை விரித்தலும், பதுங்கிய இடத்தில் இருந்து விலங்கை வெளிப்படச் செய்தலும், வலையில் சிக்கியவுடன் அஞ்சாது பயந்து தாக்குதலும் வேட்டைக் கலைக் கூறுகளாகும்.

வேட்டைக்குச் செல்வோர் சென்ற காட்சியை கபிலர்,
‘‘செம்பொறிக் கேற்ற வீங்கிறைத் தடக்கையின்
வண்ண வரிவில் ஏந்தி அம்புதெரிந்து
இயலணிப் பொலிந்த வீகை வான்கழல்
…………..
முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமல்
திளையாக கண்ண வளைகுபு நெறிதர’’(குறிஞ்சி.123-132)

எனக் குறிஞ்சிப்பாட்டில் கூறியுள்ளார். பலர் சேர்ந்து வேட்டை நாயுடன் செல்வதே வழக்கம். அவ்வாறு சென்று வேட்டையாடும் பொழுது அவர்கள் பிரிந்து சென்று வேட்டையாடும் பொழுதும் அவர்கள் பிரிந்து சென்று வேட்டையாடிய பின்னர், மீண்டும் எல்லோரும் ஒன்று சேரவும், வேட்டை நாயை அழைப்பதற்கும் ஊது கொம்பினை ஊதுதல் வழக்கம் இதனை,

‘‘ஊதல் வேண்டுமாற் சிறிதே வேட்டொடு
வேய்பலில் அழுவத்துப் பிரிந்தநின்
நாய்பயிர் குறிநிலை கொண்ட கோடே’’(அகநா.318:13-15)

**தோல் கலை:**

இயற்கையோடு இயைந்து வாழ்ந்த பண்டைத் தமிழர் தோலின் பயனறிந்து வாழ்க்கைக்குத் தேவையான பொருளாகத் தோலைப் பதப்படுத்தி கலைநயமாக பதப்படுத்திய முறைகளைச் சங்கப் பாடல்களால் அறியமுடிகின்றது. சங்கப்புலவர்கள் பல இடங்களில் தோலை உவமையாகப் பயன்படுத்தி உள்ள

பாடல்களின் வாயிலாகத் தோலின் நிறம், தன்மை, பயன் ஆகியவற்றை அறிய முடிகின்றது. அதள், பச்சை, உரிவை, உரி, சருமம் போன்ற தோலுக்கு வழங்கிய வேறு பெயர்களாகும் இதனை,

“உழை அதள்” (ம.கா.310)
“நல்லேற்று உரிவை” (அகநா.334:1)
“தைப்புஅமை சருமத்தில்”(பரி.21:3)

என்ற சங்க இலக்கிய அடிகளால் தெரிந்து கொள்ள முடிகிறது.

**உலோகக் கலை:**

பண்டைத் தமிழர் பல்வேறு உலோகங்களைப் பயன்படுத்தித் தங்களுக்குத் தேவையான பொருட்களைச் செய்வதில் சிறப்புற்றிருந்தனர். செம்பு, வெள்ளி, பொன் ஆகிய உலோகங்களைக் கொண்டு பாத்திரங்கள் செய்யப்பட்டதற்கான சில சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. நற்றிணைப் பாடலொன்றில் கம்மியன் செம்பால் செய்து கடைந்து வைத்த பானை எனப்பொருள்பட

“கம்மியர் செம்பு சொரி பானை”(பொருந. 86)

என்ற குறிப்பு காணப்படுகின்றது.

செல்வந்தர் இல்லங்கிளல் அன்றாடத் தேவைக்கப் பொன்னாலும், வெள்ளியாலும் பாத்திரங்களைப் பயன்படுத்தினர். வியரக் கற்கள் இழைத்த கலன்களும் வழக்கில் இருந்தன. கரிகாலன் அரண்மனையில் இருந்த பணிப் பெண்டிர் அரசனுக்கும், அவனுடைய விருந்தினர்களுக்கும் பொற்கிண்ணத்தில் கள்ளை ஊற்றிக் கொடுத்தனர்.

**தச்சுக்கலை:**

இயற்கைத் தந்தப் பரிசு மரங்கள். அம்மரங்களை அறுத்து பலவகையான பொருட்களை செய்வதே ஒரு தனிக்கலை. அத்தொழிலைச் செய்பவர்களை தச்சர்கள் என்பர். தகுதியுள்ள மரங்களை அறுத்து வீடமைத்தற்கும், வண்டி தேர் முதலியன செய்தற்கும் வழி கண்ட பெருமை தச்சுக்கலைக்கே உரியதாகும். மக்கள் சுமந்து செல்லுதற்குரிய சுமையை எளிதிலே எடுத்துச் செல்வதற்கு ஏற்ற வண்டிகளையும், மக்கள் விரைந்து செல்லக்கூடிய தேர் முதலிய ஊர்திகளை உண்டாக்கிய தச்சுக்கலையின் நுண்ணுணர்வே ஆகும்.

சங்க காலத்தில் தச்சுக்கலை சிறப்பு பெற்றிருந்தது. கண்ணைக் கவரும் வண்ணம் நேர்த்தியான தேர்கள் செய்யப்பட்டதை,

''கண்ணோக் கொழிக்கும் பண்ணமை நெடுந்தேர்''(அகநா.234:8)

என்ற அகநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம்.

**தையல் கலை:**

சங்ககாலத் தமிழர்கள் நேர்த்தியான ஆடையை நெய்வதில் வல்லவராய் இருந்தனர். ஆள்பாதி, ஆடைபாதி என்பதற்கிணங்க மக்களை அழகுப்படுத்திப் பார்க்கும் கலைகளுள் ஒன்று தையல் கலை. உயர்குடி மக்கள் மெத்தென்ற படுக்கைகள் தயாரித்து அதில் துயில் கொண்டனர். அவர்கள் அணிந்த ஆடைகளில் சிறியனவும் பெரியனவுமான பூ வேலைப்பாடுகள் செய்யப்பட்டமைக்கான சான்றுகள் உள்ளன. அரசியல் அலுவலரும் உயர்குடிப் பெண்டிரும் சட்டையும் கச்சையும் அணிந்திருந்தனர்.

''.....................படம்புக்குப்
பொருகணை தொலைச்சிய புண்தீர் மார்பின்
விரவுவரிக் கச்சின்'' (பெரும்.69-71)

நீராடுவதற்குத் தனி உடை உடுத்தினர். அது புட்டகம் எனப்பட்டது.

"புட்டகம் பொருந்துவன புனைகு வோரும்"(பரி.12:17)

இவற்றால் தையல்கலை சிறப்புற்றிருந்தமை புலனாகும்.

**நெசவுக்கலை:**

மனிதனின் அடிப்படைத் தேவை உணவு, உடை, உறையுள், உணவினை அடுத்து இன்றியமையாது வேண்டப்படுவது ஆடையாகும். நாகரீகம் வளராத மிகப் பழங்காலத்திலேயே மக்கள் இலை, தழைகளையும், ஆடைகளையும், மரப்பட்டைகளையும், மான், புலி முதலியவற்றின் தோலினையும் உடையாக உடுத்தி வாழ்ந்தனர். நாளடைவில் மக்கள் தங்கள் நுண்ணறிவின் திறத்தால் பருத்தியின் பஞ்சினை நூலாக நூற்று ஆடையாக நெய்து அணியத்தொடங்கிய காலமே மனிதனின் வரலாற்றில் ஒரு புதிய திருப்பமாகும். அப்புதிய முயற்சியின் விளைவால் தோன்றிய கலையினை நெசவுக்கலை என்று கூறுகிறோம்.

விவசாயத்திற்கு அடுத்த நிலையில் மிக முக்கிய இடத்தினைப் பெற்றிருந்தது. ஆடையைப் பற்றிய குறிப்புகள் தொல்காப்பியத்தில் காணப்படுவதால் இந்நெசவுக் கலையின் தொன்மையினை நன்கு அறியமுடிகிறது.

தொல்காப்பியர்,

"கூழை விரித்தல் காதொன்று களைதல்
ஊழனி தைவரல் உடைபெயர்த் துடுத்தலோ
டூழி நான்கே இரண்டென மொழிப"[(20)]

எனக் குறிப்பிடுகின்றார்.

சங்க கால இலக்கியங்களில் மிகத் தெளிவாக நெசவுக்கலை வளர்ந்த நிலையைக் காண முடிகிறது. நெசவுக்கலைக்குப் பருத்தி மிகவும் இன்றியமையாத மூலப் பொருளாக விளங்கியது.

பருத்திப் பஞ்சை அதனுடைய கொட்டையிலிருந்து பிரித்தெடுக்க வில்லினைப் பயன்படுத்தினர் என்பதை அகநானூற்றுப் பாடலடியாலும் நற்றிணைப் பாடலடியாலும் அறியலாம்.

''வில்லெறி பஞ்சின் வெண்மழை தவழும்''(அகநா.133:6)

''அழிதுளி பொழிந்த இன்குரல் எழிலி
எஃ.குறு பஞ்சிற் றாகி''(நற்.247:3-4)

பின்னர் பருத்திக் கொட்டையை நீக்கித் தூய்மை செய்யும்போது பஞ்சின் புறத்தோலினையும் எஞ்சி நிற்கும் கொட்டையையும் தூசினையும் நீக்குவதற்காக நன்றாக புடைத்தெடுப்பர்.

தறி நெய்து அறுக்கப்பட்டமையால் அறுவை என்றும் நெய்த உடையினைச் சுருக்கமின்றி மடித்து மடித்து விற்றமையால் மடி என்ற பெயரும் வழங்கப்படுகின்றது. பண்டைத் தமிழர் பஞ்சைப் பயன்படுத்தி நெய்த ஆடைகளே அல்லாமல் பட்டு நூலைப் பயன்படுத்திப் பட்டாடை நெய்தனர்.

**வேளாண் கலை:**

மனித வாழ்க்கைக்கு அடிப்படையானது உணவு. உணவு இல்லையேல் பண்பாடும் இல்லை. பழம்பெருமையும் இல்லை. உணவுப் பொருளின் இன்றியமையாமையை உணர்ந்து அவற்றைப் பெருக்கினர். பண்டைத் தமிழரின் வாழ்வியலைச் சித்தரிக்கும் சங்க இலக்கியங்கள் வேளாண்மைப் பற்றிய செய்திகளைப் பல்வேறு நிலைகளில் விளக்கமாகத் தருகின்றன. சங்க காலத்தில்

வேளாண்மை உயிர் காக்கும் கலையாகப் போற்றப்பட்டது. வேளாண்மைக்கு அடித்தளமாய் அமைவன நிலமும், நீரும் ஆகும். இவற்றின் இணைப்பே உணவுப் பொருள்களின் ஆக்கமாகும்.

பண்டைத் தமிழர் நிலத்தினை இயற்கை அமைப்பிற்கு ஏற்ப நான்கு வகைகளாகப் பிரித்தனர். அவை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பனவாகும். அந்தந்த நிலத்தின் தன்மைக்கேற்ப வேளாண் தொழிலை மேற்கொண்டனர்.

பருவத்தே பயிர் செய்வது வேளாண் கலைக்கு ஏற்றது. மழைபெய்யும் காலத்தில் வேளாண்மை செய்தனர். வேளாண்மைக்கு உதவும் வகையில் பெய்யும் மழையைத் ''தொழில் மழை'' என்ற தொடரால் அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது எனினும் நீர்வளம் எக்காலத்தும் இருக்கக்கூடிய வகையில் ஏரி, குளம், கிணறுகளை அமைத்தனர். பருவம் தொடங்கும் முன் மழை பெய்யும் வாய்ப்பினை மேகத்தின் இயக்கத்தைக் கொண்டு அறிந்தனர்.

**அணிகலன்கள்: (ஒப்பனைகள்)**

கலைகளை வெளிப்படுத்துவதில் அலங்காரம் செய்து கொள்வதும் ஒரு தனிக்கலை. ஒரு நாட்டின் பண்பாட்டையும் நாகரீகத்தையும் காட்டும் பலவற்றுள் ஆடைகளும், அணிகலன்களும் சிறந்த இடம் பெறுகின்றன. பண்டைத் தமிழ் மக்கள் ஒப்பனைக்குப் பலவகையான அணிகலன்களைப் பயன்படுத்தி உள்ளனர். சங்க காலத்தில் மகளிர் இயற்கையில் கிடைக்கும் தளிர், மலர், தழை, மொட்டு, கொடி போன்றவற்றை காதுகளில் செருகியும், கழுத்தில் அணிந்தும், கைகளில் சுற்றியும் தலையிற் சூடியும் அணிந்து மகிழ்ந்தனர்.

நாகரீகம் வளர வளர பலவிதமான உலோகங்களை மனிதன் கண்டுபிடித்தான். இரும்பு, பித்தனை, செம்பு, ஈயம், வெள்ளி, பொன் முதலிய

உலோகங்கள் மக்களின் பயன்பாட்டிற்கு வந்தன. அவற்றைப் பல வகையான அணிகலன்களாககச் செய்து ஆண், பெண் இருபாலரும் தம்மை அழகு செய்து கொண்டனர். உலோகங்கள் மட்டுமின்றி முத்து, பவளம், வயிரம், நீலம், வயிடூரியம், கோமேதகம், மரகதம், மாணிக்கம், புட்பராகம் ஆகிய நவமணிகளையும் அணிகலன்களில் பதித்து அழகுபட அணிந்து மகிழ்ந்தனர்.

சங்ககால மக்கள் தலையணி, நுதலணி, காதணி, கழுத்தணி, தோளணி, மார்பணி, கையணி, விரலணி, இடையணி, காலணி எனும் பலவகையான அணிகலன்களை உடலுறுப்புகளில் அணிந்தனர். அணிகளால் அவர்களின் அழகு நலம் மேலும் சிறந்து விளங்கியது.

சங்க இலக்கியங்களில் அணி, பூண், பணி, இழை, கலன், நகை, குழை, தொடி, வளை முதலிய சொற்கள் அணிகலன்களைக் குறித்து வழங்கப்படுவனவாக உள்ளன. தொடக்கக் காலத்தில் காதுகளில் அழகுக்காகச் செருகிக் கொண்ட குழை(தளிர்) காலப்போக்கில் பொன்னாற் செய்யப்பட்டாலும் குழை என்னும் பெயரையே பெற்றுள்ளது. சுருளாகச் சுருட்டிக் காதில் அணிந்துக்கொள்ளப்பட்ட பனையோலை காதோலை எனவும், பூவிதழ் தோடு எனவும் பெயர் பெற்றது. தொடக்கத்தில் அரையில் அணிந்து கொண்ட கொடி அரை ஞான் எனப்பட்டது.

மகளிர் ஒப்பனையில் நுதலுக்கு முதன்மைக் கொடுத்து நுதலினும் அணிகலன்களை அணிந்து அழகு செய்து கொண்டனர். நெற்றிச்சுட்டி நெற்றிப்பட்டம், திலகம் ஆகிய நுதலணிகளை மகளிர் அணிந்தனர். திலகம் என்பது நெற்றிப் பொட்டைக் குறிப்பதன்றி நுதலில் அணியும் பொன்னாற் செய்யப்பட்ட ஓர் அணிகலனைக் குறிக்கும் பெயராகவும் சங்க காலத்தில் வழங்கப்பட்டுள்ளது. மகளிர் மட்டுமின்றி ஆடவரும் காதுகளில் அணிகள் அணியும் வழக்கம் இருந்தது.

சங்ககால மகளிர், பொலங்குழை, ஒண்குழை, கனங்குழை, சிறுகுழை, மகரக்குழை, கொடுங்குழை, தோடு ஆகியவற்றைக் காதுகளில் அணிந்தனர்.

மதுரை நகரச் செல்வ மகளிர் ஒண் குழலையும், தோட்டையும், தாளுருவியையும், ஆயர் மகளிர் சிறுகுழையையும் அணிந்திருந்தனர். புல்லிகை என்னும் காதணியைக் கலித்தொகை குறிப்பிட்டுள்ளது.

கழுத்தில் அணியப்படும் கழுத்தணிகள் அன்றும், இன்றும் ஏனைய அணிகளினும் மிகுதியாக அணியப்பெறுகின்றன. கழுத்தணிகள் நூற்றுக்கு மேற்பட்டவை உள்ளன என்கிறார் அ.இராகவன். முத்தும், மணிகளும், பிறவும் சேரக் கோர்த்த உருட்சி அமைந்த மூன்று வடமாகிய மாலையைக் கலித்தொகை குறிப்பிடுகிறது.

கடலில் கிடைக்கும் வெண்மையான சங்குகளை அறுத்து வளையாகச் செய்து மகளிர் அணிந்து கொண்டனர். சங்கை அறுத்துச் செய்யும் தோள் தொடியும் கைவளையும் ஐங்குநுறூற்றில் வளைப்பத்தில் கூறப்படுகிறது.

விரலின் அழகுக்காக மகளிரும், ஆடவரும் விரலணியை அணிவர். விரலணி அணியும் பழக்கம் அன்று முதல் இன்று வரை இருந்து வருகின்றது. விரலணிகள் மோசை, செங்கேழ் விளக்கம், மோதிரம், விரலணி, ஆழி என்னும் பெயர்களால் சுட்டப்பட்டுள்ளன. மோதிரங்கள் சுறாமீன் வடிவத்திலும், மீனின் அங்காந்த வாய் போன்ற வடிவத்திலும் செய்யப்பட்டன.

இவ்வாறாக ஒவ்வொரு வகையான அணிகலன்களைச் செய்து தங்களை ஒப்பனை செய்து கொண்டு சங்ககால மகளிர் தங்களின் கலைப் பண்பாட்டை வெளிப்படுத்தியுள்ளனர்.

**ஆடைகள்:**

சங்ககாலத்தில் ஆடைகள் பருத்தி, பட்டு, எலி மயிர் ஆகியவற்றால் நெய்யப்பெற்றன. இவற்றுள் பட்டாடை “நூலாக்கலிங்கம்” என அழைக்கப்பட்டது. நெய்தல் தொழிலில் ஈடுபட்டிருந்த காருகர் (சாலியர்)களுக்கெனத் தனிக்குடியிருப்புகள் இருந்தமையைச் சிலம்பு சுட்டுகிறது.

ஆடைகள் அறுவை, கலிங்கம், காழகம், கூறை, துகில் எனப் பல பெயர்களால் அழைக்கப்பட்டன. மெல்லிய ஆடைகள் துரை, புகை, பால், ஆவி, பாம்புரி ஆகியவற்றுடன் உவமை கூறப்படுகின்றன. இவை உரோமாபுரி மக்களால் விரும்பி அணியப்பட்டன. தமிழகத்தில் இருந்து நேர்த்தியான ஆடைகள் வருவதால் உரோம நாட்டின் செல்வவளம் தமிழகம் நோக்கிப் பாய்கிறது எனப் பெற்றோனியஸ் என்பவர் குறிப்பிட்டுள்ளார். சமுதாயத்தில் ஒவ்வொரு சாராரும் தத்தம் பொருள் வளத்திற்கும் மரபிற்கும் ஏற்ப வெவ்வேறு வகையான ஆடைகள் அணிந்தனர். ஏழைகள் மிக எளிய உடைகளை அணிந்தனர். அவர்களது ஆடை பாசிவேர் போன்ற துன்னல் ஆடையாக வருணிக்கப்படுகிறது.

செல்வர்களும், செல்வர்களைச் சார்ந்தவர்களும் மெல்லிய விலையுயர்ந்த கலை வேலைப்பாடு மிக்க ஆடைகளை அணிந்தனர். அவர்களது ஆடையின் ஒளி ஊடுருவும் மென்மை பாலாவி, நுரை, புகை, பாம்புரி ஆகியவற்றுடன் ஒப்பிடப்படுகிறது. பெண்கள் பூப்பு எய்திய போது செம்மை நிற உடைகளை அணிந்தனர். கலவியின் போது வெள்ளை நிற உடைகளை அணிந்தனர். பகலில் பட்டாடைகளையும், இரவில் பருத்தி ஆடைகளையும் பெண்கள் அணிந்ததாகப் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது. இவ்வாறாக ஒவ்வொரு செயல்பாடுகளிலும் கலைகளின் மூலம் பண்பாடுகளை வெளிப்படுத்தி உள்ளார்கள் சங்க கால மக்கள் என்பதை உணர முடிகிறது.

## தொகுப்புரை:

தொன்மைச் சிறப்பு மிக்க நம் தமிழினமானது தனக்கேயுரிய சிறப்பான கலை மரபுகளைப் போற்றி வளர்த்து வாழ்ந்துள்ளனர். மனிதன் காடுகளில் வாழ்ந்த காலத்திலேயே கலைகள் பற்றிய ஆர்வம் ஆரம்பித்துவிட்டது. தனது பொழுதுபோக்கிற்காகவும் வேலைச்சுமை அழுத்தாது இருப்பதற்கும் பாடலைப் பாடினான். பாடலோடு கைகளைத் தட்டி ஒலி எழுப்பி இசையை உண்டாக்கினான். தான் மட்டுமின்றி பிறரும் ஆடுமாறு ஆடல்கலைகளை உருவாக்கியமையும் பின்னர் படிப்படியாக சிற்பக்கலை, ஓவியக்கலை போன்ற பல கலைகளின் தோற்றமும் அவற்றை நடைமுறைப்படுத்தியுள்ள முறையும் பண்பாட்டோடு கொண்டுள்ள தொடர்புகளும் பற்றி விளக்கப்பட்டுள்ளது.

தமிழர்கள் இசைக்கு கொடுத்திருந்த உயர்வினையும் சிறப்பினையும் மற்றும் பெண்கள் யாழினை மீட்டும் திறம் படைத்தவர்களாகத் திகழ்ந்துள்ளதை உணர முடிகிறது. இசைக்கலையை ஆடல், பாடல், கொட்டு என மூவகையாகப் பிரிந்திருந்ததை அறிய முடிகிறது. இசைக்கருவிகள் இசைக் கலைஞர்கள் சங்க காலத்திலேயே தங்கள் வாழ்வின் ஒரு பகுதியாக கலைக்கும் முக்கியத்துவம் கொடுத்திருப்பதை பண்பாட்டின் வழி உணர முடிகிறது.

தமிழ் இலக்கிய வரலாற்றில் பொற்காலம் எனக் கருதப்பட்ட சங்ககாலத்தில் தோன்றியவை சங்க இலக்கியங்களாகும். உலக அளவில் கிரேக்க இலக்கியத்துடனும் இலத்தின் இலக்கியத்துடனும் ஒப்பிட்டுப் போற்றத்தக்க செவ்வியல் இலக்கியங்களே சங்க இலக்கியங்கள் ஆகும்.

தெரிந்த கருத்துகளையும் உணர்ச்சிகளையும் எடுத்துரைப்பதற்கு பயன்படும் கருவியாக மொழி திகழ்கிறது. அம்மொழியைப் பேசும் மக்களின் கொள்கைகளையும் குறிக்கோள்களையும் தன்னகத்தே கொண்டதாக, மனித

வாழ்க்கையை மையமாகக் கொண்டு இலக்கியங்கள் அமைகின்றன. மனிதனின் சிந்தனைக்கும், உணர்வுக்கும், கற்பனைக்கும் விருந்தாக அமைந்து, இன்புறும் ஆற்றலையும் பெற்றுத் திகழும் இலக்கியத்துள் தலைமைச்சான்ற இலக்கியமாகச் சங்க இலக்கியம் காணப்படுகிறது.

இன்றைய காலக்கட்டத்திலும் கோவில் திருவிழாக்களில் கூத்து, நாடகம் போன்ற நிகழ்ச்சிகள் நடக்கின்றன. ஆனால் சங்க கால மக்கள் அன்றைய காலக்கட்டத்திலே கூத்து நாடகங்களை பண்பாட்டின் ஒரு பகுதியாக வளர்த்து வந்தனர்.

சங்க காலத்தில் இசையும் கூத்தும் அக்கால மக்களின் பொழுதுபோக்கு காரணியாகவும் இருந்து வந்துள்ளன. இசையினையும், கூத்தினையும் எல்லோரும் நிகழ்த்துவதில்லை. அதற்கென்று ஒரு சில பிரிவினரே இருந்துள்ளன. அவர்கள் செய்வதை எல்லா மக்களும் கேட்டு இன்புறுவர் என்பது சிறந்த பண்பாட்டின் செயல்பாடாகும்.

ஊசல், அலவனாட்டு, பொய்தலாடல் முதலிய மகளிர் விளையாட்டுகளைப் போலவே குரவைக் கூத்து சிறந்த பொழுதுபோக்காக விளங்கியது. ஒரு நிலத்தினைச் சேர்ந்த மக்கள் பிறிதொரு நிலத்தில் சென்று குரவைக் கூத்தினை நிகழ்த்தினர். இதனால் சங்ககால மக்களிடம் சமுதாய ஒற்றுமை மேலோங்கி இருந்தது.

காதல் நோயால் வாடும் தலைவியின் நிலையைத் தவறாகப் புரிந்துக்கொண்டு தலைவிக்குப் பேய் பிடித்து விட்டதாக நற்றாய் நினைத்துக்கொண்டு, எந்த ஒரு தாயும் தன் குழந்தை மேல் வைத்திருக்கும் அன்பின் வெளிப்பாடாய் வேலனை அழைத்து வெறியாட்டு நடத்துகிறாள்.

கல் உலோகம், செங்கல், மரம் முதலியவற்றைக் கொண்டு கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் உருவங்கள் அமைக்கும் சிற்பக்கலையை தமிழர் பண்பாட்டின் வாயில்களாக அன்றே சங்ககால மக்கள் உருவாக்கியிருப்பது போற்றப்படுவதற்கு உரியதாகும்.

ஒரு நாட்டின் நாகரீகத்தின் அடையாளம் கட்டடக் கலை, கட்டடங்களின் அமைப்பு சிறப்பு. சங்ககாலக் கட்டடக் கலைஞர்களின் அறிவினையும் முயற்சியையும் வெளிப்படுத்தக் கூடியதாக உள்ளது. இசைக்கலை, ஆடற்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை மற்றும் கட்டடக் கலை போன்றவற்றில் சிறந்து விளங்கிய பழந்தமிழ் கலைஞர்களையும் அவர்களின் சிறப்பினையும் கலைகளின் வழி வெளிப்படும் பண்பாட்டின் மூலம் அறிந்துக்கொள்ளமுடிகிறது.

சங்ககால மக்களின் பண்பாட்டில் விளையாட்டு குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளது. ஆடவரும், மகளிரும் விளையாட்டில் மிகுதியான ஆர்வம் கொண்டிருந்தனர். இயற்கையான சூழலில் விளையாடி, சுத்தமானக் காற்றைச் சுவாசித்து உடல் வலிமைப் பெற்றிருந்தனர். ஆடவர், மகளிர் மட்டுமின்றி சிறுவர், சிறுமிகளுக்கும் தனித்தனி விளையாட்டுக்கள் இருந்தன. ஒத்த வயதுடையவர்கள் விளையாடும் மகளிர் தொகுதியினை “ஆயம்” என்றும் அழைக்கின்றனர்.

மனிதனிடம் கலையுணர்வு என்று வளரத் தொடங்கியதோ அன்றே கற்பனையும் வளர்ந்தது அதன் வெளிப்பாடு வருணனை. சங்ககால மக்கள் இயற்கையோடு இயைந்து வாழத்தொடங்கியவர்கள். சங்க இலக்கியங்களில் மக்களின் வாழ்வு நிலையினைக் கூறும்போது காலம், இடம், பொருள் போன்றவற்றை இயற்கைச் சார்ந்த நிகழ்வாகக் காட்டுகின்றன. இறைவனால் இவ்வுலகில் படைக்கப்பட்ட அனைத்தும் இயற்கையே ஆகும். மனிதனால் இயற்கையை வெல்ல முடியாது. இரசிக்க மட்டுமே முடியும்.

இன்று நாம் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் நல்ல நாள், நேரம் பார்க்கச் சோதிடரை அழைக்கின்றோம். இவ்வழக்கமானது சங்ககால மக்களிடமும் இருந்துள்ளது என்பதை அறிந்து கொள்ள முடிகிறது. பண்டைத் தமிழர்கள் சோதிடத்தை "கணியம்" என்றும் சோதிடரை "கணியன்" என்றும் குறிப்பிட்டுள்ளனர். எச்செயலுக்கும் நாள், கோள் நிலைகளைக் கொண்டு நன்மை, தீமைகளைக் கணிக்கும் பண்பாடானது சங்ககால மக்களிடமும் இருந்துள்ளமை புலப்படுகிறது.

மூலிகைகள், பூக்கள், மரப்பட்டைகள், இலைகள், கிழங்குகள், வேர்கள் போன்ற இயற்கை வழிச் சார்ந்த மருத்துவமுறையும் சங்ககாலத்தில் பின்பற்றப்பட்டுள்ளது.

மருத்துவம் மட்டுமின்றி சமையல் கலை, குடை, கூடை பின்னுதல், முத்துக்குளித்தல், மீன்பிடித்தல், சலவை செய்தல், வேட்டையாடுதல் போன்ற பல கலைகளிலும் கைத்தேர்ந்தவர்களாக சங்க கால மக்கள் திகழ்ந்துள்ளனர்.

உணவு இல்லையேல் பண்பாடும் இல்லை. பழம் பெருமையும் இல்லை என்பதை உணர்ந்த சங்ககால மக்கள் பருவத்தே பயிர் செய்தனர். நீர்வளம் எக்காலத்திற்கும் இருக்கக் கூடிய வகையில் ஏரி, குளம், கிணறுகளை அமைத்து நீரினைச் சேகரித்தனர்.

## சான்றெண் விளக்கம்:


1. டாக்டர்.தா.ஏ.ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், ப.86
2. Jean Paul Stare, What is literature? P.P. 26,27
3. Mukerjee.R, The flowering of India, 1964, P.V.
4. முனைவர் எ.ஃப்.பாக்கியமேரி, காலந்தோறும் தமிழர் கலைகள், ப.8
5. முனைவர் கு.வெ.பா.சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும், ப.12.
6. கலைக்களஞ்சியம், தொகுதி-III, ப.340
7. இளங்கோவடிகள், சிலம்பு.3-46
8. தொல்காப்பியர், பொருள், அகத்.நூ.53
9. மேலது, நூ.999
10. மேலது, நூ.36
11. முனைவர் எ.ஃப்.பாக்கியமேரி, காலந்தோறும் தமிழர் கலைகள்,
12. அ.தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள், பக்.296-297
13. இரா.இளங்குமரன், பாணர் பக்.2-3
14. கோபாலன், தமிழ் இலக்கிய கலைச் சொல் அகராதி, பக்.162-163
15. திருவள்ளுவர், திருக்குறள்.332
16. திவாகரமுனிவர், சேந்தன் திவாகரம்.1958, ப.216
17. டாக்டர். கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், ப.157
18. தொல்காப்பியர், பொருள், மெய்ப்பாட்டியல் நூ.14
19. செந்துறைமுத்து, தமிழக வரலாறு நாகரிகம் பண்பாடு, ப.358, 1981
20. தொல்காப்பியர், பொருள், மெய்ப்பாட்டியல் நூ.14

# முடிவுரை

தனிமனிதக் கூட்டமைப்பின் முதல்படியினது வளர்ச்சி நிலையே குடும்பமாகும். பழந்தமிழர்களின் வாழ்க்கை முறையானது செம்மைப்படுத்தப்பட்டு, நெறிப்படுத்தப்பட்ட நிலையில் ஆண், பெண் காதல் கொள்வதும் அன்பு நிறைந்த காதல் வாழ்க்கையும் துயரம் நிறைந்த காதல் வாழக்கையும் தோழி தலைவனை விரைவில் தலைவியைத் திருமணம் செய்துகொள்ளுமாறு களவு வாழ்க்கையை விட்டு நீங்கி, கற்பு வாழ்க்கைக்கு ஈட்டுச் செல்லும் பண்பாடும் குறிப்பிடப்பட்டுள்ளது.

களவு வாழக்கைக்குப் பின் கற்பு வாழ்க்கையில் திருமண வகைகள், முறைகள், மக்கட் பேற்றின் தன்மை, சிறப்புகள் பண்பாட்டு அடிப்படையில் சுட்டப்பெற்றது. பெண்கள் கணவன் மற்றும் குழந்கைளிடம் மட்டும் அல்லாமல் பிறருக்கு உதவும் ஈகைக்குணம் கொண்டவர்களாகவும் விருந்தினர்களைப் போற்றும் தலையாய பண்பினைப் பெற்றவர்களாகவும் இருந்த தன்மை போன்றவற்றின் அடிப்படையில் சங்க இலக்கியங்களில் குடும்பச் சூழலில் பண்பாட்டுச் சிந்தனைகள் என்பவை ஆராயப்பட்டுள்ளது.

சமுதாயம் என்பது அனைத்து மக்களும் ஒன்று சேர்ந்து ஒழுக்க நெறிகளின் அடிப்படையில் வாழும் முறையாகும். மனிதன் தனித்தனியாக வாழ்ந்த போது அவர்களிடம் எந்த விதமான பண்புகளும் சிறப்பானதாக அமைந்திருக்க வாய்ப்பில்லை. மனிதன் என்று சேர்ந்து வாழ முற்பட்டானோ அன்றே உயர் பண்புகளும் இலட்சியங்களும் தோன்ற ஆரம்பித்தன.

பழங்காலத்தில் வாழ்ந்த நம் முன்னோர்கள் அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் சில ஒழுங்கு முறைகளைக் கடைப்பிடித்தனர். அவை பின்னாளில் வழக்கமாக மாறிவிட்டது. வீட்டில் விளக்கேற்றுதல் ஒரு மங்களகரமான நிகழ்வு.

காக்கைக்கு உணவிடும் பழக்கம், இறைவனுக்காக விரதம் இருப்பது மற்றும் கடவுள் நம்பிக்கை மிகுந்தவர்களாகவும் இருந்துள்ளனர்.

நில அடிப்படையில் ஒவ்வொரு நில மக்களும், ஒவ்வொரு வகையான கடவுளை வழிபட்டுள்ளனர். சமயம் சார்ந்த தெய்வங்கள் இல்லையென்றாலும் தங்கள் நிலத்திற்கான கடவுளை வழிபட்ட பண்பாடு புலனாகிறது. தெய்வமானது மரங்களின் மீது உறைந்திருப்பதாகவும் நம்பியதால் மரங்களையும் தெய்வங்களாக வழிபட்டதை உணரமுடிகிறது.

கனவுகளில் நம்பிக்கை வைத்திருந்தனர். அனைத்து மக்களும் ஒன்று கூடி மகிழ்ந்து திருவிழாக்களையும் பண்டிகைகளையும் கொண்டாடி உள்ளனர். இதன் மூலம் தமிழர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே விழாக்கள் கொண்டாடியதோடு பண்பாட்டின் அடையாளமாகவும் விட்டுச் சென்றுள்ளனர்.

பழங்காலத் தமிழர்கள் ஓய்வுநேரத்தில் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என தனித்தனியாகப் பல வகையான விளையாட்டுக்களை விளையாடி மகிழ்ந்துள்ளனர்.

பழந்தமிழர்கள் பொருட்களை அளவிட அளவை முறைகளைப் பயன்படுத்தியமையும் எண்களைக் குறிக்க வெள்ளம், ஆம்பல், தாமரை போன்ற சொற்களையும், கலம், சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு, கழஞ்சு, பலம், மா போன்ற சொற்களை அளவீடுகளாகப் பயன்படுத்தியமையும் அறியமுடிகிறது.

பழந்தமிழர்கள் ஒவ்வொருவரும் தம் தகுதிக்கேற்ப பல தொழில்கள் செய்திருப்பதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. திணை அடிப்படையில் தொழில் நிலைகளைப் பார்க்கும் பொழுது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்,

பாலை என்று தனித்தனி நிலப்பிரிவாகப் பிரிக்கப்பட்டு தொழில் நிலைகள் நடைபெற்றுள்ளது.

குறிஞ்சி நிலத்தில் திணை விதைத்து, திணைப்புனம் காவல் காத்தும் தேனெடுத்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களையும், முல்லை நிலத்தில் ஆநிரைகளை மேய்த்தும் அதிலிருந்து பெறப்படும் பொருள்களை விற்று தொழில் செய்தும் வந்தனர். மருத நிலத்தில் உழவுத் தொழிலையே பிரதான தொழிலாக மேற்கொண்டனர். நெல் மிகவும் மதிப்புடையதாக இருந்தது. நில வளமும், நீர்வளமும் உயர்ந்தால் நாட்டு வளம் உயரும் என்பதை அறிந்த பண்டைத் தமிழர்கள் நீர்நிலைகளை அமைத்து நீரினைச் சேகரித்தனர். பயிர்களைத் திண்பதற்காக வரும் பறவைகளை விரட்டுவதற்காக இசைக்கருவிகளை இசைத்து விரட்டியுள்ளனர். இதன் மூலம் பண்டைத் தமிழர்கள் பிற உயிர்களின் மேல் கொண்டுள்ள அன்பினையும் உழவுத்தொழிலைப் பாதுகாத்தலையும் அவர்களின் பண்பாட்டின் மூலம் புலனாகிறது.

நெய்தல் நிலத்தில் பரதவர்கள் மீன்பிடித்தல், மீன் விற்றலையுமே தங்கள் தொழிலாகக் கொண்டிருந்தனர். விற்ற மீன்கள் போக மீதமிருந்தவற்றை வெயிலில் காய வைத்து அதனைக் கருவாடாக செய்து விற்றவை மீதமிருந்தவற்றை தங்களின் உணவில் பயன்படுத்திக் கொண்டனர். கடல் நீரைக் கொண்டு உப்பு விளைவித்தலையும் தங்களுடைய தொழிலாகக் கொண்டிருந்தனர். நெய்தல் நில மக்கள் மீன்களை விற்றும் உப்பு விளைவித்தும் தங்கள் வாழ்க்கையை மேம்படுத்திக் கொண்ட பண்பாட்டை அறிந்துக்கொள்ள முடிகின்றது.

பாலை நிலத்தில் உள்ள மக்கள் அவ்வழியாகச் செல்வோரை அச்சுறுத்தியும் கொன்றும் அவர்கள் கொண்டு செல்லும் பொருட்களைக் கவர்ந்தும் கொலைத் தொழில் செய்தும் தங்களுடைய கருவிகளைத் தீட்டுவதையும் தங்கள் தொழிலாகக்

கொள்வர். குறிஞ்சி நிலத்தில் பெறப்பட்ட தேனை முல்லை நில மக்களும் நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பையும் மீனையும் மருதநிலத்தில் விற்று அங்கு விளைந்த நெல்லை பண்டமாற்றாகப் பெற்றதிலிருந்து பண்டமாற்று முறையானது சங்க கால மக்களின் பண்பாட்டில் இருந்துள்ளதை அறியமுடிகிறது. உள்நாட்டு வாணிகம் மட்டுமின்றி வெளிநாட்டு வாணிகத்தையும் செய்து வந்தனர். பழங்கால மக்கள் நில வாரியாகத் தொழில்கள் செய்தாலும் வேறு சில தொழில்களையும் செய்து வந்தனர். அவர்கள் செய்த தொழில்களின் அடிப்படையில் தச்சர், கொல்லர், குயவர், சலவைத் தொழிலாளர், பாய்பின்னுபவர், நெசவுத்தொழிலாளர் என்று தாங்கள் செய்த தொழிலைச் செம்மையாகச் செய்து தங்கள் குடும்ப பண்பாட்டினை பேணி பாதுகாத்தனர்.

மனிதனுக்கு எப்பொழுது ரசிக்கும் தன்மை ஏற்பட்டதோ அன்றே கலை உணர்ச்சியும் தோன்ற ஆரம்பித்துவிட்டது. ஆயகலைகள் அறுபத்து நான்கினுள் இசை, நடனம், ஓவியம், சிற்பம், கட்டடக் கலை என்று பல கலைகளுக்கு வடிவம் கொடுத்தவர்கள் சங்க கால மக்கள். இசைக்கலையானது என்று மனிதன் தன் நாவில் இருந்து ஒலி எழுப்பினானோ அன்றே தோன்றிவிட்டது. கலைத்திறமைகளை வெளிப்படுத்த மன்றங்கள் இருந்தன. கூத்துக்கலையும் சங்ககால மக்களின் வாழ்வில் முக்கிய இடம் பெற்றிருந்தது.

மனதிற்கு அமைதியைத் தரும் இசையை இசைப்பதற்கென்றே யாழ், பறை, முழவு, முரசு, தட்டை, பதலை, ஆகுளி, குழல், சங்கு, பண் போன்ற இசைக்கருவிகளை பயன்படுத்தினர். பறையின் இசைக்கு மயங்காதவர்கள் யாருமில்லை என்பதற்கேற்ப இசைவிழாக்கள், ஆடல், பாடல் நிகழ்ச்சிகளில் பறைக்கருவி முக்கிய இடம் பெற்றுள்ளது. இசைக்கலை சிறப்புடன் அமைவதற்கு பாணன், பாடினி, அகவலர், கிணைஞர், பொருநர், கோடியர், வயிரியர் போன்ற இசைக்கலைஞர்களும் ஆர்வத்தோடு ஈடுபட்டிருந்தனர்.

ஒரு நாட்டினை அடையாளப்படுத்துவது அங்குள்ள கட்டடங்களின் அமைப்புகளே. அக்கட்டடங்களை அழகுப்படுத்துவது கட்டடக்கலைஞர்களின் சிறப்புமிக்க ஆற்றல் தான். சிற்பம் மற்றும் ஓவியக்கலைகளிலும் சிறந்து விளங்கியிருக்கின்றனர். ஒவ்வொரு கலைகளிலும் தமிழர்கள் சிறந்து விளங்கியிருக்கின்றனர் என்பதை அவர்களின் கலைகள் வழிப் பண்பாட்டின் மூலம் வெளிப்படுத்தி இருக்கின்றனர்.

விளையாட்டினையும் ஒரு கலையாகப் பார்த்து அக்கலையிலும் தேர்ச்சிப் பெற்று விளங்கினர். கல்வியைக் கூட ஒரு கலையாக பார்த்ததில் இருந்து சங்க காலத்தில் கல்வி கற்ற புலவர்கள் வாழ்ந்திருக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது. இயற்கை முறையில் அமைந்த மருத்துவ முறையையே பன்படுத்தி வந்தனர். நாம் உண்ணும் உணவைச் சமைப்பதே ஒரு கலை. அக்கலையின் மூலம் தாமும் உண்டு விருந்தினர்களையும் மகிழ்வித்துள்ளனர். உடை உடுத்துவது, அணிகலன்கள் அணிந்து தங்களை ஒப்பனை செய்து கொள்வது என்று ஒவ்வொரு கலைகளிலும் தனித்திறனை வெளிப்படுத்தி தமிழனுக்கு நிகர் தமிழன் தான் என்பதை பறைசாற்றுவதாகவே சங்க கால மக்களின் பாண்பாடானது திகழ்ந்துள்ளது.

மேலாய்வுக் களங்கள்: செம்மொழி இலக்கியங்கள், இலக்கணங்கள் என அனைத்திலும் காணலாகும் பண்பாட்டுக் கூறுகளை தனித்தனியாக ஆராயலாம்.

## துணை நூற்பட்டியல்

### முதன்மைச் சான்றாதாரங்கள்


1. முனைவர். பாலசுப்பிரமணியன் கு.வெ. — **நற்றிணை,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-600 098.

2. முனைவர். நாகராசன் வி — **குறுந்தொகை** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-600 098.

3. முனைவர். தட்சிணாமூர்த்தி அ — **ஐங்குறுநூறு** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-600 098.

4. முனைவர்.விசுவநாதன் அ — **கலித்தொகை** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-600 098.

5. முனைவர்.செயபால் இரா — **அகநானூறு** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை-600 098.

## துணை நூற் பட்டியல்

## துணைமைச் சான்றாதாரங்கள்


1. அகத்தியலிங்கம்.ச — **சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்கள்,** மணிவாசகர் பதிப்பகம், சென்னை,1997

2. அந்தோணிசாமி.அ — **இந்தியச் சமுதாயத்தின் கல்வியில் சவால்கள்** லடிஸ்கா பதிப்பகம், 3-T, சஞ்சாய நகர், பட்டுக்கோட்டை-614615.

3. அப்பாத்துரை.கா — **தென்னாட்டுப் போர்க்களங்கள்,** மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2001

4. அறவாணன்.க.ப. — **தமிழர் மேல்நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள்** தமிழ்க்கோட்டம், பாண்டிச்சேரி-1991.

5. அறிவுராஜ்.ந — **தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும்** பாவை பப்ளிகேஷன்ஸ், 142, ஜானி ஜான் கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை -600014.

6. ஆறுமுகம்.அ — **சங்க இலக்கியத்தில் குடும்பம், அரசு உடைமை** பாவேந்தர் பதிப்பகம், திருமழபாடி, அரியலூர்-1994.

7. இராசமாணிக்கனார்.மா — **தமிழகக் கலைகள்,** புலவர் பதிப்பகம், சென்னை-2009.

8. இராமகிருட்டிணன்.ஆ — **தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும்**
சர்வோதய இலக்கியப் பண்ணை,
32, மேல வெளி வீதி
மதுரை - 625001.

9. இளங்குமரன்.இரா — **பாணர்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்

10. கார்த்திகேசு சிவத்தம்பி — **பண்டைத் தமிழ்ச் சமூகம்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ, இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை-600 098.

11. கைலாசபதி.க — **பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும்,**
நியூசெஞ்சூரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
சென்னை -2006

12. சண்முகம்பிள்ளை.மு — **சங்கத்தமிழரின் வழிபாடும் சடங்குகளும்,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை -1996

13. சண்முகம்பிள்ளை.மு — **சங்கத்தமிழர் வாழ்வியல்,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை -1997

14. சாரங்கபாணி.இரா, சாமிநாதன்.த — **சங்க இலக்கிய மேற்கோள்கள்**
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்-608001.

15. சிதம்பரனார்.சாமி — **எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை-600 098.

16. சுப்பிரமணியன்.வே.சு. — **தொல்காப்பியம்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை-1986

17. சுப்பிரமணியன்.கா — **சங்ககாலச் சமுதாயம்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ, இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை-600 098 -2006

18. செந்துறை முத்து — **சங்ககாலச் சமுதாயச் சிந்தனைகள்**
அருண்மொழிப் பதிப்பகம்,
சேலம்-1989

19. செல்லம்.வே.தி — **தமிழக வரலாறும் பண்பாடும்**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு,
பாரிமுனை,
சென்னை -600108.

20. செல்வராசு.அ — **சங்க இலக்கியத்தில் பாழ்நிலப் பயணம்**
ஸ்ரீநிதி ஆப்செட் பிரிண்டர்ஸ்,
40, அல்லிமால் தெரு,
திருச்சிராப்பள்ளி-620008.

21. தட்சிணாமூர்த்தி.ஆ — **தமிழர் நாகரீகமும் பண்பாடும்**
யாழ் வெளியீடு
AP1108 தென்றல் குடியிருப்பு
மூன்றாவது தெரு,
மேற்கு அண்ணா நகர்,
சென்னை-600 040 - 2002

22. தமிழண்ணல் **தொல்காப்பியம்**
மீனாட்சி புத்தக நிலையம்,
மயூரா வளாகம்,
48, தானப்ப முதலி தெரு,
மதுரை-625001.

23. தனஞ்செயன்.ஆ **சங்க இலக்கியமும் பண்பாட்டுச் சூழலியலும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ, இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை-600 098 -2010

24. திருநாவுக்கரசு.க.த **தமிழ்ப் பண்பாடு,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 2001

25. திலகவதி.க **சங்ககால மகளிர் வாழ்வியல்,**
இறையருள் பதிப்பகம்,
திருச்சிராப்பள்ளி-1987.

26. நாகராஜன்.கி **மலரும் இந்தியச் சமுதாயத்தில் கல்வி**
ஸ்ரீராம் பதிப்பகம்,
74B/1, விவேகானந்தர் தெரு,
காந்தி நகர்,
சாலிகிராமம்,
சென்னை - 600093.

27. பக்தவச்சல பாரதி.சீ **பண்பாட்டு மானிடவியல்,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,1990

28. பகவதி.கு **தமிழர் ஆடைகள்**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.

29. பாண்டுரங்கள்.அ **சங்க இலக்கியம்**
(சமயம், வழிபாடு, அரசு, சமூகம்)
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர்,
சென்னை-600 098.

30. பரிமேலழகர் **திருக்குறள்**
பூம்புகார் பிரசுரம்
63, பிராட்வே,
சென்னை

31. பாலசுப்ரமணியன்.கு.வெ. **சங்க இலக்கியத்தில் சமூக அமைப்புகள்,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்

32. பிள்ளை.கே.கே. **தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்**
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,
இரண்டாம் முதன்மைச் சாலை,
மையத் தொழில் நுட்பப் பயிலக வளாகம்,
தரமணி, சென்னை-600113.

33. பாஸ்கரன்.க **சமுதாயத் தத்துவம்**
தத்துவமையம்,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்

34. பெருமாள்.ஏ.என் **தமிழ் நாடகம் ஓர் ஆய்வு**
தமிழ்ப் பதிப்பகம் -1979

35. மகாதேவன் கதிர் **பழந்தமிழர் வீரப்பண்பாடு**
ஏராக வெளியீடு
மதுரை,1980

36. மாணிக்கவாசகர்.இரா (உ.ஆ) சிலப்பதிகாரம்,
உமா பதிப்பகம்,
சென்னை -1995

37. மாதையன்.பெ **சங்க கால இனக்குழச் சமுதாயம் அரசு உருவாக்கமும்**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
142, ஜானி ஜான் கான் சாலை,
இராயப்பேட்டை,
சென்னை -600014.

38. முத்துலக்குமி.வே **பண்பாட்டுச் சிந்தனைகள்**
அனிதா பதிப்பகம்,
63, பட்டர்வொர்த் சாலை,
திருச்சிராப்பள்ளி-620002.

39. மீனாட்சி சோமசுந்தரம்.ச.மெ **சங்க இலக்கியக் கட்டுரைகள் தொகுதி-I**
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்

40. ரோசாரியோ.ஆ **வாழ்வியல் சிந்தனைகள்**
நாஞ்சில் பதிப்பகம்,
67/1, கோர்ட் ரோடு,
நாகர்கோவில்.

41. வரதராசன்.மு தமிழ் இலக்கிய வரலாறு,
சாகித்திய அகாதெமி,
புதுதில்லி.

42. வேங்கடசாமி மயிலை சீனி **நுண்கலைகள்,**
வசந்தா பதிப்பகம்,
சென்னை, 2003

43. வரதராசன்.வெ **தமிழரின் ஒப்பகைக் கலைத்திறன்**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்

## நிகண்டுகள்


| | | |
|---|---|---|
| 1. | சண்முகம்பிள்ளை.மு, சுந்தரமூர்த்தி.இ | திவாகர நிகண்டு (1,2) தொகுதிகள் சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை -1993. |
| 2. | திவாகர முனிவர் | சேந்தன் திவாகரம், சென்னை -1958 |


## கலைக்களஞ்சியங்கள்


| | | |
|---|---|---|
| 1. | சிங்காரவேலு முதலியார்.ஆ | அபிதான சிந்தாமணி, தமிழ்க் கலைக்களஞ்சியம் செம்பதிப்பு, சீதை பதிப்பகம், B/16, தோப்பு வெங்கடாசலம் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை -600005. |
| 2. | சுந்தரம்.வீ.ப.கா. | கலைக்களஞ்சியம் தொகுதி-(3,4,7), தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை |


## ஆய்வுக்கோவை


| | | |
|---|---|---|
| 1. | அப்துல் மஜீத் | ஆய்வுக்கொத்து, ஆராய்ச்சிப் பேரவை, சென்னை-1973 |

## ஆங்கில நூல்கள்

1. Kuppusamy.B — An Introduction to Social Psychology Media Promoters and Publishers Pvt. Ltd., Chennai

2. Ganguly.S.N — Tradition, Modernity and Development A study in Contemporary Indian Society, The Macmillan Company of India Ltd., Chennai-1997

# பின்னிணைப்புகள்

## விருந்தோம்பல்



## ஏறுதழுவுதல்



## கூத்துக்கலை



## ஓவியக்கலை



## சிற்பக்கலை



## நடனக்கலை



## ஐவகை நிலங்கள்



## திருவிழா



# யாழ் இசைக்கருவி




# கழங்காடுதல்



தொகுதி-7 எண் 1
Vol. 7 No. 1

மார்கழி-பங்குனி 2050
January - March 2019

ISSN : 2321-0737



பல்கலைக் கழக மானியக் குழு அங்கீகாரம் பெற்றத் தமிழ்ப் பன்னாட்டு ஆய்விதழ்

UGC APPROVED INTERNATIONAL THAMIZH JOURNAL

UGC Journal No.40719

# செம்மொழித் தமிழ்

(பன்னாட்டுப் பன்முகத் தமிழ் காலாண்டு ஆய்விதழ்)
(கலை & மனிதவியல்)

# Journal of Classical Thamizh

(A Quarterly International Multilateral Thamizh Journal)
(Arts & Humanities)



***Published by***
**RAJA PUBLICATIONS**
**No. 10 (Upstair), Ibrahim Nagar, Khajamalai,**
**Tiruchirappalli - 620 023, Tamil Nadu, India.**
**Mobile : 9600535241**
**Website : www.rajapublications.com**

19 பகுதி-3 Part -3

# சங்ககால மக்களின் சடங்கு முறைகள்

**பா. சாந்தி**

முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்), தமிழ்ப் பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, தமிழ்நாடு, இந்தியா.

**முனைவர் கா.கணநாதன்**

நெறியாளர் & உதவிப் பேராசிரியர், தமிழ்ப் பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி, தமிழ்நாடு, இந்தியா.

**முன்னுரை :**

மக்கள் தாங்கள் செய்துவரும் வழிபாடு, விழாக்கள் முதலியவற்றை முந்தையோர் முறைப்படி செய்து வந்தனர். இங்ஙனம் பரம்பரை வழக்கமாகச் செய்துவரும் செயல்களே சடங்குகளாம். இச்சடங்கு முறையானது சங்க கால மக்களின் அன்றாட வாழ்வினில் பயன்பட்ட நிலையினை அறிந்து கொள்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

"சடங்கு என்பது சாஸ்திர விதி பற்றியும் வழக்கம் பற்றியும் அனுஷ்டிக்கும் கிரியை என்று சென்னைப் பல்கலைக்கழக தமிழ் பேரகராதி குறிப்பிடுகிறது. மக்கள் தமது பிறப்பு தொடங்கி வாழ்க்கை முற்றிலும், தாங்கள் புரியும் பல்வேறு நிகழ்ச்சிகளிலும் பற்பல சடங்குகளை மேற்கொண்டிருந்தமையும் இலக்கியங்களால் புலனாகின்றன.

**தெய்வம் தொழல்:**

**"அவனின்றி அணுவும் அசைவதில்லை, அவன் துணையின்றி எச்செயலும் நடைபெறுவதில்லை"**

வாழ்க்கையில் அனைத்துச் செயல்களுக்கும் தெய்வத்தின் துணை இன்றியமையாததாகும்.

இம்மை வாழ்வில் தாம் விரும்பும் பயன்களைத் தெய்வத்திற்குச் செய்யும் பூசை முதலியவற்றால் பெறலாம். மழைவளம் பெருகவும், தங்கள் வாழ்வு சிறக்கவுமே தெய்வத்தை வழிபடுகின்றனர். விழா எடுத்தல், வெறியாட்டு போன்ற தெய்வவழிபாடுகளில் அவற்றைச் செய்வதற்குரிய வேலன், அந்தணர் முதலியோர் அவற்றை நடத்தி வைக்கின்றனர்.

**"பனிப்படு பைதல் விதலைப் பருவத்து**
**ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து**
**மாஇருந் திங்கள் மறுநிறை ஆதிரை**
**வரிநூல் அந்தணர் விழவு தொடங்க"**(1)

என்பதனால் ஆதிரை விழாவைத் தொடங்கியோர் நூல்நெறி முறைமையின்படி விழாச்சடங்குகளை அந்தணர்கள் செய்தனர். குழந்தை வரம் வேண்டி தெய்வத்திடம் மக்கள் வழிபாடு நடத்தினர்.

**"குன்றக் குறவன் கடவுட் பேணி**
**இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்"**(2)

என்பது கடவுளிடம் வேண்டி குறவன், மனைவி ஒருத்தி பெண்குழந்தை ஈன்றமையை கூறுகிறது.

**அம்பாவாடல்:**

கன்னிமகளிர் இளமையில் நோற்கும் நோன்புகளிலே ஒன்று அம்பாவாடல். இதனைத் "தைந்நீராடுதல்" என்றும் குறிப்பிடுவர். மார்கழி மாதத்து நிறைமதி நாளாகிய திருவாதிரையில் பூசகர் தெய்வத்திற்கு விழா எடுக்க, கன்னிப் பெண்கள் கூடி, "பூமியானது மழைவளம் பெற்றுக் குளிர்வதாக" என்று அம்பா ஆடலை மேற்கொள்கின்றனர். அவர்களுக்கு நோன்பின் மகத்துவத்தை அறிந்த முதுபார்ப்பனிமார் நோன்பு நோற்கும் முறையைத் தெரிவிக்கின்றனர். அவர்களின் வழிகாட்டுதலின்படி அதிகாலையில் நீராடி கன்னிமகளிர் நோன்பு நோற்கின்றனர்.

**"இழை அணி ஆயமொடு தகுநாண் தடைஇ
தைஇத் திங்கள் தண்கயம் படியும்
பெருந்தோட் குறுமகள்"(3)**

**"நறுவீ ஐம்பால் மகளிர் ஆடும்
தைஇத் தண்கயம் போல
பலர் படிந்து உண்ணும்"(4)**

எனவரும் பாடல் பகுதிகளால் கன்னி மகளிர் தம் சுற்றத்தாருடன் நீராடி மகிழ்தல் புலப்படும்.

**"வையை நினக்கு மடை வாய்த்தன்று"
(பரிபாடல்-11-8)**

என்பது மகளிர் தைந்நீராடல் நோன்பில் நதிக்குப் படைக்கும் படையலைக் குறிக்கும்.

**திருமணம்:**

இருமனமும் ஒருமனமாய் சிறந்து வாழ்தலே மணவாழ்க்கை. அம்மணவாழ்வின் ஆரம்பம் திருமணநாள். திருமணம் என்பது வாழ்க்கையில் மாற்றமுடியாத ஒரு நிகழ்ச்சி உடலால் இருவராயினும் உள்ளத்தால் ஒருவரே

**"கண்டல் வேலிய ஊர் அவன்
பெண்டு என அறிந்தன்று பெயர்த்தலோ
அரிதே!"(5)**

என்பதால் ஒருவனும், ஒருத்தியும் பிரியா வாழ்க்கைப் பெற்று உடன் வாழ்தலே சிறப்பாகக் கொள்ளப்பெற்றது.

திருமண விழாப் போன்ற ஒரு சிறப்பு நிகழ்ச்சி "வதுவை விழவு" என்றே குறிக்கப்படுகிறது. இது மறக்க முடியாத ஓர் இனிய நிகழ்ச்சி.

**"எண்ணுமுறை நிறுத்த பண்ணினுள்ளும்
புதுவது புனைந்த திறத்தினும்
வதுவை நாளினும், இனியனால் எமக்கே"(6)**

என இனிமைக்கு வதுவை நாள் எடுத்துக்காட்டப்படுகிறது. வளர்பிறை நாளில் உதய காலத்தில், தீய கோள்களின் சேர்க்கையின்றி நற்கோள்கள் பயின்றிருக்கும் காலமே திருமணத்திற்கு உரிய காலமாகக் கொள்ளப்படுகிறது. நன்னிமித்தங்கள் வாய்க்கப்பெற்று சந்திரன் உரோகிணி முதலிய சுபநட்சத்திரங்களுடன் கூடிய நாளாகவும் இருக்க வேண்டும். வேங்கை மலர்தலும் மணநாளுக்கு உரிய காலமாகிறது.

**"எந்தை வந்து உரைத்தனனாக, அன்னையும்
நல்நாள் வேங்கயையும் மலர்கமாஇனி என
என்முகம் நோக்கினாள்"(7)**

என்பதிலிருந்து இக்குறிப்பைக் காணலாம்.

**தீவலம் வருதல்:**

திருமணம் முடிந்த பின் மணமக்கள் மணமேடையில் உள்ள வேள்வித் தீயினைச் சுற்றி வரும் சடங்கு உள்ளது. கலித்தொகையில் தீவலம் வருதல் பற்றிய செய்தி காணப்படுகிறது.

**"மாதர்கொள் மான்நோக்கின் மடந்தை
தன் துணை
ஓதுடை அந்தணன் எரிவலம் செய்வான்"(8)**

தீவலம் வருதல் என்னும் நிகழ்வு இன்றளவும் தமிழர்களால் பின்பற்றப்படுகிறது.

**நிமித்தம் பார்த்தல்:**

நடக்கவிருக்கும் செயல்களின் நல்லவை, தீயவைகளைப் பற்றித் தெரிந்துக்கொள்ள பறவைகள், விலங்குகள் இவற்றின் ஒலியையும் செயல்பாட்டையும் துணையாகக் கொண்டு செயல்பட்டவர்கள் சங்ககால மக்கள். அவ்வாறு அறியப்படுகின்ற உணர்விற்கு நிமித்தம் எனப் பெயரிட்டனர். புள், நாள், ஓரை, என்ற சொற்களால் குறிக்கப்பட்டுள்ளது.

**"இடூஉ ஊங்கண் இனிய படூஉம்
நெடுஞ் சுவர்ப் பல்லியும் பாங்கில் தேற்றும்
மனைமா நெற்சி மீமிசை மாச்சினை"(9)**

இப்பாடல் வரிகள் நன்நிமித்தங்களைப் பற்றி உரைப்பனவாக உள்ளன.

**சோதிடம் பார்த்தல்:**

எந்தவொரு நல்ல நிகழ்ச்சி வீட்டில் நடைபெறுவதாக இருந்தாலும் முதலில்

சோதிடரை அழைத்து நாள் குறிக்கும் சடங்கு முறை சங்ககால மக்களிடம் இருந்துள்ளது என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

மணநாளுக்கு ஏற்ற முகூர்த்தம் குறிப்பதற்குக் கணியனை (சோதிடனை) அழைத்துக் கொண்டு சான்றோர்கள் மணமகள் இல்லத்திற்கு வருகின்றனர். இச்செய்தியை,

**"நெறி அறி செறி குறி புரிதிரிபு அறியா**
**அறவனை முந்துறீஇ**
**தகைமிகு தொகை வகை அறியும்**
**சான்றவர் இனமாக**
**வேய் புரை மென் தோட் பசலையும்,**
**அம்பலும்**
**மாயப்புணர்ச்சியும் எல்லாம் உடன் நீங்க**
**சேய் உயர் வெற்பனும் வந்தனன்**
**பூ எழில் உண்கனும் பொலிகமா,**
**இனியே"(10)**

என்று தோழி தலைவன் மணநாள் குறித்தற்கு வந்தமையைத் தலைவிக்குக் கூறுகிறாள். "நூல் நெறியாலே அறிந்த இருவரும் கூடுதற்கு ஏதுவாகிய முகூர்த்தம் வேறுபட்டுத் தப்புதலை ஒரு காலத்தும் அறியாத கணியை முன்னிட்டு, அழகு மிகுகின்ற தொகுத்துக் கூறுதலையும் வகுத்துக் கூறுதலையும் அறியும் சான்றவர் தனக்குச் சுற்றமாக உயர்ந்த மலையினை உடையவனும் வந்தான் என்பதிலிருந்து சோதிடம் பார்த்த சடங்கு முறையைப் பற்றித் தெரிந்து கொள்ள முடிந்தது.

**சிலம்பு கழி நோன்பு:**

திருமண நிகழ்ச்சிக்கு முன்பாகத் தலைவியின் காலில் அணிந்திருக்கும் சிலம்பைக் கழற்றுதற்கு ஒரு சடங்கு நிகழ்த்தப்படும். இதனைச் "சிலம்பு கழி நோன்பு" என்பர். இந்தச் சடங்கு தன் இல்லத்தில் நடக்க வேண்டும் என்று தாயார் விரும்புகின்றனர். உடன் போக்கில் செல்லும் தலைவியர்க்கு இந்நோன்பும் மணவினையும் தலைவனது இல்லத்திலேயே பெரும்பாலும் நிகழ்ந்துவிடும்.

**"அதர் உழந்து அசையின் கொல்லோ**
**ததர்வாய்ச்**
**சிலம்பு கழீஇய செல்வம்**
**பிறருழைக் கழிந்த என் ஆயிழை**
**அடியே"(11)**

என தலைவனுடன் உடன்போக்கு சென்றுவிட்ட தலைவியின் தாய்மார் பேசுவதிலிருந்து அவர்களின் விருப்பத்தை அறிந்து கொள்ள முடிகிறது. இவ்வாறு தாய்மார்கள் பேசுவதில் இருந்து இது சிறப்பாகப் போற்றப்படும் ஒரு சடங்கு போலும்.

**முடிவுரை:**

சங்க கால மக்களிடம் சடங்கு முறைகள் பற்றிய நம்பிக்கைகள் நிறையவே காணப்பட்டிருக்கிறது. எந்தவொரு செயலைத் துவங்குவதற்கு முன் தெய்வத்தை தொழுதல், பெண்களிடம் "தைந் நீராடுதல்" என்ற சடங்குமுறை, திருமணமுறைகள் போன்ற பல நடைமுறைச் செயல்பாடுகளுக்கும் சடங்கு முறைகளைப் பின்பற்றி வாழ்ந்துள்ளனர் என்பதை உணர்ந்து கொள்ள முடிந்தது.

**சான்றெண் விளக்கம்:**


1. பரிபாடல்.11: 75-78
2. ஐங்குறுநூறு.257
3. நற்றிணை.80 : 6-8
4. ஐங்குறுநூறு.84 : 3-5
5. நற்றிணை.74 : 10-11
6. அகம்.352 : 15-17
7. நற்றிணை.206 : 6-8
8. ஐங்குறுநூறு.69 : 4-5
9. நற்றிணை.246 : 1-7
10. கலித்தொகை.39 : 46-51
11. நற்றிணை.279 : 9-11


ᏇᏕ



# ஆய்த எழுத்து

பன்னாட்டுத் தமிழியல் ஆய்விதழ்

# AYIDHA EZHUTHU

AN INTERNATIONAL JOURNAL OF TAMIL STUDIES - ISSN : 2278 - 7550

UGC - பல்கலைக்கழக மானியக் குழுவின் அங்கீகாரம் பெற்றது

UGC RECOGNISED JOURNAL

UGC NO : 42330

ஏப்ரல்– 2019



visit us: www.pallavipathippakam.in

https://ayidhaezhuthu.in

# சங்க அக இலக்கியத்தில் வழிபாடும், விழாக்களும்

*பா.சாந்தி, *முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதிநேரம்), தமிழ்ப் பண்பாட்டு மையம், அழகப்பா பல்கலைக் கழகம், காரைக்குடி.*

*நெறியாளர்: **முனைவர் கா.கணநாதன்,** *உதவிப் பேராசிரியர், தமிழ்ப் பண்பாட்டு மையம், அழகப்பா பல்கலைக் கழகம், காரைக்குடி.*

**முன்னுரை**

ஓர் ஊரில் வாழ்கின்ற மக்கள் அனைவரும் வணங்கத்தக்க முறையில் நடுநாயகமாக அமைக்கப்பட்டிருப்பது கோயிலாகும். தெய்வங்கள் எழுந்தருளி இருக்கும் திருக்கோயில்கள் காட்சிக்கு இனியதாகவும், சுற்றிலும் சோலைகள் சூழவும் அமைந்திருக்கும். சங்ககால மக்களின் வழிபாட்டு முறைகளையும் அவர்கள் கொண்டாடிய விழாக்களையும் எடுத்துக் கூறுவதுவே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**வழிபாடு**

தெய்வங்கள் பல தொழப்படினும் அவரவர் வழிபடுத் தெய்வமாக ஏதேனும் ஒரு தெய்வத்தைக் கொண்டிருந்தனர். குன்றக் குரவர்கள் முருகனையும், முல்லை நில ஆயர்கள் மாயோனையும் தம் குலத்திற்குரிய தெய்வமாகக் கொண்டு போற்றிய செய்திகளை சங்கப்பாடல்களின் வழி அறியலாம். இதை,

**"அழிவிலர் முயலும் ஆர்வ மாக்கள்**
**வழிபடு தெய்வம் கண் கண்டா அங்கு"(1)**
**"வழிபட்ட தெய்வம்தான் வலிஎனச் சார்ந்தார் கண்**
**கழியும் நோய் கைம்மிக அணங்கு ஆகியது போல"**

என வழிப்படு தெய்வம் சிறப்பாக குறிப்பிடப்படுகிறது.

சோலைகள் சூழ்ந்தே பெரும்பாலான கோயில்கள் அமைந்திருக்கும். சோலையில் மலர்ந்த பூக்களைக் கொண்டு தெய்வத்திற்கு அலங்காரம் செய்தனர் பக்தர்கள் கொண்டு வந்து தெய்வத்திற்கு இட்ட பூக்கள் பல வண்ணங்களுடன் மிளிரும். இதை

**"மராஅ மலரொடு விராஅய், பராஅம்**
**அணங்குடை நகரின் மணந்த பூவின்**
**நன்றே கானம்................."(2)**

தெய்வத்தன்மையுடன் கோயிலில் காணும் மலர்களை ஆசிரியர் உவமித்துள்ளார்.

**வழிபடும் முறை**

வழிபாட்டிற்கு பல வகையான சாந்து, புகை, விளக்கு, மலர், தெய்வத்திற்கு படைப்பதற்குரிய பால்மடை, பலிச்சோறு முதலியன பலவும் கொண்டு செல்வதை மரபாகக்

கொண்டிருந்தனா் என்பதை நற்றிணையிலும், முல்லைப்பாட்டிலும், பரிபாடலிலும் செய்திகள் காணப்படுகின்றன. இதை,

**"வேறுபாடு சாந்தமும், வீறுபடு புகையும்**

**ஆறுசெல் வளியின் அவியா விளக்கமும்**

**நாறு கமழ் வீயும், கூறுஇசை முழவமும்**

**மணியும், கயிறும், மயிலும், குடாரியும்**

**பிணிமுகம் உளப்படப் பிறவும் ஏந்தி**

**அருவரைச் சேராத் தொழுநா்"** (3)

இதன் மூலம் மக்கள் இறைவனை வணங்கி வழிபடுவதற்கு பயன்படுத்திய பொருள்களை நாம் உணர முடிகிறது. மேலும் பல்வகை மலா்களாலும் மாலைக் கட்டி தெய்வததிற்கு, அணிதலும், வாசனை மலா்கள் பலவற்றையும் சோ்த்து செய்த மலா் மாலைகளோடு மலா்களின் இடைஇடையே பச்சிலைகளோடு சோ்த்துக் கட்டிய மாலைகளையும் சாா்த்தி மகிழ்ந்ததை

**"நறுவிரை தெளித்த நாறுஇணா் மாலை"**(4)

என்பதின் மூலம் உணரலாம்.

வழிபடும் பொழுது நடுகல்லினை நீராட்டி தூப தீபங்களுடன் பலி செய்து வணங்குதல் தெய்வ திரு உருவங்களுக்கு நீராட்டுச் செய்தல் நீராட்டி மலா் அணிந்து விளக்கேற்றி தூபம் புகைத்து உயா்ந்த பொருட்களைப் பலியிட்டு வணங்கினா். இவை மட்டுமின்றி வெறியாடும் கலங்களில் வழிபட்டத் தெய்வங்களுக்கு குருதிப் பலியும் செய்கின்றனா். அரிசியைப் பலியாகச் சிதறுதல், ஆட்டு மறியை அறுத்தல், மறியின் குருதிகளை சோற்றுடன் கலந்து திரளையாகச் செய்து பலித்தூவுதல், கள் வைத்தல் முதலியன தெய்வத்திற்கு இட்டு வழிபடும் முறையை,

**"மணிப்புறாத் துறந்த மரம்சோா் மாடத்து**

**எழுது அணி கடவுள் போகலின் புல்லென்று**

**ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்திணைப்"**(5)

உணர முடிகிறது.

வழிபாட்டுக் களத்தில் பல இனிய இசைக்கருவிகளை இசைத்தமையையும்,

**"பறைபட பணிலம் ஆா்ப்ப இறை கொள்பு**

**தொல் மூதாலத்துப் பொதியில் தோன்றிய"** (6)

**"இன்இயம் கறங்கப் பாடி**

**பல்மலா் சிதறிப் பரவுறு பலிக்கே"**(7)

மக்கள் பாடல் பாடி தெய்வத்தைப் போற்றியமையையும் நாம் உணரமுடிகிறது.

**விழாக்கள்**

விழாவானது ஆடவா், பெண்டிா், முதியவா், இளையோா் அனைவரும் கூடி நின்று கண்டுகளிக்கும் வண்ணம் தெய்வத்திற்குரிய சிறப்பு விழாவாக தெருக்களில் கொண்டாடப்பட்டன. இது இக்காலத்தில் ஆண்டுக்கு ஓரிரு முறை நடைபெறும் வீதிவலம் வரும் பெருவிழாக்களை ஒத்திருக்கும்.

"ஆல்அமர் செல்வன் அணிசால் மகன்விழாக்

கால்கோள் என்று ஊக்கி, கதுமென நோக்கி"(8)

என்று கூறப்படுதலின் விழாவின் தொடக்கம் சிறப்பாக அமைந்ததை நாம் உணர முடிகிறது.

விழாவானது கொடியேற்றத்துடன் தொடங்கும் மேலும் விழாக்கள் சந்திரன் நிலவு ஒளியினை வானில் பரப்பி வளரும் வளர்பிறைக் காலத்தில் கொண்டாடப்படுவதை

"நிலவே, நீல்நிற விசும்பில் பல் கதிர் பரப்பி

பால்மலி கடலின் பரந்து பட்டன்றே

ஊரே ஒலி வரும் சும்மையொடு மலிபு தொகுபு ஈண்டி

கலி கெழு மறுகின், விழவு அயரும்மே"(9)

என்று தலைவி பேசுவதன் மூலம் அறியலாம்.

தெருக்களில் நிலவு காணப்படும் இரவுப் பொழுதில் மக்கள் ஆராவாரத்துடன் தூக்கத்தை விடுத்து விழா நிகழ்ச்சிகளில் ஈடுபடுகின்றனர். ஊரே கண்ணுறங்காது விழாவினைக் காண்பதை

"இரும்பழி மகாஅர்இவ் அழுங்கல் மூதூர்

விழவு இன்று ஆயினும் துஞ்சாது ஆகும்

மல்லல் ஆவண மறுகு உடன் மடியின்"(10)

என்பதால் விழாக்காலத்தில் மக்கள் தூக்கத்தை விடுத்து ஈடுபட்டமையை அறிய முடியும். ஊரில் திருவிழா நடைபெறப் போகும் செய்தியினை அறிந்த உடன் ஊர் பொது மன்றங்களில் நுழையும் தெய்வங்களுக்கு கள் முதலியவற்றை பலியிடுவதும் குயவனுக்கு உரிய கடமையாக இருந்தது. விழா நடைபெறும் ஊர்கள் நன்கு அலங்கரிக்கப்பட்டு விளக்குகள் ஏற்றப்பட்டு ஒளிமயமாக காட்சித் தரும்.

திருவிழாக்களில் ஆடல், பாடல்களும் வீரர்கள் குமுமி விழாவில் விளையாட்டுப் போர் நிகழ்த்துதலையும், கூத்தர், கூத்தியர் ஆடி கூத்து நிகழ்த்துதலும் உண்டு. வேங்கடம், உறையூர், மதுரை, திருப்பரங்குன்றம் ஆகிய இடங்களில் நடந்த விழாக்களைப் புலவர்கள் சிறப்பித்துப் பாடியுள்ளனர்.

மாயோனுக்கு ஓண நாளிலும், முக்கண்ணனுக்கு ஆதிரை நாளிலும் விழா எடுக்கப்பட்டன. அதாவது ஆவணித் திருவோணமும், மார்கழித் திருவாதிரையும் கொண்டாடப்பட்டது.

கார்த்திகைத் தீபவிழா ஊர்களில் சிறப்பாக போற்றப்பட்ட திருவிழாவாகும். மதி நிறைந்து அறு மீனாகிய கார்த்திகையுடன் சேரும் கார்த்திகை நிறைமதி நாளில் எடுக்கப்படும் இவ்விழா இக்காலத்தில் குழு தொழில் முடிந்து மழை பெய்தலும் பொழிந்து நீங்குகிறது. தெருக்களில் வரிசையாக விளக்குகளை வைத்து மாலைகளைத் தொங்க விட்டு ஊரில் உள்ளோர் அனைவரும் ஒன்று சேர்ந்து இவ்விழாவைக் கொண்டாடுவர்.

இவை மட்டுமின்றி மக்கள் புதுப்புனல் வருங்கால் அதில் ஆடி மகிழ்தலும் விழாவாகவே கொண்டாடப்படுகிறது. எருதுகளை ஓடவிட்டு அடக்கும் ஏறுதழுவுதல் நிகழ்ச்சியும் வில் பயிற்சியாளராகிய இளைய வீரர் தம் பயிற்சித் திறமையை அரங்கேற்றி காட்டும் நிகழ்ச்சி பூந்தொடை விழா என்று பேசப்படுகிறது. இவ்வாறு விழாக்கள் மகிழ்ச்சியாக கொண்டாடப்படுகிறது.

**முடிவுரை**

இவ்வாறு மக்களின் அன்றாட வாழ்க்கையோடு வழிபாட்டு முறைகளும் திருவிழாக்களும் இணைந்து மக்கள் மகிழ்ந்தவுடன் வாழ்ந்தமையை சங்க இலக்கியப் பாடல்களின் வழி அறிய முடிகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. நற்.9 (1-2)
2. கலி.132 (21-22)
3. அகம்.99 (8-10)
4. பரி.8 (97-102)
5. அகம்.166(5)
6. அகம்.167 (14-16)
7. குறு.15 (1-2)
8. நற். 322 (11-12)
9. கலி.83 (14-15)
10. நற்.348 (1-4)
11. அகம்.122(1-2)

# எட்டுத்தொகை அகஇலக்கியங்களில் பண்பாட்டுச் சிந்தனைகள்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி)
பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
**பா.சாந்தி**
(பதிவு எண்: 1422)

நெறியாளர்

**முனைவர். கா.கணநாதன்**






**தமிழ்ப்பண்பாட்டு மையம்**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் A+(CGPA : 3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003.

தமிழ்நாடு - இந்தியா

ஆகஸ்ட் - 2019

# முடிவுரை

தனிமனிதக் கூட்டமைப்பின் முதல்படியினது வளர்ச்சி நிலையே குடும்பமாகும். பழந்தமிழர்களின் வாழ்க்கை முறையானது செம்மைப்படுத்தப்பட்டு, நெறிப்படுத்தப்பட்ட நிலையில் ஆண், பெண் காதல் கொள்வதும் அன்பு நிறைந்த காதல் வாழ்க்கையும் துயரம் நிறைந்த காதல் வாழக்கையும் தோழி தலைவனை விரைவில் தலைவியைத் திருமணம் செய்துகொள்ளுமாறு களவு வாழ்க்கையை விட்டு நீங்கி, கற்பு வாழ்க்கைக்கு ஈட்டுச் செல்லும் பண்பாடும் குறிப்பிடப்பட்டுள்ளது.

களவு வாழக்கைக்குப் பின் கற்பு வாழ்க்கையில் திருமண வகைகள், முறைகள், மக்கட் பேற்றின் தன்மை, சிறப்புகள் பண்பாட்டு அடிப்படையில் சுட்டப்பெற்றது. பெண்கள் கணவன் மற்றும் குழந்கைளிடம் மட்டும் அல்லாமல் பிறருக்கு உதவும் ஈகைக்குணம் கொண்டவர்களாகவும் விருந்தினர்களைப் போற்றும் தலையாய பண்பினைப் பெற்றவர்களாகவும் இருந்த தன்மை போன்றவற்றின் அடிப்படையில் சங்க இலக்கியங்களில் குடும்பச் சூழலில் பண்பாட்டுச் சிந்தனைகள் என்பவை ஆராயப்பட்டுள்ளது.

சமுதாயம் என்பது அனைத்து மக்களும் ஒன்று சேர்ந்து ஒழுக்க நெறிகளின் அடிப்படையில் வாழும் முறையாகும். மனிதன் தனித்தனியாக வாழ்ந்த போது அவர்களிடம் எந்த விதமான பண்புகளும் சிறப்பானதாக அமைந்திருக்க வாய்ப்பில்லை. மனிதன் என்று சேர்ந்து வாழ முற்பட்டானோ அன்றே உயர் பண்புகளும் இலட்சியங்களும் தோன்ற ஆரம்பித்தன.

பழங்காலத்தில் வாழ்ந்த நம் முன்னோர்கள் அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் சில ஒழுங்கு முறைகளைக் கடைப்பிடித்தனர். அவை பின்னாளில் வழக்கமாக மாறிவிட்டது. வீட்டில் விளக்கேற்றுதல் ஒரு மங்களகரமான நிகழ்வு.

காக்கைக்கு உணவிடும் பழக்கம், இறைவனுக்காக விரதம் இருப்பது மற்றும் கடவுள் நம்பிக்கை மிகுந்தவர்களாகவும் இருந்துள்ளனர்.

நில அடிப்படையில் ஒவ்வொரு நில மக்களும், ஒவ்வொரு வகையான கடவுளை வழிபட்டுள்ளனர். சமயம் சார்ந்த தெய்வங்கள் இல்லையென்றாலும் தங்கள் நிலத்திற்கான கடவுளை வழிபட்ட பண்பாடு புலனாகிறது. தெய்வமானது மரங்களின் மீது உறைந்திருப்பதாகவும் நம்பியதால் மரங்களையும் தெய்வங்களாக வழிபட்டதை உணரமுடிகிறது.

கனவுகளில் நம்பிக்கை வைத்திருந்தனர். அனைத்து மக்களும் ஒன்று கூடி மகிழ்ந்து திருவிழாக்களையும் பண்டிகைகளையும் கொண்டாடி உள்ளனர். இதன் மூலம் தமிழர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே விழாக்கள் கொண்டாடியதோடு பண்பாட்டின் அடையாளமாகவும் விட்டுச் சென்றுள்ளனர்.

பழங்காலத் தமிழர்கள் ஓய்வுநேரத்தில் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என தனித்தனியாகப் பல வகையான விளையாட்டுக்களை விளையாடி மகிழ்ந்துள்ளனர்.

பழந்தமிழர்கள் பொருட்களை அளவிட அளவை முறைகளைப் பயன்படுத்தியமையும் எண்களைக் குறிக்க வெள்ளம், ஆம்பல், தாமரை போன்ற சொற்களையும், கலம், சாடி, தூதை, பானை, நாழி, மண்டை, வட்டி, அகல், உழக்கு, கழஞ்சு, பலம், மா போன்ற சொற்களை அளவீடுகளாகப் பயன்படுத்தியமையும் அறியமுடிகிறது.

பழந்தமிழர்கள் ஒவ்வொருவரும் தம் தகுதிக்கேற்ப பல தொழில்கள் செய்திருப்பதை இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. திணை அடிப்படையில் தொழில் நிலைகளைப் பார்க்கும் பொழுது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்,

பாலை என்று தனித்தனி நிலப்பிரிவாகப் பிரிக்கப்பட்டு தொழில் நிலைகள் நடைபெற்றுள்ளது.

குறிஞ்சி நிலத்தில் திணை விதைத்து, திணைப்புனம் காவல் காத்தும் தேனெடுத்தல், வேட்டையாடுதல் போன்ற தொழில்களையும், முல்லை நிலத்தில் ஆநிரைகளை மேய்த்தும் அதிலிருந்து பெறப்படும் பொருள்களை விற்று தொழில் செய்தும் வந்தனர். மருத நிலத்தில் உழவுத் தொழிலையே பிரதான தொழிலாக மேற்கொண்டனர். நெல் மிகவும் மதிப்புடையதாக இருந்தது. நில வளமும், நீர்வளமும் உயர்ந்தால் நாட்டு வளம் உயரும் என்பதை அறிந்த பண்டைத் தமிழர்கள் நீர்நிலைகளை அமைத்து நீரினைச் சேகரித்தனர். பயிர்களைத் திண்பதற்காக வரும் பறவைகளை விரட்டுவதற்காக இசைக்கருவிகளை இசைத்து விரட்டியுள்ளனர். இதன் மூலம் பண்டைத் தமிழர்கள் பிற உயிர்களின் மேல் கொண்டுள்ள அன்பினையும் உழவுத்தொழிலைப் பாதுகாத்தலையும் அவர்களின் பண்பாட்டின் மூலம் புலனாகிறது.

நெய்தல் நிலத்தில் பரதவர்கள் மீன்பிடித்தல், மீன் விற்றலையுமே தங்கள் தொழிலாகக் கொண்டிருந்தனர். விற்ற மீன்கள் போக மீதமிருந்தவற்றை வெயிலில் காய வைத்து அதனைக் கருவாடாக செய்து விற்றவை மீதமிருந்தவற்றை தங்களின் உணவில் பயன்படுத்திக் கொண்டனர். கடல் நீரைக் கொண்டு உப்பு விளைவித்தலையும் தங்களுடைய தொழிலாகக் கொண்டிருந்தனர். நெய்தல் நில மக்கள் மீன்களை விற்றும் உப்பு விளைவித்தும் தங்கள் வாழ்க்கையை மேம்படுத்திக் கொண்ட பண்பாட்டை அறிந்துக்கொள்ள முடிகின்றது.

பாலை நிலத்தில் உள்ள மக்கள் அவ்வழியாகச் செல்வோரை அச்சுறுத்தியும் கொன்றும் அவர்கள் கொண்டு செல்லும் பொருட்களைக் கவர்ந்தும் கொலைத் தொழில் செய்தும் தங்களுடைய கருவிகளைத் தீட்டுவதையும் தங்கள் தொழிலாகக்

கொள்வர். குறிஞ்சி நிலத்தில் பெறப்பட்ட தேனை முல்லை நில மக்களும் நெய்தல் நிலத்தில் விளைந்த உப்பையும் மீனையும் மருதநிலத்தில் விற்று அங்கு விளைந்த நெல்லை பண்டமாற்றாகப் பெற்றதிலிருந்து பண்டமாற்று முறையானது சங்க கால மக்களின் பண்பாட்டில் இருந்துள்ளதை அறியமுடிகிறது. உள்நாட்டு வாணிகம் மட்டுமின்றி வெளிநாட்டு வாணிகத்தையும் செய்து வந்தனர். பழங்கால மக்கள் நில வாரியாகத் தொழில்கள் செய்தாலும் வேறு சில தொழில்களையும் செய்து வந்தனர். அவர்கள் செய்த தொழில்களின் அடிப்படையில் தச்சர், கொல்லர், குயவர், சலவைத் தொழிலாளர், பாய்பின்னுபவர், நெசவுத்தொழிலாளர் என்று தாங்கள் செய்த தொழிலைச் செம்மையாகச் செய்து தங்கள் குடும்ப பண்பாட்டினை பேணி பாதுகாத்தனர்.

மனிதனுக்கு எப்பொழுது ரசிக்கும் தன்மை ஏற்பட்டதோ அன்றே கலை உணர்ச்சியும் தோன்ற ஆரம்பித்துவிட்டது. ஆயகலைகள் அறுபத்து நான்கினுள் இசை, நடனம், ஓவியம், சிற்பம், கட்டடக் கலை என்று பல கலைகளுக்கு வடிவம் கொடுத்தவர்கள் சங்க கால மக்கள். இசைக்கலையானது என்று மனிதன் தன் நாவில் இருந்து ஒலி எழுப்பினானோ அன்றே தோன்றிவிட்டது. கலைத்திறமைகளை வெளிப்படுத்த மன்றங்கள் இருந்தன. கூத்துக்கலையும் சங்ககால மக்களின் வாழ்வில் முக்கிய இடம் பெற்றிருந்தது.

மனதிற்கு அமைதியைத் தரும் இசையை இசைப்பதற்கென்றே யாழ், பறை, முழவு, முரசு, தட்டை, பதலை, ஆகுளி, குழல், சங்கு, பண் போன்ற இசைக்கருவிகளை பயன்படுத்தினர். பறையின் இசைக்கு மயங்காதவர்கள் யாருமில்லை என்பதற்கேற்ப இசைவிழாக்கள், ஆடல், பாடல் நிகழ்ச்சிகளில் பறைக்கருவி முக்கிய இடம் பெற்றுள்ளது. இசைக்கலை சிறப்புடன் அமைவதற்கு பாணன், பாடினி, அகவலர், கிணைஞர், பொருநர், கோடியர், வயிரியர் போன்ற இசைக்கலைஞர்களும் ஆர்வத்தோடு ஈடுபட்டிருந்தனர்.

ஒரு நாடடினை அடையாளப்படுத்துவது அங்குள்ள கட்டடங்களின் அமைப்புகளே. அக்கட்டடங்களை அழகுப்படுத்துவது கட்டடக்கலைஞர்களின் சிறப்புமிக்க ஆற்றல் தான். சிற்பம் மற்றும் ஓவியக்கலைகளிலும் சிறந்து விளங்கியிருக்கின்றனர். ஒவ்வொரு கலைகளிலும் தமிழர்கள் சிறந்து விளங்கியிருக்கின்றனர் என்பதை அவர்களின் கலைகள் வழிப் பண்பாட்டின் மூலம் வெளிப்படுத்தி இருக்கின்றனர்.

விளையாட்டினையும் ஒரு கலையாகப் பார்த்து அக்கலையிலும் தேர்ச்சிப் பெற்று விளங்கினர். கல்வியைக் கூட ஒரு கலையாக பார்த்ததில் இருந்து சங்க காலத்தில் கல்வி கற்ற புலவர்கள் வாழ்ந்திருக்கின்றனர் என்பதை அறிய முடிகிறது. இயற்கை முறையில் அமைந்த மருத்துவ முறையையே பன்படுத்தி வந்தனர். நாம் உண்ணும் உணவைச் சமைப்பதே ஒரு கலை. அக்கலையின் மூலம் தாமும் உண்டு விருந்தினர்களையும் மகிழ்வித்துள்ளனர். உடை உடுத்துவது, அணிகலன்கள் அணிந்து தங்களை ஒப்பனை செய்து கொள்வது என்று ஒவ்வொரு கலைகளிலும் தனித்திறனை வெளிப்படுத்தி தமிழனுக்கு நிகர் தமிழன் தான் என்பதை பறைசாற்றுவதாகவே சங்க கால மக்களின் பாண்பாடானது திகழ்ந்துள்ளது.

மேலாய்வுக் களங்கள்: செம்மொழி இலக்கியங்கள், இலக்கணங்கள் என அனைத்திலும் காணலாகும் பண்பாட்டுக் கூறுகளை தனித்தனியாக ஆராயலாம்.